# தமிழ்ப்பாட நூல்

## ஒன்பதாம் வகுப்பு




தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்
சென்னை

திருத்திய பதிப்பு—1977
" பதிப்பு—1979

(பள்ளிக் கல்வி இயக்குநர், மாநிலக் கல்வி ஆராய்ச்சி மற்றும் பயிற்சி நிறுவன இயக்குநர் ஆகியோர் அமைத்த வல்லுநர் குழுக்களால் திருத்தி அமைக்கப்பட்டது)

விலை : ரூ. 2-30

இந்திய அரசு சலுகை விலையில் வழங்கிய 60 ஜி. எஸ். எம். தாளில் இந்நூல் அச்சிடப்பட்டுள்ளது.

அச்சிட்டோர் :
குமரன் ஆப்செட் பிரிண்டர்ஸ், சென்னை-600 001.

## தேசிய கீதம்

ஜன கண மன அதிநாயக ஜய ஹே
 பாரத பாக்ய விதாதா.
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
 திராவிட உத்கல பங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
 உச்சல ஜலதி தரங்கா
தவ சுப நாமே ஜாகே
 தவ சுப ஆசிஸ மாகே
 காஹே தவ ஜய காதா.
ஜன கண மங்கள தாயக ஜய ஹே
 பாரத பாக்ய விதாதா
ஜய ஹே ஜய ஹே ஜய ஹே
 ஜய ஜய ஜய ஜய ஹே!

—மகாகவி இரவீந்திரநாத தாகூர்

## தேசிய கீதம்—பொருள்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான் மக்கள் எல்லா ருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிறாய்.

நின் திருநாமம் பஞ்சாபையும் ஸிந்துவையும் குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும் திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும் உள்ளக்கிளர்ச்சி அடையச் செய்கிறது.

அது விந்திய, ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது;
யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது;
இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.

அவை நின் ஆசியை வேண்டுகின்றன; நின் புகழைப் பாடுகின்றன.

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு
வெற்றி! வெற்றி! வெற்றி!

## தேசிய ஒருமைப்பாட்டு உறுதிமொழி

'நாட்டின் உரிமை வாழ்வையும் ஒருமைப்பாட்டையும் பேணிக் காத்து வலுப்படுத்தச் செயற்படுவேன் என்று உளமார நான் உறுதி கூறுகிறேன்.

'ஒருபோதும் வன்முறையை நாடேன் என்றும், சமயம், மொழி, வட்டாரம் முதலியவை காரணமாக எழும் வேறுபாடுகளுக்கும் பூசல்களுக்கும் ஏனைய அரசியல்-பொருளாதாரக் குறைபாடு களுக்கும் அமைதி நெறியிலும் அரசியல் அமைப்பின் வழியிலும் நின்று தீர்வு காண்பேன் என்றும் நான் மேலும் உறுதியளிக் கிறேன்.'

## தமிழ்த்தாய் வாழ்த்து

நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரத கண்டமிதில்
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே
தெக்கணமும் அதிற்சிறந்த திரவிடநல் திருநாடும்;
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே!
உன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே.

—'மனோன்மணீயம்' பெ. சுந்தரம் பிள்ளை

# பொருளடக்கம்

## செய்யுட்பகுதி

## மனப்பாடப் பகுதிகள்

| | | அடிகள் |
|---|---|---|
| 1. | வாழ்த்து .. | 4 |
| 2. | திருக்குறள் (3, 5, 6, 11, 21, 23, 28, 35, 38, 46) .. | 20 |
| 3. | மணிமேகலை (45–54) .. | 10 |
| 4. | கம்பராமாயணம் (17, 18) .. | 8 |
| 5. | பெரிய புராணம் (1, 2) .. | 8 |
| 6. | திருக்குற்றாலக்குறவஞ்சி (2) .. | 8 |
| 7. | இரட்சணிய யாத்திரிகம் (7, 8) .. | 8 |
| 8. | மனோன்மணீயம் (28–37) .. | 10 |
| 9. | கீதாஞ்சலி (2, 3) .. | 8 |
| 10. | பாண்டியன் பரிசு (7) .. | 8 |
| 11. | இரட்டுற மொழிதல் (1) .. | 4 |
| 12. | முக்கூடற்பள்ளு (1) .. | 8 |
| 13. | தமிழ்க்குமரி (1) .. | 8 |
| 14. | திருவருட்பா (1) .. | 8 |
| | | 120 |

## உரைநடைப்பகுதி

# செய்யுட்பகுதி

# I

## வாழ்த்து

உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவர்; அன்னவர்க் கேசர ணுங்களே.

—கம்ப நாடர்

### குறிப்புரை

'வாழ்த்து' என்பது கடவுள் வாழ்த்து, நாட்டு வாழ்த்து, மொழி வாழ்த்து, மழை வாழ்த்து எனப் பல வகைப்படும். அவற்றுள் இச்செய்யுள் கடவுள் வாழ்த்து வகையைச் சார்ந்த தாகும். கடவுளின் இறைமைத் தன்மைகளைப் பொது வகையாக எடுத்துரைப்பதால், இதனை இறைவனைப்பற்றிக் கூறும் பொது வாழ்த்து எனலாம்.

### கம்பரும் இராமாயணமும்

கம்ப நாடர் இயற்றிய இலக்கியக் கற்பனை வளம் செறிந்த காவியம் இராமாயணம். வடமொழியில் 'ஆதி கவி' எனப் போற் றப்படும் வான்மீகி முனிவர் இயற்றிய இராமாயண நூலைத் தழுவி, கம்பர் இக்காவியத்தை இயற்றியருளினர். இந்நூலுக்கு இராமாவதாரம் என்றே அவர் பெயரிட்டார். இஃது இராமனது தெய்விகப் பெருமையை எடுத்துரைக்கும் காவியம்.

கம்ப நாடர், சோழவள நாட்டிலே திருவழுந்தூரில் வாழ்ந்த வர். இவர்தம் தந்தையார் பெயர் 'ஆதித்தர் என்பது. இவரை உவச்சர் குலத்தினர் என்பர். 'கல்வியிற் பெரியவர் கம்பர்,' 'கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்' என்னும் பழமொழி கள், கம்ப நாடரின் பெரும்புலமையை விளக்கும்.

'கல்வி சிறந்த தமிழ்நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு'

என்று பெருங்கவிஞர் சி. சுப்பிரமணிய பாரதியார் புகழ்ந்து பாடி யுள்ளார். ஏரெழுபது, திருக்கை வழக்கம், சடகோபரந்தாதி

என்பனவும் இவர் இயற்றியவை என்பர். இவரது பெயரால் சில தனிப்பாடல்களும் வழங்கிவருகின்றன. இவரைப் புரந்தவர் திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்பவள்ளல் என்பவர். இவர் காலம், கி.பி. 9ஆம் நூற்றுண்டு எனச் சிலரும், கி.பி. 12ஆம் நூற்றுண்டு என வேறு சிலரும் கூறுவர்.

### அருஞ்சொற்பொருள்

யாவையும் - எல்லாவற்றையும், உளவாக்கல் - படைத்தல், அலகு இலா - அளவில்லாத, சரண் - அடைக்கலம்.

'எல்லா உலகங்களையும் படைத்துக் காத்து அழித்தலாகிய முத்தொழில்களையும் புரியும் முதல்வரே தலைவர்; அவருக்கு நாங்கள் அடைக்கலப் பொருளாய் உள்ளோம். எனவே, அவர் எங்களைக் காப்பாற்றுவாராக!' என்பது இச்செய்யுளால் விளங்கும்.

### வினாக்கள்

1. கம்பரைப்பற்றி வழங்கும் வரலாறு யாது?
2. இறைவர் தலைவராய் விளங்குவது எதனுல்?

# II

# அறவுரை

## 1. திருக்குறள்

### இல்வாழ்க்கை

*அன்பும் அறனும் உடைத்தாயின், இல்வாழ்க்கை*
*பண்பும் பயனும் அது.* 1

### மக்கட்பேறு

*மகன்தந்தைக் காற்றும் உதவி, 'இவன்தந்தை*
*என்னோற்றான் கொல்!' எனுஞ் சொல்.* 2

### அன்புடைமை

*அன்பீனும் ஆர்வம் உடைமை; அதுவீனும்*
*நண்பென்னும் நாடாச் சிறப்பு.* 3

### விருந்தோம்பல்

*இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி*
*வேளாண்மை செய்தற் பொருட்டு.* 4

### இனியவை கூறல்

*பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்*
*கணி;அல்ல மற்றுப் பிற.* 5

### செய்ந்நன்றியறிதல்

*நன்றி மறப்பது நன்றன்று; நன்றல்ல*
*தன்றே மறப்பது நன்று.* 6

### நடுவு நிலைமை

*சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்*
*கோடாமை சான்றோர்க் கணி.* 7

### அடக்கமுடைமை

*தீயினாற் சுட்டபுண் உள்ளாறும்; ஆறாதே*
*நாவினாற் சுட்ட வடு.* 8

ஒழுக்கமுடைமை

நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம்; தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும். 9

பொறையுடைமை

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை. 10

புறங்கூறாமை

ஏதிலார் குற்றம்போல் தங்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு? 11

பயனில சொல்லாமை

சொல்லுக, சொல்லிற் பயனுடைய; சொல்லற்க,
சொல்லிற் பயனிலாச் சொல். 12

தீவினையச்சம்

மறந்தும் பிறன்கேடு சூழற்க; சூழின்,
அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு. 13

ஒப்பரவு அறிதல்

தாளாற்றித் தந்த பொருளெல்லாம், தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு. 14

ஈகை

ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல், தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்! 15

புகழ்

வசையொழிய வாழ்வாரே வாழ்வார்; இசையொழிய
வாழ்வாரே வாழா தவர். 16

அருளுடைமை

வலியார்முன் தன்னை நினைக்க, தான் தன்னின்
மெலியார்மேற் செல்லும் இடத்து. 17

வாய்மை

வாய்மை எனப்படுவ தியாதெனின், யாதொன்றும்
தீமை இலாத சொலல். 18

வெகுளாமை

*தன்னைத்தான் காக்கின் சினங்காக்க; காவாக்கால்,*
*தன்னையே கொல்லும் சினம்.* 19

இன்னா செய்யாமை

*அறிவினான் ஆகுவ துண்டோ, பிறிதினோய்*
*தந்நோய்போல் போற்றாக் கடை?* 20

கல்வி

*எண்ணென்ப, ஏனை எழுத்தென்ப, இவ்விரண்டும்*
*கண்ணென்ப வாழும் உயிர்க்கு.* 21

கல்லாமை

*அரங்கின்றி வட்டாடி யற்றே, நிரம்பிய*
*நூலின்றிக் கோட்டி கொளல்.* 22

கேள்வி

*எனைத்தானும் நல்லவை கேட்க; அனைத்தானும்*
*ஆன்ற பெருமை தரும்.* 23

அறிவுடைமை

*அறிவுடையார் ஆவ தறிவார்; அறிவிலார்,*
*அஃதறி கல்லா தவர்.* 24

குற்றங்கடிதல்

*தினைத்துணையாம் குற்றம் வரினும், பனைத்துணையாக்*
*கொள்வர் பழிநாணு வார்.* 25

பெரியாரைத் துணைக்கோடல்

*தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்*
*வன்மையுள் எல்லாம் தலை.* 26

சிற்றினஞ்சேராமை

*நல்லினத்தி னூங்கும் துணையில்லை; தீயினத்தின்*
*அல்லற் படுப்பதூஉம் இல்.* 27

தெரிந்து செயல் வகை

*எண்ணித் துணிக கருமம்; 'துணிந்தபின்*
*எண்ணுவம்,' என்ப திழுக்கு.* 28

### வலியறிதல்

வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல். 29

### காலம் அறிதல்

கொக்கொக்க, கூம்பும் பருவத்து; மற்றதன்
குத்தொக்க, சீர்த்த இடத்து. 30

### இடனறிதல்

நெடும்புனலுள் வெல்லும் முதலை; அடும்,புனலின்
நீங்கின் அதனைப் பிற. 31

### தெரிந்து தெளிதல்

பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல். 32

### தெரிந்து வினையாடல்

இதனை இதனான் இவன்முடிக்கும்' என்றாய்ந்
ததனை அவன்கண் விடல். 33

### ஊக்கம் உடைமை

வெள்ளத் தனைய மலர்நீட்டம்; மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு. 34

### ஆள்வினை உடைமை

முயற்சி திருவினை ஆக்கும்; முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும். 35

### சொல் வன்மை

கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல். 36

### வினைத்தூய்மை

அழக்கொண்ட எல்லாம் அழப்போம்; இழப்பினும்,
பிற்பயக்கும் நற்பா லவை. 37

### வினைத்திட்பம்

சொல்லுதல் யார்க்கும் எளிய; அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல். 38

### வினை செயல் வகை

பொருள்கருவி காலம் வினைஇடனொ டைந்தும்
இருள்தீர எண்ணிச் செயல். 39

### குறிப்பறிதல்

அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம். 40

### அவை அஞ்சாமை

கற்றாருள் கற்றார் எனப்படுவர், கற்றார்முன்
கற்ற செலச்சொல்லு வார். 41

### நட்பு

நிறைநீர, நீரவர் கேண்மை; பிறைமதிப்
பின்னீர, பேதையார் நட்பு. 42

### பெரியாரைப் பிழையாமை

குன்றன்னார் குன்ற மதிப்பின், குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து. 43

### மருந்து

மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி உணின். 44

### குடிமை

ஒழுக்கமும் வாய்மையும் நாணுமிம் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார். 45

### பெருமை

பணியுமாம் என்றும் பெருமை; சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து. 46

### சான்றாண்மை

அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு
ஐந்துசால் பூன்றிய தூண். 47

### பண்புடைமை

பண்புடையார்ப் பட்டுண் டுலகம்; அதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன். 48

### நாணுடைமை

அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்கு? அஃதின்றேல்,
பிணியன்றோ பீடு நடை? 49

### உழவு

'இலம்'என்று அசைஇ இருப்பாரைக் காணின்,
நிலம்என்னும் நல்லாள் நகும். 50

—திருவள்ளுவர்

## 2. சிறுபஞ்சமூலம்

### கற்றார் கல்லார் பெறுவன

பொன்பெறும் கற்றான்; பொருள்பெறும் நற்கவி;
என்பெறும் வாதி? இசைபெறும்;—முன்பெறக்
கல்லார்,கற் றாரினத்த ரல்லார் பெறுபவே
நல்லா ரினத்து நகை. 1

### இயற்கையறிவுடையார் திறம்

பூவாது காய்க்கும் மரமுள; நன்றறிவார்
மூவாது மூத்தவர் நூல்வல்லார்;—தாவா
விதையாமை நாறுவ வித்துள; மேதைக்
குரையாமைச் செல்லும் உணர்வு. 2

### நன்மை பயப்பன

பிழைத்தல் பொறுத்தல் பெருமை; சிறுமை
இழைத்ததீங் கெண்ணி யிருத்தல்;—இழைத்த
பகைகெட வாழ்வதும் பல்பொருளார் நல்லார்
நகைகெட வாழ்வதும் நன்று. 3

### வனப்புகள்

கண்வனப்புக் கண்ணோட்டம்; கால்வனப்புச் செல்லாமை;
எண்வனப் பித்துணையாம் என்றுரைத்தல்;—பண்வனப்புக்
கேட்டார்நன் றென்றல்; கிளர்வேந்தன் தன்னாடு
வாட்டான்நன் றென்றல் வனப்பு. 4

### செயலும் விளைவும்

வைததனா ளுகும் வசை; வணக்கம் நன்ருகச்
செய்ததனா ளுகும் செழுங்குலம்;முன்—செய்த
பொருளினா ளுகுமாம் போகம்; நெகிழ்ந்த
அருளினா ளுகும் அறம்.

—காரியாசான்

## 3. ஏலாதி

### எளியதும் அரியதும்

சாவ தெளிதரிது சான்ருண்மை; நல்லது
மேவ லெளிதரிது மெய்போற்றல்;—ஆவதன்கண்
சேற லெளிது; நிலையரிது; தெள்ளியராய்
வேற லெளிதரிது சொல். 1

### தீயார் சேர்க்கையால் வரும் தீங்கு

பெருமை புகழறம் பேணுமை சீற்றம்
அருமைநூல் சால்பில்லார்ச் சாரின்—இருமைக்கும்
பாவம் பழிபகை சாக்காடே கேடச்சம்
சாவம்போல் சாரும் சலித்து. 2

### படிப்பார்க்கு உதவுதலால் வரும் பயன்

ஊணொடு கூறை எழுத்தாணி புத்தகம்
பேணொடும் எண்ணு மெழுத்துமிவை—மாணொடு
கேட்டெழுதியோதிவாழ் வார்க்கீந்தார் இம்மையான்
வேட்டெழுத வாழ்வார் விரிந்து. 3

### எண்ணும் எழுத்துமே வனப்பு

இடைவனப்பும் தோள்வனப்பும் ஈடின் வனப்பும்
நடைவனப்பும் நாணின் வனப்பும்—புடைசால்
கழுத்தின் வனப்பும் வனப்பல்ல; எண்ணொ
டெழுத்தின் வனப்பே வனப்பு. 4

### பெரியாரிடம் காணும் இயல்புகள்

கொல்லான் கொலைபுரியான் பொய்யான் பிறர்பொருள்மேல்
செல்லான் சிறியா ரினஞ்சேரான்—சொல்லும்
மறையிற் செவியிலன் தீச்சொற்கண் மூங்கை
இறையிற் பெரியாற் கிவை. 5

—கணி மேதையார்

## குறிப்புரை

### 1. திருக்குறள்

உலகம் புகழ்ந்து போற்றும் ஒப்பற்ற நூல் **திருக்குறள்.** இதில் சாதி, மதம், இனம் முதலிய எவ்வகை வேறுபாடுமின்றி, மனிதகுலம் முழுமைக்குமான வாழ்க்கை வழிகள் வகுத்துரைக்கப் பட்டுள்ளன. எனவே, இதனைப் பலரும் பொதுமறை எனப் போற்றி வருகின்றனர். உலகில் பல்வேறு மொழிகளில் இந்நூல் மொழிபெயர்க்கப்பட்டுள்ளதே இதன் சிறப்பிற்குச் சான்றும்.

**திருவள்ளுவ மாலை** என்பது, திருக்குறளின் தனிச்சிறப்பினை எடுத்துரைக்கும். மேலும், **தருமர், மணக்குடவர், காலிங்கர், பரிமேலழகர்** உள்ளிட்ட பதின்மர் உரை விளக்கம் எழுதிய பெருமையும் இதற்கு உண்டு.

'ஆலும் வேலும் பல்லுக் குறுதி
நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி.'

'பழகுதமிழ்ச் சொல்லருமை நாலிரண்டிற் பார்,'

என்னும் பழமொழிகளும் இந்நூலின் சிறப்பை உணர்த்தும். இவற்றில் **நால்** என்றது நாலடியாரையும், **இரண்டு** என்றது ஈரடியாலான திருக்குறளையும் குறிக்கின்றன.

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் பாடல் எண்ணிக்கையால் மிகப் பெரியது திருக்குறள். குறள் என்பது இரண்டடியாலான வெண்பாச்செய்யுள். குறள் வெண்பாக்களால் ஆன இந்நூல் பெருமை கருதித் **திரு** என்னும் சிறப்பு அடைமொழியினைச் சேர்த்துத் **திருக்குறள்** என வழங்கப்படுகிறது. திருக்குறள் என்பது, இங்கே பாட்டை உணர்த்தாமல், நூலைக் குறிப்பிடு வதனல், அடையடுத்த கருவியாகு பெயர்.

திருக்குறள் 'அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால்' என்னும் மூன்று பெரும்பகுதிகளைக் கொண்டது. அதனல், இதற்கு **முப்பால்** என்னும் பெயரையே ஆசிரியர் இட்டனர் என்று கருதுவர். இது *133* அதிகாரங்களையும், ஒவ்வோர் அதிகாரத் திற்கும் பத்துப் பாடல்களையும் கொண்டுள்ளது. ஆகவே, இந் நூலின் பாடல் தொகை *1330*.

திருவள்ளுவரைத் **தேவர், பெருநாவலர், தெய்வப்புலவர், செந்நாப்போதார், பொய்யில் புலவர்** எனப் பல பெயரிட்டுப் போற்றுகின்றனர். இவர் பிறந்த ஊர் மயிலாப்பூர் என்று சிலரும், மதுரை என்று சிலரும் கூறுவர். திருவள்ளுவரின் தாய்தந்தையர் ஆதியும் பகவனும் என்பர். இவர் வள்ளுவர் குலத்தில் பிறந்தவர் என்றும் நெசவுத்தொழில் செய்து வாழ்ந்தவர் என்றும் உரைப்பர். இவர் மனைவியார் பெயர் **வாசுகியார்** என்பது. **ஏலேல சிங்கர்** என்னும் வணிகரால் இவர் ஆதரிக்கப்பட்டவர். இவ்வாறு வழங்கும் கதைகள் எல்லாம் செவிவழிச் செய்திகளே. அவற்றை **விநோதரசமஞ்சரி** என்னும் நூலிற்காணலாம்.

## அருஞ்சொற்பொருள்

1. இல்வாழ்க்கை - ஒருவன் தன் மனைவியோடு வாழும் குடும்ப வாழ்க்கை, அன்பு - தொடர்புடைய மனைவி மக்கள் முதலியோரிடம் கொள்ளும் பற்று, அறன் - அறம் (போலி), பிறர்க்குப் பகுத்துக்கொடுத்து உண்ணுதலையே இங்கு அறம் என்பது சிறப்பாகக் குறிக்கின்றது. இல்வாழ்க்கைக்கு அன்புடைமை பண்பாகவும், அறமுடைமை பயனாகவும் அமைதல் சுட்டப்பட்டுள்ளது. முதல் அடியில் அன்பு அறன் எனக் குறித்து, முறையே அவை இல்வாழ்க்கைக்குப் பண்பும் பயனுமாம் என்பதனை அடுத்த அடியில் நிரல்பட வைத்துள்ளார் ஆசிரியர். இவ்வாறு நேர் நேராகச் சொற்பொருள் அமைதலை 'நிரனிறைப் பொருள்கோள்' என்பர்.

2. மக்கட்பேறு - ஒருவர் நல்ல குழந்தைகளைப் பெறுதல், ஆற்றுதல் - செய்தல், உதவி - தந்தை செய்த உதவிகளுக்கு மக்கள் செய்யும் கைம்மாறு, என் நோற்றான்கொல் - என்ன தவம் செய்தானோ!

3. அன்புடைமை - மனைவி மக்கள் முதலிய தொடர்புடையாரிடத்துக் காட்டும் பற்று, ஆர்வம் - விருப்பம், ஈனும் - தரும், நண்பு - நட்பினர், நாடாச்சிறப்பு - இவ்வளவு என்று அளவிட இயலாத மேன்மை. இப்பாட்டில் அன்பு பிறர்மேல் விருப்பத்தையும், அவ்விருப்பம் நண்பர்களையும் தரும் என ஒன்றற்கொன்று காரண காரிய இயைபுபட அமைதல் காணத்தகும்.

4. 'இல் இருந்து ஓம்பி வாழ்வது எல்லாம்' என்று கூட்டிப் பொருள் கொள்க.

இல் - இல்லம் (வீடு), ஓம்பி - பொருள்களைப் பாதுகாத்து, விருந்தோம்பல் - விருந்தினர்களைப் பேணுதல், வேளாண்மை - உபகாரம், பொருட்டு - நான்காம் வேற்றுமைச் சொல்லுருபு.

5. இனியவை - இனிய சொற்கள், பணிவுடையன் - வணக்கமுடையன், அணி - ஆபரணம், ஒருவற்கு - (ஒருவன்+கு) ஒருவனுக்கு, மற்று - அசைநிலை. ஒருவற்கு அணியாவன, பணிவுடைமையும் இன்சொல்லுமாம்; பிற, அணியல்ல. 'அணி' என்னும் சொல் பாட்டின் நடுவில் நின்று ஈரிடத்தும் கூட்டிப் பொருள் செய்ய வேண்டிய நிலையில் உள்ளது. இவ்வாறு ஒரு சொல் பாட்டின் இடையில் அமைந்து முன்னும் பின்னும் பொருள் படுதலை இடைநிலை விளக்கு அணி என்பர்.

6. செய்ந்நன்றியறிதல் - ஒருவன் தனக்குப் பிறர் செய்த உதவியை மறவாதிருத்தல், நன்றி - நன்மை, நன்றன்று - அறனன்று, நன்று அல்லது - நன்மை அல்லாததை (தீமையை), அன்றே - அப்பொழுதே.

7. நடுவுநிலைமை - பகை நட்பு என்று பாராது எல்லார்க்கும் ஒப்பாக நடத்தல், கோல் - நிறைகோல், சீர்தூக்கல் - ஆராய்தல், போல் - உவம உருபு, ஒருபால் - ஒரு பக்கம், கோடாமை - பிறழாமை, சான்றோர் - நற்குணங்களால் நிறைந்தோர், அணி - அழகு.

நடுவுநிலைமையாளனுக்கு நிறைகோலை (தராசை) ஒப்பாகக் கூறுவதால், இப்பாட்டில் **உவமை அணி** அமைந்துள்ளது.

*8.* அடக்கமுடைமை - ஒருவன் தன் எண்ணம் சொல் செயல்களைத் தீயவழியில் செல்லாது காத்தல். உள் ஆறும் - உள்ளத்தின் கண் குணமடையும், நா - நாக்கு, வடு - தழும்பு. தீயினற்சுட்டது ஆறிப்போவதால் 'புண்' என்றும், ஆறுமையால் 'வடு' என்றும் கூறப்பட்டுள்ளது. சுடுந்தன்மையில் தீயும் சுடுசொல்லும் ஒக்கும். ஆனல், அவற்றிடையே ஆறுதலும் ஆறுமையுமான வேறுபாடு காணப்படுகிறது. இவ்வாறு இரு பொருளுக்கும் உள்ள ஒற்றுமையைச் சொல்லி அவற்றிடையே வேற்றுமையையும் குறிப்பதால் இது **வேற்றுமை அணி** எனப்படும்.

*9.* ஒழுக்கமுடைமை - நல்வழியில் நடக்கும் பண்பு, வித்தாகும் - காரணமாகும், இடும்பை - துன்பம்.

*10.* பொறையுடைமை - பிறர் செய்யும் இன்னல்களைப் பொறுத்துக் கொள்ளும் தன்மை, அகழ்வார் - தோண்டுபவர் (வினையாலணையும் பெயர்), தாங்குதல் - சுமத்தல், இகழ்வார் - நிந்தனை செய்பவரை, தலை - முதன்மையான அறம்.

பொறையுடைமைக்கு நிலம் ஒப்பாகக் கூறப்படுகிறது. இப்பாட்டில் போல என்னும் உவம உருபு பொருளுக்கும் உவமைக்கும் இடையில் வருவதால் இஃது **உவமை அணி** ஆகும்.

*11.* புறங்கூறாமை - ஒருவரைக் குறித்து அவரில்லாத இடத்தில் இகழ்ந்து பேசாமை, ஏதிலார் - அயலார், காண்கிற்பின் - காணவல்லராஞல், மன்னும் - நிலை பெறும்.

புறங்கூறுபவன் அயலாரிடம் குற்றம் காணுதல் போலப் புறஞ்சொல்லுதலாகிய தன் குற்றத்தையும் உணர்ந்தால், அத்தீமையிலிருந்து விடுபடுவான் என்பது இதனல் விளக்கப்படுகிறது. உண்டோ - ஓகாரம் எதிர்மறைப்பொருளது. இல்லை என்பது அவ்வினவினல் பெறப்படும் பொருள் ஆகும்.

*12.* பயனில சொல்லாமை - யாருக்கும் பயன் தாராத வீண் பேச்சுகளைப் பேசாமை, சொல்லில் - சொற்களுள், சொல்லற்க - சொல்லாது விடுக.

இப்பாட்டில் வந்த சொல்லும் பொருளும் பின்னும் வருவதனல், இது **சொற்பொருட்பின்வருநிலை அணி**. சொல்லுக - உடன்பாடு, சொல்லற்க - எதிர்மறை. இவை வியங்கோள் வினைமுற்றுகள்.

*13.* தீவினையச்சம் - தீய செயல்களைச் செய்வதற்கு அஞ்சுதல், கேடு - துன்பம் பயக்கும் செயல்கள். இது கெடு என்னும் முதல் நிலை திரிந்த தொழிற்பெயர். சூழும் - நினைக்கும், அறம் - அறக்கடவுள். 'கேடு, அறம்' என்பன ஆகுபெயர்கள். சூழற்க - நினையாதே (வியங்கோள் வினைமுற்று).

*14.* ஒப்புரவு அறிதல் - உலக ஒழுக்கத்தை அறிந்து நடத்தல், தாள் ஆற்றி - முயற்சி செய்து, தந்த - ஈட்டிய (சேர்த்த), தக்கார் - தகுதியுடையவர்.

15. ஈகை - இல்லாமையால் வருந்திக் கேட்பவர்களுக்கு "இல்லை' என்னாது கொடுத்தல், ஈத்து - ஈந்து (கொடுத்து) வலித்தல் விகாரம், உவக்கும் - மகிழும், உடைமை - பொருள், வன்கணவர் - கொடியவர், கொல் - வியப்பிடைச்சொல்.

16. புகழ் - நன்மதிப்பு, வசை - இகழ்ச்சி, இசை - புகழ்ச்சி, ஒழிய - நீங்க.

17. அருளுடைமை - எல்லா உயிர்களிடத்தும் செலுத்தும் கருணை, மெலியார் - எளியவர் (வலிமையற்றவர்), செல்லும் இடத்து - வருத்தச் செல்லும்பொழுது. இப்பாட்டில் 'மெலியார்' என்று உயர்திணைமேல் வைத்துச் சொன்ன போதிலும், இது மற்ற அஃறிணை உயிர்களையும் குறிக்கும். நினைக்க - வியங்கோள் வினைமுற்று.

18. வாய்மை - உண்மையினது தன்மை (மெய்ம்மை). 'பிற உயிர்களுக்கு எவ்வகையிலும் தீங்கு பயவாத சொற்களே வாய்மையாம்; எனவே, தீங்கு பயந்தால் பொய்ம்மையாம்,' என்பது கருத்து. இதனால், நிகழ்ந்தது நிகழ்ந்தபடி கூறலே வாய்மை என்னும் கருத்துத் தவிர்க்கப்படுகிறது. எனவே, நன்மை பயக்கும் சொற்களே வாய்மை எனப்படும்.

யாது எனின் - யாது என்றால், யாதொன்றும் - சிறிதும், இலாத - குறிப்பு வினையாலணையும் பெயர். 'இல்லாத, சொல்லல்' என்பன இசையின் பொருட்டுத் தொகுத்தல் விகாரமாயின.

19. வெகுளாமை - பிறரிடம் சினங்கொள்ளாமை, காக்கின் - காப்பாற்ற நினைத்தால், காவாக்கால் - காப்பாற்றாவிட்டால், கொல்லும் - கெடுக்கும், காக்க - வியங்கோள் வினைமுற்று.

20. இன்னா - துன்பந்தருவன, இன்னா செய்யாமை - எவ்வுயிர்க்கும் துன்பந்தரும் செயல்களைச் செய்யாமை, ஆகுவது உண்டோ - ஆகும் பயன் உள்ளதோ? உண்டோ - எதிர்மறை வினா, நோய் - துன்பம், போற்றாக்கடை - காப்பாற்றாத இடத்து.

21. கல்வி என்பது கற்றற்குரிய நூல்களைக் கற்றல், எண் - இலக்கியம், எழுத்து - இலக்கணம், ஏனை - வேறு, இவ்விரண்டும் - இக்கலைகள் இரண்டும், வாழும் உயிர்க்கு - என்றும் வாழ்கின்ற விழுமிய மனித உயிர்க்கு. முதலடியில் அமைந்த 'என்ப' என்னும் சொல்லிரண்டும் அஃறிணைப் பன்மைப் பெயர்கள்; 'என்று சொல்லப்படுவன' என்பது பொருள். 'கண்ணென்ப' என்பதில் 'என்ப' என்பது உயர்திணைப் பன்மை; 'என்று சொல்லுவர்' என்பது பொருள்.

22. கல்லாமை - கற்றற்குரிய நூல்களைக் கல்லாதிருத்தல், அரங்கு இன்றி - வட்டாடுதற்காக வரையப்பட்ட எல்லைக்கோடுகள் இல்லாமல், வட்டு - சூதாடும் சொக்கட்டான் காய், வட்டாடுதல் - உருண்டையான காய்களை உருட்டி விளையாடுதல், அற்று - அப்படிப்பட்டது, கோட்டி - குழு (சபை), கோட்டி கொளல் - அவையில் ஒன்றைச் சொல்லுதல். சபையைக் குறிக்கும் 'கோட்டி' என்பது இங்கு அதில் சொல்லப்படும் சொல்லைச் சுட்டுவதனால் இடவாகு பெயராகும்.

23. கேள்வி - கேட்டற்குரிய நூற்பொருளைக் கற்ற பெரியோர் சொல்லக் கேட்டல், எனைத்தானும் - எவ்வளவு சிறிதாயினும், கேட்க - வியங்கோள் வினைமுற்று, அனைத்தானும் - அவ்வளவாயி னும், ஆன்ற - நிறைந்த.

24. அறிவுடைமை - கல்வி கேள்விகளினால் ஆகிய அறிவோடு உண்மையான அறிவைப் பெறுதல். உண்மையான அறிவாவது, ஐயம் திரிபு மயக்கமில்லாத அறிவு, ஆவது அறிவார் - பின் விளை வதை முன்னர் அறிவார்; 'ஆகும் நன்மையை அறிவார்' என்றும் கொள்ளலாம். அறிகல்லாதவர் - அறியமாட்டாதவர். அஃது - அது (ஆய்தம் பெற்ற சுட்டுப் பெயர்).

25. குற்றம் கடிதல் - தவறானவற்றை வெறுத்து நீக்குதல். தினைத்துணை - தினை அளவு (சிறிதளவு), பனைத்துணை - பனையளவு (பெரிதளவு), தினையும் பனையும் அளவைக் குறிக்கும் சொற்கள். நாணுவார் - வெட்கப்படுபவர் (வினையாலணையும் பெயர்).

26. பெரியாரைத் துணைக்கோடல் - நன்னெறி தீநெறிகளை விளக்கிக்காட்டும் கற்றறிந்து அடங்கிய சான்றோரைத் துணை யாகக் கொள்ளுதல், தம்மின் - தம்மைவிட (இன் - ஐந்தாம் வேற்றுமை உருபு), தமரா - துணைவராகக்கொண்டு, ஒழுகுதல் - நடத்தல், வன்மையுள் - வலியனவற்றுள். 'வன்மை' என்னும் பண்புப் பெயர் இங்கே வலிமையுடைய செயல்களைச் சுட்டுவதால் பண்பாகு பெயராகும்.

27. சிற்றினம் - சிறுமைக் குணமுடைய கூட்டம், நல்லினத் தின் - நல்ல கூட்டத்தைவிட (இன் - ஐந்தாம் வேற்றுமை உருபு), ஊங்கு - மேலான, தீயினம் - தீய குணமுள்ள கூட்டம், அல்லற் படுப்பதூஉம் - துன்பம் தருவதும். படுப்பதூஉம் - படுப்பதும் என்பது செய்யுளின் தளைக்குப் பொருந்துமாயினும், இங்கு இன் னோசை கருதி உயிர் எழுத்து அளபெடுத்தது. எனவே, இஃது இன்னிசை அளபெடை' ஆகும்.

28. தெரிந்து செயல் வகை - செய்யும் செயல்களை ஆராய்ந்து செய்யும் முறை, எண்ணி - சிந்தித்து, துணிக - முடிவு செய்க (வியங்கோள் வினைமுற்று), கருமம் - செயல், எண்ணுவம் - ஆராய்வோம் (தன்மைப்பன்மை வினை முற்று), இழுக்கு - குற்றம்.

29. வலியறிதல் - ஆற்றலை ஆராய்தல், வினைவலி - செய்யக் கருதும் தொழிலின் வலிமை, தன் வலி - தனது வலிமை, மாற் றான் - பகைவன், துணை - தனக்கும் பகைவனுக்கும் துணையாவார், தூக்கி - சீர்தூக்கி ஆராய்ந்து, செயல் - செய்க (அல் ஈற்று உடன் பாட்டு வியங்கோள் வினைமுற்று).

30. காலம் அறிதல் - ஒரு செயலைச் செய்து முடித்தற்குரிய காலத்தை அறிதல், கொக்கொக்க - ஓடுமீன் ஓட உறுமீன் வரு மளவும் வாடியிருக்கும் கொக்கைப்போல ஏற்ற காலத்தை எதிர் பார்த்திருக்கக்கடவன், கூம்பும் பருவம் - வாய்ப்பில்லாத சமயம், குத்து - குத்திக் கொல்லுதல் (இது முதனிலைத் தொழிற்பெயர்), ஒக்க - ஒத்திருக்கக்கடவன் (வியங்கோள்), சீர்த்த இடம் - சிறந்த பொழுது. இப்பாடலில் தொழிலுவமை அமைந்துள்ளது.

31. இடனறிதல் - உரிய செயலைச் செய்வதற்கு ஏற்ற இடத்தைத் தெரிந்துகொள்ளுதல், நெடும்புனல் - ஆழமுள்ள நீர் நிலை (பண்புத்தொகை), அடும் - கொல்லும். 'வெல்லும், அடும்' என்பன வினைமுற்றுகள். பிற - மற்ற உயிர்கள். முதலை என்பதைப் 'பிற' என்பதனுடன் கூட்டிப்' பிறவற்றை வெல்லும்' என்க. முதலை வலிமை உடையதாயினும், தான் வாழும் நீர் நிலையை விட்டுச் சென்றால், வலியிழந்ததாய்விடும். 'ஒருவன் பகைவரை வெல்லுதற்கேற்ற தனக்குரிய இடத்தை அறிந்து செயலாற்ற வேண்டும். தகாத இடத்தில் செயலாற்றினால், தோல்வி உறுவன்' என்னும் கருத்தை முதலை வாயிலாக வெளிப்படுத்துவதனால், இது பிறிது மொழிதல் அணியாம். சொல்லக்கருதிய பொருளைப் பிறிதொன்று கூறுவதால் வெளிப்படுத்துவது பிறிது மொழிதல் அணியாம்.

32. தெரிந்து தெளிதல் - ஆராய்ந்து உண்மையை அறிதல், கட்டளைக்கல் - பொன்னைத்தேய்த்து மாற்றறியப் பயன்படும் உரைகல், தத்தம் - அவரவரது, கருமம் - செயல். 'கருமமே' என்பதில் உள்ள ஏகாரம் தேற்றேகாரம். செயலை உரைகல்லாக உருவகம் செய்து பெருமை சிறுமைகளைப் பொன்னாக உருவகம் செய்யாமையால், இஃது ஏகதேச உருவகவணியாம்.

33. தெரிந்து வினையாடல் - தேர்ந்து தெளிந்தவர்களைக் கொண்டு செயல் செய்விக்கும் திறம், ஆடல் - தொழிற்பெயர், இதனை - இச்செயலை, இதனான் - இக்காரணத்தால், ஆய்ந்து - ஆராய்ந்து, அதனை - அச்செயலை, அவன்கண் - உரியவனான அவனிடத்தில், விடல் - ஒப்படைத்துவிடுக (அல் ஈற்று வியங்கோள் வினைமுற்று).

34. ஊக்கம் - மனவெழுச்சி, வெள்ளம் - நீர், மலர் நீட்டம் - நீர்ப்பூத்தண்டின் நீட்சி (நீட்டம் - தொழிற்பெயர்), உள்ளத்து - மன ஊக்கத்து: மலர் என்பது மலரின் அடித்தண்டைக் குறிப்பதால், சினையாகு பெயராம். இஃது உவமையையும் பொருளையும் இயைபுபடுத்தும் உவம உருபு இன்றி அமைவதால், எடுத்துக் காட்டு உவமையணியாம்.

35. ஆள்வினை - வினையைத் திறம்படச் செய்யும் ஆற்றல், முயற்சி - ஊக்கம், திருவினை - செல்வத்தை, ஆக்கும் - வளர்க்கும், இன்மை - வறுமை, முயற்று - 'முயல்' என்னும் பகுதியோடு றுவ்விகுதி சேர்ந்த தொழிற்பெயர்.

36. சொல் வன்மை - பேச்சுத் திறமை, கேட்டார் - பேச்சினைக் கேட்டவரை (வினையாலணையும் பெயர்), பிணிக்கும் - தன் வயப்படுத்தும் (ஈர்க்கும்), தகையவாய் - தன்மையை அவாய் (விரும்பி), கேளார் - பேச்சினைக் கேட்கும் வாய்ப்பில்லாதவர், கேளார் - 'பகைவர்' எனலுமாம், வேட்ப - விரும்பும்படி, மொழிவது - பேசுவது.

37. வினைத்தூய்மை - செயலின் தூய்மை, அழக்கொண்ட - பிறர் வருந்தும்படி கொண்டவை, நற்பாலவை - நல்ல வழியில் வந்தவை (வினையாலணையும் பெயர்), இழப்பினும் - இழந்ததாயினும், பிற்பயக்கும் - பின்னர்ப் பயன் தரும்.

**38.** வினைத்திட்பம் - செயலாற்றும் மனவலிமை, எளிய - எளிய செயல்கள், அரிய - அரிய செயல்கள், சொல்லிய வண்ணம் - சொல்லியபடி. 'எளிய, அரிய' என்பன பலவின்பால் குறிப்பு வினைமுற்றுகள். எனவே, 'சொல்லுதல், செயல்' என்பன, சொல்லுவன, செய்வன எனப் பன்மைப் பொருளைப் பயக்கும்.

**39.** வினை செயல் வகை - செயலாற்றும் திறம், கருவி - துணைக்கருவி, காலம் - ஏற்ற காலம், இருள் தீர - மயக்கம் நீங்க, செயல் - செய்க (அல் ஈற்று வியங்கோள் வினைமுற்று), ஒடு - எண்ணிடைச்சொல், பொருள் முதலிய ஐந்தோடும் இஃது இயைந்து வரும்.

**40.** குறிப்பு அறிதல் - ஒருவர் சொல்லாமலே அவரது மனக் கருத்தை அறிதல், குறிப்பு - எண்ணிய எண்ணம், அடுத்தது - அடுத்த பொருளின் நிறத்தை. 'அடுத்தது' என்பது இங்கே அடுத்த பொருளின் நிறத்தைக் குறிப்பதனால் தொழிலாகு பெயராம், பளிங்கு - கண்ணாடி, நெஞ்சம் - மனம், கடுத்தது - கோபித்தது (கடு என்னும் உரிச்சொல் அடியாகப் பிறந்த தொழிற் பெயர்).

**41.** அவை - சபை, கற்றார் முன் - கல்வியறிவுடையவர் இருக்கும் அவையில், செல - அவர்கள் ஏற்றுக்கொள்ளும்படி, எனப்படுவர் - என்று புகழப்படுவர்.

**42.** நிறை நீர - வளரும் தன்மையையுடையவை, நீரவர் - அறிவுடையவர், கேண்மை - நட்பு, பின் நீர - பின்னே குறையும் தன்மையையுடையவை, பேதையார் - அறிவிலார். இஃது எடுத்துக் காட்டு உவமை அணி.

**43.** பிழையாமை - அவமதித்து ஒழுகாதிருத்தல், குன்று அன்னார் - மலைபோன்ற பெருமை உடையவர், குன்ற - கெட்டுப் போகும்படி, மதிப்பின் - நினைப்பாராயின், நின்ற அன்னார் - நிலை பெற்றார் போன்ற செல்வர், மாய்வர் - அழிவர்.

**44.** யாக்கை - உடம்பு, அருந்துதல் - உண்ணுதல், அற்றது - செரித்தது, போற்றி - குறிகளால் தெளிவாய் அறிந்து.

**45.** குடிமை - உயர்குடியிற்பிறந்தாரது விழுமிய தன்மை, குடிப்பிறந்தார் - உயர்குடியிற்பிறந்தவர், இழுக்கார் - வழுவார்.

**46.** பணிதல் - கீழ்ப்படிதல், பெருமை - பெருமை உடையான், சிறுமை - சிறுமை உடையான் (பண்பாகு பெயர்), அணியும் - புனைந்துரைப்பான். 'ஆம்' என்பன இரண்டும் அசைநிலை.

**47.** சான்றாண்மை - நற்குணங்களால் நிறைந்து விளங்கும் தன்மை, நாண் - பழிக்கு நாணுதல், ஒப்புரவு - உதவி, கண்ணோட்டம் - இரக்கம், சால்பு - சான்றாண்மைப்பண்பு (ஒடு - எண்ணுப்பொருளில் வந்த இடைச்சொல். நாணோடும் அன்பு முதலியவற்றோடும் இது சேர்ந்து வரும்). இப்பாடல் ஏகதேச உருவகவணி. அன்பு முதலிய குணங்களைத் தூணாக உருவகம் செய்த ஆசிரியர், அவற்றால் விளையும் சால்பினை உருவகம் செய்யாது விட்டார்.

*48.* பண்புடைமை - எல்லார் இயல்புகளையும் அறிந்து ஒத்து ஒழுகும் தன்மை, பட்டு - படுதலால், பட என்பது திரிந்து நின்றது. இன்றேல் - (படுதல்) இல்லையாயின், மண்புக்கு - மண்ணிற்புதைந்து, மன் - ஒழியிசை, உலகம் - இடவாகுபெயர்.

*49.* அணி - ஆபரணம், பிணி - நோய், பீடுநடை - பெருமித நடை.

*50.* உழவு - நிலத்தை உழும் தொழில், இலம் - பொருள் இல்லாதவராய் இருக்கிறோம், அசைஇ - சோம்பி, நிலம் என்னும் நல்லாள் - பூமியாகிய பெண் (உருவகம்), நகும் - சிரிப்பாள் (செய்யுமென் வாய்பாட்டு வினைமுற்று, இங்குப் பெண்பாலை உணர்த்தியது).

## 2. சிறுபஞ்சமூலம்

**நூல்:** 'சிறுபஞ்சமூலம்' என்பது ஐந்து சிறிய வேர்களைக் குறிக்கும். இவை, சிறுவழுதுணை, நெருஞ்சி, சிறுமல்லி, பெருமல்லி, கண்டங்கத்தரி என்பனவற்றின் வேர்களாகும். இவற்றாலாகிய மருந்து, உடல் நலத்தைப் பேணுவதாகும். இவைபோலவே, உயிர்ப்பிணிக்கு நன்மருந்தாக ஐந்து சிறந்த கருத்துகள் ஒவ்வொரு பாட்டிலும் உள்ளமையால், இந்நூல் சிறுபஞ்சமூலம் என்று வழங்கப்படுகிறது. இஃது ஒப்புமை கருதி வழங்கப்பட்ட பெயர். இந்நூல் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று; 100 செய்யுள்களை உடையது.

**ஆசிரியர்:** இந்நூலாசிரியர் **காரியாசான்** என்பவர். இவர் சமணர். இவருடைய ஆசிரியர் **மாக்காயனார்**. 'ஆசான்' **என்பது** தொழில்பற்றி வந்த பெயர். ஏலாதி இயற்றிய **கணி மேதை** யாரும் இவரும் ஒரு சாலை மாணவர்.

### அருஞ்சொற்பொருள்

*1.* நற்கவி - நல்ல கவிஞன், வாதி - வழக்காடுபவன், இசை - புகழ், முன் - இளமையில், நகை - இகழ்ச்சி.

*2.* பூவாது காய்க்கும் மரம் - பலா முதலியவை, மூவாது - முதுமை அடையாமல், மூத்தவர் - அறிவால் மூத்தவரோடு ஒப்பர், தாவா - கெடாமல், நாறுவ - முளைப்பவை, மேதை - அறிவுடையவர். இஃது **எடுத்துக்காட்டுவமையணி.**

*3.* பிழைத்தல் - ஒருவர் செய்த தீங்கை, இழைத்த - செய்த, தீங்கு - **தீமை,** பகை - பகைமைச் செயல், பிழை; நகை - ஏளனம் செய்யும் நகை, கெட - நீங்க.

*4.* **கண்ணோட்டம்** - இரக்கம், செல்லாமை - இரந்து செல்லாமை, **எண்** - ஆராய்ச்சி, இத்துணையாம் - இவ்வளவினதாம், பண் - இசை, வாட்டான் - வருத்தான். 'வனப்பு' என்னும் சொல்லும் பொருளும் மீண்டும் வருவதனால் இப்பாட்டுச் சொற்**பொருள் பின்வருநிலை அணி.**

5. வசை - பழி, செழுங்குலம் - வளமுடைய குடிப்பிறப்பு (பண்புத்தொகை), செய்த பொருள் - முயற்சியால் ஈட்டிய பொருள், மாபோகம் - மிகு இன்பம், நெகிழ்ந்த - மனம் இளகிய.

## 3. ஏலாதி

ஏலாதி: இஃது ஏலக்காய் முதலான அறுவகைப் பொருள்கள் சேர்ந்த ஒருவகைச் கூட்டு மருந்து. ஏலம், இலவங்கப்பட்டை, சிறுநாவற்பூ, மிளகு, திப்பிலி, சுக்கு என்பவற்றை அளவுப்படி சேர்த்து இம்மருந்தை ஆக்குவர். ஆறு பொருள் சேர்ந்த இந்த ஏலாதி மருந்தைப்போல இந்நூலில் உள்ள ஒவ்வொரு செய்யுளும் அவ்வாறு அறநெறிகளை விளக்குகிறது. எனவே, இதுவும் சிறுபஞ்ச மூலம்போல ஒப்புமைபற்றி ஏற்பட்ட பெயராகும். இந்நூல் பாயிரம் நீங்கலாக 80 பாடல்களை உடையது; பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று.

நூலாசிரியர் கணி மேதையார்; 'கணி மேதாவியார்' என்றும் வழங்கப்படுவர். திணைமாலை நூற்றைம்பது என்னும் நூலின் ஆசிரியரும் இவரே. இவர் சமணர். இவர் சோதிடப் புலமையில் மிக்கவர்போலும்!

### அருஞ்சொற்பொருள்

1. சான்றாண்மை - கல்வி கேள்விகளால் நிறைந்த ஒழுக்கம், மேவல் - விரும்பல், மெய் போற்றல் - உண்மையைக் கடைப்பிடித்தல், ஆவது - துணையாவதாகிய துறவறம், சேறல் - (செல் + தல்) செல்லுதல், நிலை - நிற்றல், தெளியார் - தெளிந்த அறிவுடையார், வேறல் - (ஐம்புலன்களையும் அடக்கி) வெல்லுதல். 'வெல் + தல்' எனப் பகுக்க.

2. பேணாமை - விரும்பாமை, சீற்றம் - சினம், சால்பு - பெருந்தன்மை, இருமைக்கும் - இம்மைக்கும் மறுமைக்கும், பழி - பழிச்சொல், சாக்காடு - இறப்பு, சாவம் - சான்றோரின் நிந்தை.

3. கூறை - ஆடை, மாண்டு - மாட்சிமையோடு, ஓதி வாழ்வார் - கற்று வாழ்வார் (மாணவர்), விரிந்து - பெருகி.

4. இடை - இடுப்பு, ஈடு - செல்வம், நாண் - வெட்கம், புடை - பக்கம், எண் - இலக்கியம், எழுத்து - இலக்கணம்.

5. செல்லான் - ஆசை கொள்ளான், மறையில் - பிறர் மறைவாய்க் கூறும் சொல்லில் (பிறர் பேசும் இரகசியத்தில்), செவியிலன் - செவிடன், மூங்கை - ஊமை, இறை - தலைமை.

## வினாக்கள்

### 1. திருக்குறள்

1. இல்வாழ்க்கையின் பண்பும் பயனுமாய் விளங்குபவை எவை?
2. மகன் தந்தைக்கு ஆற்றும் கடமை பற்றி வள்ளுவர் யாது கூறுகிறார்?
3. அன்பினால் விளையும் நன்மைகள் யாவை?
4. பொருள் கூறுக:

   வேளாண்மை, சமன் செய்து சீர் தூக்கும் கோல், யாதொன்றும் தீமை இலாத சொலல், கட்டளைக்கல்.
5. இல்வாழ்வார் செய்ய வேண்டிய முக்கிய அறம் யாது?
6. ஒருவருக்கு அணியாவது யாது?
7. வள்ளுவர் எவற்றை 'நன்று' என்றும் 'நன்றன்று' என்றும் கூறுகிறார்?
8. சான்றோர்க்கு அழகாவது யாது?
9. பின்வருவனவற்றை விளக்குக:
   ஒருபால் கோடாமை, ஈத்துவக்கும் இன்பம்.
10. தீயினாற்சுட்டதைப் புண் என்றும் நாவினாற்சுட்டதை வடு என்றும் கூறக் காரணம் என்ன?
11. நல்லொழுக்கம் தீயொழுக்கங்களால் விளையும் பயன் யாது?
12. புறங்கூறுதலை ஒழித்தற்கு ஒருவன் செய்ய வேண்டுவது யாது?
13. சொல்லுக, சொல்லற்க—எவற்றை?
14. பிறர்க்குக் கேடு நினைப்பான் எந்நிலை அடைவான்?
15. பொருள் சேர்த்தலின் பயன் எது என வள்ளுவர் அறிவுறுத்துகிறார்?
16. பிறருக்கு ஈயாதவர்களைக் குறித்து வள்ளுவர் கூறுவது யாது?
17. 'வாழ்வார், வாழாதவர்' எனப்படுபவர் யாவர்?
18. அருள் உண்டாதற்கு மெலியாரை வருத்துபவன் யாது செய்தல் வேண்டும்?
19. வாய்மையின் இலக்கணத்தை விளக்குக.
20. சினத்தினால் விளையும் கேடு யாது?
21. உயிருக்குக் கண்ணெனப் போற்றப்படுபவை எவை?
22. கல்லாதார் கற்றார் அவையில் புகுவதற்குக் கூறப்படும் உவமை யாது?

23. எஃது ஆன்ற பெருமை தரும்?
24. அறிவுடையார், அறிவிலார் இயல்புகள் யாவை?
25. பழிக்கு நாணுவார் தாம் செய்யும் பிழையை எவ்வாறு மதிப்பர்?
26. வன்மையுள் எல்லாம் தலையாயது எது?
27. நல்லினத்தையும் தீயினத்தையும்பற்றி வள்ளுவர் யாது கூறுகிறார்?
28. எஃது ஒருவனுக்கு இழுக்காகும்?
29. செயல்புரிவான் எத்தகைய வலிமைகளை ஆராய்தல் வேண்டும்?
30. 'கொக்கொக்க, குத்தொக்க'—பொருளை விளக்குக.
31. வெல்லும் இடம் அறிந்து செயல் செய்ய வேண்டுமென் பதை விளக்க ஆசிரியர் எந்நிகழ்ச்சியை எடுத்துக் கூறுகிறார்?
32. சுட்டளைக்கல் எது? எதற்கு?
33. 'ஒருவனது ஊக்கத்தின் அளவே உயர்வு,' என்பதற்குக் காட்டும் உவமையை விளக்குக.
34. முயற்சியும், முயற்சி இன்மையும் விளைப்பன யாவை?
35. பேச்சு வன்மைபற்றி வள்ளுவர் உரைப்பது யாது?
36. 'எளிய செயல், அரிய செயல்' என்று எவற்றை வள்ளுவர் குறிப்பிடுகின்றார்?
37. ஒரு செயல் செய்வான் எவ்வெவற்றை ஆராய்தல் வேண்டும்?
38. 'அகத்தை முகம் காட்டும்,' என்பதைத் திருக்குறள் எவ்வாறு விளக்குகிறது?
39. 'கற்றருள் கற்றார்,' எனப்படுபவர் யார்?
40. அறிவுடையார் பேதையார் நட்புக்கு எடுத்துக்காட்டும் உவமையை விளக்குக.
41. பெரியாரைப் பிழைத்தொழுகுவார் எந்நிலை அடைவர்?
42. உணவு முறைபற்றித் திருக்குறள் உரைப்பது யாது?
43. குடிப்பிறந்தாரிடம் காணப்படும் குணங்கள் யாவை?
44. பெரியார், சிறியார் இயல்புகளை விளக்குக.
45. 'சால்பு ஊன்றிய தூண் ஐந்து,' என்னும் கருத்தை விளக்குக.
46. பண்புடையார் பெருமையைக் குறள் எவ்வாறு கூறுகிறது?
47. நாணுடைமைபற்றித் திருக்குறள் கூறுவது யாது?
48 'நிலம் என்னும் நல்லாள் நகும்,'—யாரை? எதற்காக?

49. பின்வரும் அதிகாரப் பெயர்ப்பொருளே விளக்குக:
விருந்தோம்பல், ஒப்புரவறிதல், வினைத்திட்பம்.

50. 'அறக் கருத்துகளை இலக்கிய நயம்படக் கூறுவதில் வள்ளுவர் வல்லவர்,'—இக்கூற்றினை எடுத்துக்காட்டுகளுடன் நிறுவுக.

## 2. சிறுபஞ்சமூலம்

1. கற்றான், நற்கவி, வாதி—இவர்கள் பெறுபவை எவை?
2. நல்லாரின் நகைப்புக்கு இடமாவார் யாவர்?
3. 'பூவாது காய்க்கும் மரம், விதையாமை நாறும் வித்து.' என்னும் இவை விளக்கும் பொருள்கள் யாவை?
4. நன்மை பயப்பன எவை எவை?
5. கண், கால், எண், பண்—இவற்றுள் ஒவ்வொன்றுக்கும் வனப்பாக அமைவது எது?
6. வேந்தனுக்கு வனப்பாவது யாது?
7. போகமும் அறமும் எவற்றால் உண்டாகும்?
8. 'செயலும் வினைவும்' என்னும் சிறுபஞ்சமூலச் செய்யுளில் உள்ள கருத்துகள் யாவை?

## 3. ஏலாதி

1. 'எளிது, அரிது' என்று ஏலாதி குறிப்பிடும் செயல்களை விளக்குக.
2. 'சாவம் போல் சாரும்,'—எவை? ஏன்?
3. படிப்பார்க்கு என்னென்ன உதவிகள் வேண்டுமென ஏலாதி கூறுகிறது?
4. ஏலாதிப்பாட்டு எவற்றை வனப்பு என்றும் வனப்பு அல்ல என்றும் கூறுகிறது?
5. பெரியாரிடம் காணும் இயல்புகள் யாவை?

# III

# தொடர்நிலைச்செய்யுள்

## 1. மணிமேகலை

### உலக அறவி புக்க காதை

#### அமுத சுரபியில் உணவு அள்ள அள்ளக் குறையாமை

பத்தினிப் பெண்டிர் பாத்தூண் ஏற்ற
பிச்சைப் பாத்திரப் பெருஞ்சோற் றமலை,
அறத்தின் ஈட்டிய ஒண்பொருள் அறவோன்
திறத்துவழிப் படூஉம் செய்கை போல,
5. வாங்குகை வருந்த மன்னுயிர்க் களித்துத்
தான்தொலை வில்லாத் தகைமை நோக்கி,

#### காயசண்டிகை என்பவள் தன் பெரும்பசியைத் தீர்க்குமாறு மணிமேகலையை வேண்டுதல்

யானைத் தீநோய் அகவயிற் றடக்கிய
காயசண் டிகையெனுங் காரிகை வணங்கி,
'இட்ட தாற்றுக் கட்டழற் கடும்பசிப்
10. பட்டேன் என்றன் பழவினைப் பயத்தால்!
அன்னை! கேள்நீ: ஆருயிர் மருத்துவி!
துன்னிய என்நோய் துடைப்பாய்!' என்றலும்,

#### காயசண்டிகை பிடியுணவு பெற்று உண்டு பெரும்பசி தீர்தல்

எடுத்த பாத்திரத் தேந்திய அமுதம்
பிடித்தவள் கையில் பேணினள் பெய்தலும்,
15. வயிறுகாய் பெரும்பசி நீங்கி, மற்றவள்
துயரம் நீங்கித் தொழுதனள் உரைக்கும்:

#### [காயசண்டிகை தன் வரலாறு உரைத்தல்]

#### காயசண்டிகை தன் ஊர் விட்டுப் பொதிய மலைக்கு வருதல்

'மாசில் வாலொளி வடதிசைச் சேடிக்
காசில்காஞ் சனபுரக் கடிநக ருள்ளேன்;
விஞ்சையன் தன்னொடென் வெவ்வினை யுருப்பத்

20. தென்திசைப் பொதியில் காணிய வந்தேன்;
கடுவர லருவிக் கடும்புனல் கொழித்த
இடுமணற் கான்யாற் றியைந்தொருங் கிருந்தேன்.

**விருச்சிக முனிவனது நாவற்கனியைச் சிதைத்தல்**

புரிநூல் மார்பின் திரிபுரி வார்சடை
மரவுரி யுடையன் விருச்சிகன் என்போன்,
25. பெருங்குலைப் பெண்ணைக் கருங்கனி யனையதோர்
இருங்கனி நாவற் பழமொன் றேந்தித்
தேக்கிலை வைத்துச் சேணுறு பரப்பிற்
பூக்கமழ் பொய்கை ஆடச் சென்றான்.
தீவினை உருத்தலின், செருக்கொடு சென்றேன்,
30. காலால் அந்தக் கருங்கனி சிதைத்தேன்.

**விருச்சிக முனிவன் சாபத்தால் பெரும்பசியுறுதல்**

உண்டல் வேட்கையின் வரூஉம் விருச்சிகன்
கண்டன னென்னைக் கருங்கனிச் சிதைவுடன்;
'சீர்திகழ் நாவலின் திப்பிய மானது;
ஈரா றாண்டில் ஒருகனி தருவது,
35. அக்கனி யுண்டோர் ஆறீ ராண்டு
மக்கள் யாக்கையின் வரும்பசி நீங்குவர்,
பன்னீ ராண்டில் ஒருநா ளல்லது
உண்ணா நோன்பினேன் உண்கனி சிதைத்தாய்!
அந்தரம் செல்லும் மந்திரம் இழந்து,
40. தந்தித் தீயால் தனித்துய ருழந்து,
முந்நா லாண்டில் முதிர்கனி நானீங்கு
உண்ணும் நாளுன் உறுபசி களைக'என,
அந்நாள் ஆங்கவன் இட்ட சாபம்
இந்நாள் போலும் இளங்கொடி கெடுத்தனை!

**காயசண்டிகை, மணிமேகலையை உலக அறவிக்குச் சென்று உணவுதவுமாறு உரைத்து நீங்குதல்**

45. தணிவில் வெம்பசி தவிர்த்தனை! வணங்கினேன்!
மணிமே கலை!என், வான்பதிப் படர்கேன்;
துக்கந் துடைக்கும் துகளறு மாதவர்
சக்கர வாளக் கோட்டமுண் டாங்கதில்
பலர்புகத் திறந்த பகுவாய் வாயில்
50. உலக அறவி ஒன்றுண்டு; அதனிடை
ஊரு ராங்கண் உறுபசி யுழந்தோர்

ஆரு மின்மையின் அரும்பிணி யுற்றோர்,
இடுவோர்த் தேர்ந்தாங் கிருப்போர் பலரால்;
வடுவாழ் கூந்தல்! அதன்பாற் போகெ'கன்
55. றுங்கவள் போகிய பின்னர், ஆயிழை

**மணிமேகலை உலக அறவிக்குச் சென்று உணவு வழங்குதல்**

ஓங்கிய வீதியின் ஒருபுடை யொதுங்கி,
வலமுற மும்முறை வந்தனை செய்தவ்
வுலக அறவியின் ஒருதனி ஏறி,
அமுத சுரபியொ டாயிழை தோன்றி,
60. 'ஆபுத் திரன்கை அமுத சுரபியிஃது;
யாவரும் வருக ஏற்போர் தாம்' என,
ஊணொலி யரவத் தொலியெழுந் தன்றே
யாணர்ப் பேரூர் அம்பல மருங்கென்.

—மதுரைக்கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார்

## குறிப்புரை

### மணிமேகலை

ஐம்பெருங்காப்பியங்களுள் நடுநாயகமாய் வைத்துப் போற்றப் படுவது மணிமேகலை. ஏனைய நான்கு, சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், வளையாபதி, குண்டலகேசி என்பனவாகும். இவற்றுள் சிலப்பதிகாரமும் மணிமேகலையும் இரு வேறு காப்பியங்களாய் இருந்தபோதிலும், கதைத் தொடர்பாலும் பிற அமைப்பு ஒற்றுமைகளாலும் ஒரே காவியத்தின் இரு பகுதிகள் என்று கருதத்தக்கனவாம். எனவே, இவற்றை இரட்டைக் காப்பியங்கள் எனச் சிறப்பித்துக் கூறுவர்.

கோவலனுக்கும் மாதவிக்கும் பிறந்த மகளான மணிமேகலையின் துறவு வாழ்க்கையைக் கூறுவது இந்நூல். எனவே, இதற்கு மணிமேகலை துறவு என்னும் பெயரும் உண்டு. இது பௌத்தக் கருத்து மிகுந்த நூல்; முப்பது காதைகளால் இயன்றது. இதில் உள்ள ஒவ்வொரு காதையும், என் என்னும் ஈற்றுல் முடிவுறும் நிலைமண்டில ஆசிரியப்பாவாகும்.

இந்நூல் ஆசிரியர், மதுரைக்கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார் கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர். இவர் திருச்சிராப்பள்ளியைச் சார்ந்த சித்தலை என்னும் ஊரிற்பிறந்தவர்; மதுரையில் கூலவாணிகம் புரிந்து வாழ்ந்தவர்; புத்த சமயத்தவர். நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரத்தை இயற்றிய இளங்கோவடிகள், இவர் காலத்தில் வாழ்ந்தவர். 'தண்டமிழ் ஆசான் சாத்தன்', 'நன்னூற் புலவன்' என்று இவரை இளங்கோவடிகள் குறிப்பிடுவர்.

## முன் கதைச்சுருக்கம்

காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்த மாதவி, மதுரையில் கோவலன் கொலையுண்டு இறந்த செய்தியைக் கேட்டுப் பெருந் துன்பம் கொண்டாள்; உலக வாழ்க்கையில் வெறுப்புற்று, துறவு மேற்கொண்டு, பௌத்த சங்கத்தைச் சார்ந்தாள்; தன் மகள் மணிமேகலையையும் துறவு வாழ்க்கையை மேற்கொள்ளச் செய்தாள். இளமைத்துறவு கொண்ட மணிமேகலையின் அழகில் பேரீடுபாடுகொண்ட அரசகுமாரனாகிய உதயகுமரன், அவளுக்குப் பல இன்னல்களை விளைத்தான். மணிமேகலையோ, உலக வாழ்க்கையில் ஈடுபடாமல், தனக்கு வந்த துன்பங்களிலிருந்து விடுபட்டாள். மணிமேகலா தெய்வம் அவளை மணிபல்லவம் என்னும் தீவிற்குக் கொண்டு சென்று, அவளுக்குப் பல நன்மைகளை விளைத்தது. அங்கே மணிமேகலை புத்த பீடிகையைக் கண்டு வணங்கித் தன் பழம்பிறப்புச் செய்திகளை அறிந்தாள். மணிமேகலா தெய்வம் அவளுக்கு வேற்று வடிவம் கொள்ளவும் ஆகாய வழிச்செல்லவும் பசியின்றி இருக்கவும் மூன்று மந்திரங்களையும் அருளியது. மணிபல்லவத்தீவில், கோமுகி என்னும் பொய்கையில் முன்னொரு காலத்தில் ஆபுத்திரனால் இடப்பட்ட அமுதசுரபி என்னும் வற்றாத உணவு சுரக்கும் பாத்திரத்தை அவள் பெற்றாள்; பின்னர் மீண்டும் காவிரிப்பூம்பட்டினம் போந்து தன் குருவாகிய அறவண அடிகளைத் தொழுது, நிகழ்ந்த செய்திகளை உரைத்தாள். காயசண்டிகை என்னும் வித்தியாதரப் பெண்ணும் அவளுக்குத் துணையாய் அமைந்தாள். காயசண்டிகை அவ்வூரில் உள்ள ஆதிரை என்னும் கற்பிற்சிறந்த பெண்மணியின் வரலாற்றைக் கூறி, அவள் கையால் முதன்முதல் அமுத சுரபியில் பிச்சை பெற வேண்டும் என்று எடுத்துரைத்தாள். அவ்வாறே மணிமேகலை ஆதிரையிடம் பிச்சை பெற்று, அமுத சுரபியில் எடுக்க எடுக்கக் குறையாமல் உணவு சுரக்கும் பேற்றைப் பெற்றாள். அவள் அதிலிருந்து எடுத்து வழங்கிய சோற்றினால் காயசண்டிகைக்குத் தணியாத யானைத்தீ என்னும் பெரும்பசியும் தணிந்துவிட்டது. பின்பு காயசண்டிகை அவ்வூரில் அறவோர் வாழும் சக்கரவாளக் கோட்டத்தின் பக்கத்தில் உள்ள உலக அறவிக்குச் செல்லுமாறும், ஏழை எளியவர்களுக்கு உணவு வழங்குமாறும் மணிமேகலையை வேண்டிக்கொண்டாள். பின்பு அவள் மணிமேகலையிடம் விடைபெற்றுத் தன் வாழ்விடமாகிய வித்தியாதரர் உலகுக்குச் சென்றாள்.

காயசண்டிகையின் சொற்படியே மணிமேகலை உலக அறவிக்குச் சென்று அமுத சுரபியிலிருந்து எல்லார்க்கும் உணவு வழங்கிய செய்தியை விளக்கிக் கூறுவது இந்த உலக அறவி புக்க காதை.

## அருஞ்சொற்பொருள்

அடி 1. பத்தினிப் பெண்டிர் - கற்பரசியாகிய ஆதிரை. பாத்தூண் - பகுத்துக் கொடுத்து உண்ணும் உணவு.

2. அமலை - சோற்றுத்திரளை.

3. அறத்தின் ஈட்டிய - நல்வழியிற்சேர்த்த

அடி 4. வழிப்படூஉம் செய்கை - பின் உண்டாகும் தன்மை.

5. மன்னுயிர் - நிலை பெற்ற உயிர்.

6. தொலைவில்லா - குறைவில்லாத, தகைமை - தன்மை, இல்லாத்தகைமை—'இல்லா' என்பது ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

7. அகவயிற்று - வயிற்றின் உள்ளே.

8. காரிகை - அழகி (பண்பாகு பெயர்).

9. இட்டது ஆற்று - இட்ட பொருளால் குறையாத. கடும்பசி - பொறுக்க இயலாத பசி.

11. அன்னை - அண்மை விளி, ஆருயிர் மருத்துவி - அரிய உயிரைக் காக்கும் மருந்தை உடையாய்! ஆருயிர் மருந்து - உணவு.

12. துன்னிய - நேர்ந்த, துடைப்பாய் - நீக்குவாய்.

13. அமுதம் - உணவு.

15. காய்பெரும்பசி - வருத்தும் மிக்க பசி, பெரும்பசி - பண்புத்தொகை.

16. 'தொழுதனள்' என்னும் முற்று, 'தொழுது' என எச்சப் பொருள் தருவதால் முற்றெச்சம்.

17. மாசுஇல் - குற்றம் இல்லாத, வால் ஒளி - வெண்மையான ஒளி, சேடி - வித்தியாதரர் வாழும் உலகம். இது வெள்ளி மலையில் உள்ளது ஆதலால், 'வாலொளியுடையது' என்று சிறப்பிக்கப்படுகிறது.

18. காசு - குற்றம், கடிநகர் - காவலையுடைய நகர் (உரிச்சொல் தொடர்).

19. விஞ்சையன் - வித்தியாதரன் (காயசண்டிகையின் கணவன்), உருப்ப - வருத்த.

20. பொதியில் - இதைப் பொதிகை எனவும் பொதிய மலை எனவும் வழங்குவர். காணிய - காணும்பொருட்டு (செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம்).

21. கடுவரல் - விரைவான வருகை, கடும்புனல் - மிக்க நீர் (பண்புத்தொகை), கொழித்த - கரையில் ஒதுக்கிய.

22. இடுமணல் - அலைகளால் ஒதுக்கப்படுகிற மணல் (வினைத்தொகை), கான் யாறு - காட்டாறு.

23. புரிநூல் - முறுக்கிய பூணூல், திரிபுரிவார்சடை - திரிந்து முறுக்குண்ட நீண்ட சடை.

24. மரவுரி - மரப்பட்டையால் செய்த ஆடை.

25. பெண்ணை - பனை மரம், கருங்கனி - கருமையான பழம்.

26. இருங்கனி - பெரிய பழம் (பண்புத்தொகை).

27. தேக்கிலை - தேக்கு மரத்தின் இலை. இதனை உண் கலமாகப் பயன்படுத்தும் வழக்கம் இப்போதும் காணலாம். சேண் ஆறு - நெடுந்தூர வழி.

28. ஆட - நீராட.

அடி 29. உருத்தலின் - பயன் கொடுக்கும் வண்ணம் தோற்றுதலினால்.

31. வேட்கை - விருப்பம்.

33. திப்பியமானது - தெய்வலோகத்திலிருந்து உண்டானது, தூய்மையானது.

34. ஈராறாண்டு - பன்னிரண்டு ஆண்டுகள்.

38. நோன்பு - விரதம், உண்கனி—வினைத்தொகை.

39. அந்தரம் - ஆகாயம்.

40. தந்தித்தீ - யானைத்தீ நோய், தனித்துயர் - ஒப்பற்ற துன்பம்.

42. உறுபசி - மிக்க பசி (உரிச்சொல் தொடர்).

44. இளங்கொடி - இளமையான கொடி போன்ற பெண் (பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை), கெடுத்தனை - நீக்கினாய்.

45. வெம்பசி - கொடுமையான பசி (பண்புத்தொகை).

46. வான் பதி - சிறந்த நகரம் (காஞ்சனபுரம்).

47. துக்கம் - பிறப்பு முதலிய துன்ப நிலைகள், துடைக்கும் - போக்கும், துகள் அறு - குற்றம் நீங்கிய.

48. சக்கரவாளக்கோட்டம் - காவிரிப்பூம்பட்டினத்தில் சுடுகாட்டுப்பகுதியில் உள்ள கோயில்.

49. பகுவாய் - பிளந்த வாய்.

50. உலகஅறவி - ஊரம்பலம். இது காவிரிப்பூம்பட்டினத்தில் சக்கரவாளக்கோட்டத்தில் சம்பாபதி கோயிலின் அமைந்திருந்தது. இது பலரும் வந்து தங்கும் அறச்சாலை.

51. ஊரூராங்கண் - ஊர்தோறும்.

52. அரும்பிணி - தீர்த்தற்கரிய நோய்.

54. வடு - வகிடு, வடுவாழ் கூந்தல் - அன்மொழித்தொகை.

55. ஆயிழை - அன்மொழித்தொகை; இங்கே மணிமேகலையைக் குறிக்கும்.

56. புடை - பக்கம்.

61. ஏற்போர் - பிச்சை பெறுவோர்.

62. ஊண் ஒலி - உணவு உண்ணுதலால் எழுந்த ஆரவாரம்.

63. யாணர் - புது வருவாய், அம்பலம் - பலர் கூடும் பொது இடம் (உலக அறவி), மருங்கு - அம்பலத்தில்.

மருங்கென்—'என்' என்பது ஆசிரியப்பாவின் முடிவைக் குறிக்கும் அசை.

### வினாக்கள்

- பத்தினிப்பெண்டிரிடம் பிச்சை பெற்ற மணிமேகலையின் பிச்சைப் பாத்திரம் எவ்வாறு விளங்கியது?

2. காய சண்டிகையின் யானைத்தீ நோய் எவ்வாறு தீர்ந்தது?
3. பசி நோய் நீங்கிய காயசண்டிகை மணிமேகலைக்குச் சொன்னது யாது?
4. காய சண்டிகையை விருச்சிக முனிவன் சபித்தது ஏன்?
5. விருச்சிக முனிவன், காய சண்டிகை—இவர்களின் வரலாற்றைத் தெளிவாக எழுதுக.
6. விருச்சிக முனிவன் தோற்றத்தை மணிமேகலை எவ்வாறு வருணிக்கிறது?
7. இடஞ்சுட்டி விளக்குக:
   (அ) 'துன்னிய என் நோய் துடைப்பாய்.'
   (ஆ) 'காலால் அந்தக் கருங்கனி சிதைத்தேன்.'
   (இ) 'ஆபுத்திரன் கை அமுத சுரபி இஃது.'
8. தான் உண்ண வைத்திருந்த நாவற்கனியின் சிறப்பைக் குறித்து விருச்சிக முனிவன் சொல்லியது யாது?
9. உலக அறவிபற்றி மணிமேகலை தெரிவிக்கும் செய்தி யாது?
10. காஞ்சனபுரத்திற்குச் செல்லும்பொருட்டு மணிமேகலையிடம் விடைபெற்ற காயசண்டிகை அவளுக்கு உரைத்தது யாது?
11. கடும்பசி, காஞ்சனபுர நகர், நாவற்பழம் என்பவற்றை மணிமேகலை எவ்வாறு வருணிக்கிறது?
12. உலக அறவியில் எத்தகைய மக்கள் குழுமியிருந்தார்கள்?

## 2. கம்பராமாயணம்

### அயோத்தியா காண்டம்

### கங்கைப்படலம்

#### குகனது தோற்றம்

ஆய காலையி னாயிரம் அம்பிக்கு
நாய கன்போர்க் குகனெனும் நாமத்தான்,
தூய கங்கைத் துறைவிடும் தொன்மையான்,
காயும் வில்லினன், கற்றிரள் தோளினன்.

துடியன், நாயினன், தோற்செருப் பார்த்தபே
ரடியன், அல்செறிந் தன்ன நிறத்தினன்,
நெடிய தானை நெருங்கலின் நீர் முகில்
இடியி னோடெழுந் தாலன்ன ஈட்டினன்

பெண்ணை வன்செறும் பிற்பிறங் கிச்செறி
வண்ண வான்மயிர் வார்ந்துயர் முன்கையன்,
கண்ண கன்தட மார்பெனுங் கல்லினன்,
எண்ணெ யுண்ட இருள்புரை மேனியான்.

குகன், இராமனைக் காணுதல்

சிருங்கி பேர மெனத்திரைக் கங்கையின்
மருங்கு தோன்றும் நகருறை வாழ்க்கையன்,
ஒருங்கு தேனொடு மீனுப காரத்தன்,
இருந்த வள்ளலைக் காணவந் தெய்தினான்.

[வாயிலில் நின்று, 'தேவா! நின்கழல் சேவிக்க வந்தேன்' எனக் கூறிய குகனை யார் என இலக்குவன் கேட்டறிந்து, இராமனுக்குச் சொல்ல, இராமன் சொற்படி குகன் வந்து வணங்குதல்]

அண்ணலும் விரும்பி, 'என்பால்
அழைத்திநீ அவனை,' என்றான்;
பண்ணவன், 'வருக!' என்னப்
பரிவினன் விரைவில் புக்கான்,
கண்ணனைக் கண்ணின் நோக்கிக்
கனிந்தன னிருண்ட குஞ்சி
மண்ணுறப் பணிந்து மேனி
வளைத்துவாய் புதைத்து நின்றான். 5

குகன் கையுறைப்பொருளை அறிவித்தல்

"இருத்தி யீண்டு' என்ன லோடும்
இருந்திலன், எல்லை நீத்த
அருத்தியன், 'தேனும் மீனும்
அமுதினுக் கமைவ தாகத்
திருத்திநென் கொணர்ந்தேன்; என்கொல்
திருவுளம்?' என்ன, வீரன்,
விருத்தமா தவரை நோக்கி
முறுவலன் விளம்ப லுற்றான்: 6

இராமன் கையுறையைப் புகழ்தல்

'அரியதாம் உவப்ப வுள்ளத்
தன்பினா லமைந்த காதல்
தெரிதரக் கொணர்ந்த வென்றால்
அமிழ்தினுஞ் சீர்த்த வன்றே?

பரிவினின் தழீஇய வென்னின்
பவித்திரம்; எம்ம ஞேர்க்கும்
உரியன; இனிதின் நாமும்
உண்டென மன்ருே?' என்ருன். 7

நாவாயுடன் வரப் பணித்தல்

சிங்கவே றனைய வீரன்
பின்னரும் செப்பு வான், 'யாம்
இங்குறைந் தெறிநீர்க் கங்கை
ஏறுதும் நாளை; யாணர்ப்
பொங்குநின் சுற்றத் தோடும்
போயுவந் தினிதுன் னூரில்
தங்கிநீ நாவா யோடும்
சாருதி விடியல்' என்ருன். 8

குகனைத் தன்னுடன் தங்க இராமன் அருளுதல்

கார்குலாம் நிறத்தான் கூற,
காதல னுணர்த்து வான்: 'இப்
பார்குலாம் செல்வ! நின்னை
இங்ஙனம் பார்த்த கண்ணை
ஈர்கிலாக் கள்வ னேன்யான்,
இன்னலின் இருக்கை நோக்கித்
தீர்கிலே னுன தைய!
செய்குவென் அடிமை' என்ருன். 9

கோதைவிற் குரிசில் அன்னுன்
கூறிய கொள்கை கேட்டான்;
சீதையை நோக்கித் தம்பி
திருமுகம் நோக்கித் 'தீராக்
காதல னுகும்' என்று
கருணையின் மலர்ந்த கண்ணன்,
'யாதினு மினிய நண்ப!
இருத்தியீண் டெம்மொ டெ'ன்ருன். 10

இராமன், குகனுக்கிட்ட கட்டளை

நாள்முதற் கமைந்த யாவும்
நயந்தன னியற்றி நாமத்
தோள்முதற் கமைந்த வில்லான்
மறையவர் தொடரப் போனுன்;

ஆளமுதற் கமைந்த கேண்மை
அன்பனை நோக்கி, 'ஐய!
கோள்முதற் கமைந்த நாவாய்
கொணருதி விரைவின்' என்றான். 11

### மூவரும் கங்கையைக் கடத்தல்

சிந்தனை யுணர்கிற்பான், சென்றனன் விரைவோடும்;
தந்தனன் நெடுநாவாய்; தாமரை நயனத்தான்
அந்தணர் தமையெல்லாம், அருளுதிர் விடை,' என்னு
இந்துவின் நுதலாளோ டிளவலொ டினிதேறு. 12

'விடுநனி கடிதெ' தன்றான்; மெய்யுயி ரனையானும்,
முடுகினன் நெடுநாவாய்; முரிதிரை நெடுநீர்வாய்க்
கடிதினின் மடவன்னக் கதியது செல,நின்றார்
இடருற, மறையோரும் எரியுறு மெழுகானார். 13

### இராமன் சித்திரகூடத்திற்கு வழி வினவுதல்

அத்திசை யுற்றையன் அன்பனை முகநோக்கி,
'சித்திர கூடத்தின் செல்நெறி பகர்,' என்னப்
பத்தியி னுயிரீயும் பரிவினன் அடிதாழா,
'உத்தம! அடிநாயேன் ஓதுவ துளதெ' தன்றான். 14

### குகனது வேண்டுகோள்

'நெறியிடு நெறிவல்லேன்; நேடினென் வழுவாமல்,
நறியன கனிகாயும் நறவிவை தரவல்லேன்;
உறைவிட மமைவிப்பேன்; ஒருநொடி வரையும்மைப்
பிறிகிலன்; உடனேகப் பெறுகுவ னெனின்நாயேன். 15

'திருவுள மெனின்மற்றென் சேனையு முடனேகொண்டு
ஒருவலென் ஒருபோதும், உறைகுவென்; உளரானார்
மருவல ரெனின், முன்னே மாள்குவென் வசையில்லேன்;
பொருவரு மணிமார்பா! போதுவென் உடன்' என்றான். 16

### இராமன், குகனுடன் தோழமை பாராட்டல்

அன்னவ னுரைகேளா அமலனும் உரைநேர்வான்,
'என்னுயி ரனையாய்நீ; இளவலுன் னிளையான்; இந்
நன்னுத லவள்நின்கேள்; நளிர்கடல் நிலமெல்லாம்
உன்னுடை யது;நானுன் தொழிலுரி மையின்உள்ளேன். 17

'துன்புள தெனினன்றே சுகமுள ததுவன்றிப்
பின்புள திடைமன்னும் பிரிவுள தெனவுன்னேல்;
முன்புளெம் ஒருநால்வேம்; முடிவுள தெனவுன்னு
அன்புள இனிநாமோர் ஐவர்கள் உளராணோம். 18

'அங்குள கிளைகாவற் கமைதியி னுளனும்பி;
இங்குள கிளைகாவற் கியாருளர்? இசையாய்நீ;
உன்கிளை எனதன்றே? உறுதுயர் உறலாமோ?
என்கிளை யிதுகாஎன் ஏவலின் இனி'தென்றான். 19

### மூவரும் வனத்துள் செல்லுதல்

பணிமொழி கடவாதான் பருவரல் இகவாதான்
பிணியுடை யவனென்னும் பேதினன் விடைகொண்டான்;
அணியிழை மயிலோடும் ஐயனும் இளையோனும்
திணிமரம் நிறைகானில் சேணுறு நெறிசென்றார். 20

—கம்பநாடக

## குறிப்புரை

### கம்பராமாயணம்

[நூல் வரலாறும், ஆசிரியர் வரலாறும், பொது வாழ்த்துக் குறிப்புரையில் காண்க.]

#### நூலின் அமைப்பு

கம்பராமாயணம், பாலகாண்டம், அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம், கிட்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், யுத்த காண்டம் என்னும் ஆறு பெரும் பிரிவுகளை உடையது. ஒவ்வொரு காண்டத்திலும் உள்ள சிறிய உட்பிரிவுகளுக்குப் படலம் என்பது பெயர். பாடப்பகுதியாகிய கங்கைப்படலம், அயோத்தியா காண்டத்தில் உள்ளது. கம்பராமாயணம் பதினாயிரம் பாடல்கள் கொண்ட ஒப்பற்ற பெருங்காப்பியம்.

'யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
வள்ளுவர்போல் இளங்கோ வைப்போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை;
உண்மை;வெறும் புகழ்ச்சி இல்லை.'

என்று பாரதியார், கம்பரைப் பாராட்டுகிறார்.

## அயோத்தியா காண்டம்

### கங்கைப்படலம்

அயோத்தி மன்னனுன தசரதன் மக்கள் இராமன், இலக்குவன், பரதன், சத்துருக்கினன் என்னும் நால்வர். இவர்கள் இளமைப் பருவத்தில் கற்பன கற்றுக் காளைப் பருவம் உற்றுர்கள். தசரதன் தான் முதுமையடைந்தமையால் இராமனுக்கு முடி சூட்டக் கருதி ஆவன செய்தான்.

இதற்கிடையில் அவனுடைய இளைய மனைவி கைகேயியின் சூழ்ச்சியால், அவள் மகன் பரதன் முடி சூடலும், இராமன் பதினுன்கு ஆண்டுகள் கானகத்தில் வாழலும் நேர்ந்தன. தந்தையின் கட்டளையை ஏற்று இராமன் தன் மனைவி சீதையோடும் தம்பி இலக்குவனேடும் காட்டிற்குச் சென்றுன். அங்குக் கங்கைக் கரையில் முனிவர்கள் வாழும் தவப்பள்ளி ஒன்றில் மூவரும் தங்கியிருந்தனர். அச்சமயம் கங்கையில் ஓடமோட்டும் வேடுவர் தலைவனுகிய குகன், இராமனைக் காண வந்து, அவனது அன்புக்கு ஆளானுன். குகன் இராமனைக் கண்டு தொழுது, அவனுக்குத் தொண்டு செய்ததும், இராமன் முதலியோர் கங்கையைக் கடப்பதற்கு உதவியதுமான செய்திகள் கங்கைப்படலத்தில் கூறப்பட்டுள்ளன. குகனேடு இராமன் தோழமை கொண்டமையை இப்படலம் விளக்குகிறது.

### அருஞ்சொற்பொருள்

1. ஆயகாலையின் - (இராமன், இலக்குவன் முதலியோர் தவப் பள்ளியில் தங்கியிருந்த) அந்தக் காலத்தில், அம்பி - மரக்கலம், நாயகன் - தலைவன், நாமம் - பெயர், 'நாமத்தான், தொன்மையான்' முதலியன குறிப்பு வினைமுற்று. துறை - நீரைக் கடந்து செல்வதற்கான தோணிகள் இருக்கும் இடம். இதனை ஓடத்துறை என வழங்குவர்: காயும் - வருத்தும், கல் திரள் தோளினுன் - மலை போன்று திரண்ட தோள்களை உடையவன்.

2. துடியன் - துடி என்னும் உடுக்கையை உடையவன், ஆர்த்த - அணிந்த, அல் - இருள் (கருமை), செறிந்தன்ன - நெருங்கிய வடிவு கொண்டாற்போன்ற, அன்ன - உவம உருபு, ஈட்டினுன் - வலிமையுடையவன்.

3. பெண்ணை - பனை, செறும்பு - சிறுய், வன்செறும்பு - பண்புத்தொகை, பிறங்கி - விளங்கி, வண்ணம் - அழகு, கண் அகன் தட மார்பு - இடம் பரந்த பெரிய மார்பு (தட - உரிச்சொல்), மார்பெனுங்கல் - உருவகம், எண்ணெய் உண்ட - எண்ணெய் பூசப்பட்ட, புரை - உவம உருபு.

4. சிருங்கிபேரம் - குகனது தலை நகரம், கங்கையின் மருங்கு - கங்கையின் கரையில், ஒருங்கே - ஒருசேர, ஒடு - எண்ணுப்பொருளில் வந்துள்ளது, மீன் உபகாரத்தன் - மீனைக் காணிக்கைப் பொருளாக ஏந்தியவன், இருந்த வள்ளல் - (முனிவர் உறையுளில்) இருந்த இராமன்.

5. அண்ணல் - பெருமையிற் சிறந்தவன், அழைத்தி - அழைப்பாய் (முன்னிலையொருமை வினைமுற்று), பண்ணவன் - நற்குணமுடையவன் (இலக்குமணன்), பரிவினன் - அன்புமிக்கவன் (குகன்), புக்கான் - புகுந்தான், புக்கான் களித்தனன் - புகுந்து மகிழ்ந்தான், முற்றுகள் சேர்ந்து வரும்போது முன்னது எச்சப் பொருள் தந்து நிற்கும். இது முற்றெச்சம் எனப்படும். 'புகுந்து நோக்கிக் களித்தனன்' என்பது முடிபு. கண்ணன் - கண் அழகு உடைய இராமன், இருண்ட குஞ்சி - கரிய தலை மயிர்.

6. இருத்தி - இருப்பாய் (முன்னிலை ஒருமை வினைமுற்று), எல்லை நீத்த - அளவு கடந்த, அருத்தியன் - அன்புடையவன், அமுதினுக்கு - உணவினுக்கு, திருத்தினென் கொணர்ந்தேன் - திருத்திக் கொண்டுவந்தேன் (முற்றெச்சம்), திருத்தி - ஆராய்ந்து, திருவுளம் - மனக்கருத்து, வீரன் - இராமபிரான், விருத்த மாதவர் - வயது முதிர்ந்த தவசியர், முறுவலன் - புன்சிரிப்புடையவனாய் (குறிப்பு வினைமுற்று), முறுவலன் விளம்பலுற்றான் - குறிப்பு முற்றெச்சம், விளம்பலுற்றான் - சொல்லத் தொடங்கினான்.

7. அரிய - அரியவை, காதல் - அன்பு, தெரிதர - புலப்பட, கொணர்ந்த - கொண்டு வந்த, பவித்திரம் - தூய்மையானவை, எம்மனோர்க்கும் - எம் போன்றோர்க்கும், உண்டனெம் - உண்டதற்கு ஒப்பாகக்கொண்டேன்.

8. சிங்க ஏறு - ஆண் சிங்கம், அனைய - ஒத்த, வீரன் - இராமன், செப்புவான் - சொல்லுவான், ஏறுதும் - ஏறுவோம், யாணர் - அழகு, நாவாய் - மரக்கலம், விடியல் - காலை, சாருதி - சேர்வாய் (முன்னிலை ஒருமை வினைமுற்று).

9. கார் குலாம் நிறத்தான் - கரிய நிறத்துடன் விளங்கும் இராமன், காதலன் - அன்புள்ளவன் (குகன்), செல்வ - விளி, பார் - பூமி, ஈர்கிலா - பிடுங்கி எறிய இயலாத (ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்), கள்வனேன் - கள்ளத்தனமாய் நடிக்கிற யான், இருக்கை - இருப்பிடம், தீர்கிலேன் - செல்லத் துணிந்திலேன், செய்குவென் - தன்மை ஒருமை வினைமுற்று.

10. கோதை - (வெற்றி) மாலை, குரிசில் - ஆடவரில் சிறந்தோன், அன்னான் - அந்தக் குகன், கொள்கை - எண்ணம், தீராக் காதலன் - நீங்காத அன்புடையவன் (ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்), நண்ப - விளி, இருத்தி - முன்னிலை வினைமுற்று.

11. நாள் முதல் - விடியற்காலம், நாள் முதற்கு அமைந்த யாவும் - காலைக்கடன்கள் எல்லாம், நயந்தனன் இயற்றி - விரும்பிச் செய்து, நயந்தனன் - முற்றெச்சம், நாமம் - அச்சம், தோள் முதற்கு - தோளிடத்தில், ஆள் முதற்கு - அடிமைத்தன்மைக்கு, அன்பன் - குகன், ஐய - விளி, கோள் முதற்கு - கொண்டு செல்வதற்கு, கொணருதி - கொண்டு—வருவாய் (முன்னிலை ஒருமை வினைமுற்று).

12. சிந்தனை - கருத்து, உணர்கிற்பான் - உணர வல்லவனாகிய குகன் (வினையாலணையும் பெயர்), நயனத்தான் - கண்ணை

உடையவன், தாமரை - முதலாகு பெயர், இந்து - பிறைச்சந்திரன், நுதலாள் - நெற்றியை உடையாள், ஏறு - ஏறி ('செய்யா' என்னும் வாய்பாட்டு வினையெச்சம்). இது குளகப்பாட்டு.

**13.** நனி - மிகுதி (உரிச்சொல்), கடிது - விரைவில், முடுகினன் - விரைந்து செலுத்தினன், முரிதிரை - மடங்குகின்ற அலைகள், நெடுநீர் - மிகுந்த வெள்ளம், மட அன்னம் - இள அன்னம், கதி - இயக்கம் (போக்கு), நின்றார் - கரையில் நின்றாராகிய தவத்தோர் (வினையாலணையும் பெயர்).

**14.** அத்திசை - அந்தக்கரை, சித்திரகூடம் - சித்திரகூடமலை, தாழா - தாழ்ந்து (வணங்கி), 'செய்யா' என்னும் வாய்பாட்டு வினையெச்சம், உத்தம - விளி, ஓதுவது - சொல்லத்தக்கது (வினையாலணையும் பெயர்).

**15.** நெறி - வழி, இடுநெறி - புதிய வழி, நேடினென் - தேடினேன், வழுவாமல் - தவறாமல், நறியன - மிகச் சிறந்தன, நறவு - தேன், உறைவிடம் - தங்கும் இடம், நொடி - கணப்பொழுது, பிறிகிலன் - பிரிய மாட்டேன் (எதுகை நோக்கி இடையின ரி வல்லினமாய் மாறியது), உடன் ஏகப் பெறுவனேல் - உடன் வரும் பேற்றைப் பெற்றால், நாயேன் - நாய்போன்று கடைப்பட்டவன் (குகனது பணிமொழி).

**16.** திருவுளம் எனின் - நீங்கள் விரும்பினால், ஒருவலென் - நீங்கேன், உறைகுவென் - உடன் தங்கியிருப்பேன், மருவலர் - பகைவர், மாள்குவென் - இறப்பேன், பொருவரு - ஒப்பரிய, மணி - அழகிய, மார்ப - விளி, போதுவென் - வருவேன் (புகுதுவென் என்பதன் மரூஉ).

**17.** அமலன் - குற்றமற்றவன், உரைநேர்வான் - மறுமொழி கூறுவான், இளவல் - தம்பி (இலக்குவன்), கேள் - உறவு, நளிர் கடல் - குளிர்ச்சி மிக்க கடல், உன் உரிமையின் உளன் - உன்னுடைய ஏவல் தொழிலுக்கு அடங்கியவன்.

**18.** துன்பு - துன்பம், பின்புளது - பின்னர் உண்டாகப் போவது, இடை - இடைப்பட்ட காலத்தில், உன்னேல் - நினைத்து வருந்தாதே, நால்வேம் - நால்வராய் இருந்தோம்.

**19.** அங்குள கிளை - அயோத்தியில் உள்ள சுற்றத்தார், உம்பி - உன் இளையவன் (பரதன்), இசையாய் - சொல்வாயாக, கிளை - சுற்றம், உறுதுயர் - மிக்க துயரம், உறு - உரிச்சொல், கா - காப்பாற்று.

**20.** பணி மொழி - கட்டளைச்சொல், கடவாதான் - தவறாதவன், பருவரல் - துன்பம், இகவாதான் - நீங்காதவன், பேதுனன் - மயங்கினனாய், விடை கொண்டான் - விடை பெற்றுக் கொண்டான், அணியிழைமயில் - அன்மொழித்தொகை, ஐயன் - தலைவன் (இராமன்), திணி மரம் - அடர்ந்த மரங்கள், சேணுறு நெறி - மிக்க தொலைவில் செல்கிற வழி.

## வினாக்கள்

1. குகனின் உருவத் தோற்றத்தைக் கம்பர் எவ்வாறு வருணிக்கிறார்?
2. இராமனைக் காணவந்த குகன் கொண்டுவந்த கையுறைப் பொருள்கள் எவை?
3. குகன் இராமனை எவ்வாறு பணிந்து போற்றினான்?
4. குகன் அன்புடன் கொண்டுவந்த காணிக்கைப்பொருள்களைக் குறித்து இராமன் சொன்னது யாது?
5. சிங்கவேறனைய வீரன் யார்? அவன் செப்பியது யாது?
6. குகனின் மேனி நிறத்திற்குக் கம்பர் காட்டும் உவமைகளின் நயத்தை விளக்குக.
7. இராமன் தன்னுடன் இருந்தார் கருத்தையும் குறிப்பினால் நோக்கி உரையாடும் பாங்கிற்கு இரண்டு எடுத்துக்காட்டுகள் தருக.
8. இடஞ்சுட்டி விளக்குக:

    அ. 'இருத்தியீண்டு.'
    ஆ. 'இனிதின் நாமும் உண்டனெம் அன்றோ?'
    இ. 'நாவா யோடும் சாருதி விடியல்.'
    ஈ. 'யாதினும் இனிய நண்ப! இருத்தியீண்டெம்மொடு.
    உ. 'சித்திர கூடத்தின் செல்நெறி பகர்.'
    ஊ. 'உத்தம! அடிநாயேன் ஓதுவதுளது.'
    எ. 'பொருவரு மணிமார்பா! போதுவென் உடன்.'
    ஏ. 'துன்புள தெனினன்றோ சுகமுளது?'

9. குகன் இராமனின் இனிய நண்பன் என்பதனைக் கம்பர் எவ்வாறெல்லாம் சுட்டிக் காட்டுகின்றார்?
10. கங்கையில் ஓடம் சென்ற வகையைக் கம்பர் எவ்வாறு வருணிக்கின்றார்?
11. கங்கையின் மறுகரையில் இராமன் முதலியோரைக் கொண்டு சேர்த்தபின் குகன் விடுத்த வேண்டுகோள் யாது?
12. இராமன் குகனுடன் தோழமை பாராட்டிப் பேசியவற்றைத் தொகுத்தெழுதுக.
13. குகன் தன்னுடன் வருதல் முறையன்று என்பதனை இராமன் எவ்வாறு சுட்டிக்காட்டினான்?
14. குகனைத் தன் உடன்பிறந்தவனாக ஏற்றுக்கொண்டு இராமன் பேசியது யாது?
15. பணிமொழி கடவாதான் யார்? அவனுக்குப் பணித்த மொழி யாது?
16. குகன், இராமன் ஆகிய பாத்திரங்களின் வாயிலாகக் கம்பர் சித்திரிக்கும் சமூகநல உணர்வினைப் புலப்படுத்துக.

## 3. பெரிய புராணம்

### மெய்ப்பொருள் நாயனார் புராணம்

#### மெய்ப்பொருள் நாயனாரின் அரசு மாட்சிமையும் சிவத்தொண்டும்

சேதிநன் னாட்டு நீடு திருக்கோவ லூரின் மன்னி
மாதொரு பாகர் அன்பின் வழிவரு மலாடர் கோமான்
வேதநன் னெறியின் வாய்மை விளங்கிட மேன்மை பூண்டு
காதலா லீசர்க் கன்பர் கருத்தறிந் தேவல் செய்வார். 1

அரசியல் நெறியின் வந்த அறநெறி வழாமல் காத்து
வரைநெடுந் தோளால் வென்று மாற்றலர் முனைகள் மாற்றி
உரைதிறம் பாத நீதி யோங்குநீர் மையினில் மிக்கார்
திரைசெய்நீர்ச் சடையான் அன்பர் வேடமே சிந்தை செய்வார். 2

மங்கையைப் பாக மாக உடையவர் மன்னுங் கோயில்
எங்கணும் பூசை நீடி ஏழிசைப் பாடல் ஆடல்
பொங்கிய சிறப்பின் மல்கப் போற்றுதல் புரிந்து வாழ்வார்
தங்கள் நாயகருக் கன்பர் தாளலால் சார்பொன் றில்லார். 3

தேடிய மாடு நீடு செல்வமும் தில்லை மன்றுள்
ஆடிய பெருமான் அன்பர்க் காவன ஆகும் என்று
நாடிய மனத்தி னோடு நாயன்மார் அணைந்த போது
கூடிய மகிழ்ச்சி பொங்கக் குறைவறக் கொடுத்து வந்தார். 4

#### நாயனாருடன் முத்தநாதன் என்பவன் போர் செய்து தோற்றபின்பு வெல்வதற்குச் சூழ்ச்சி செய்தல்

இன்னவா றொழுகு நாளில் இகல்திறம் புரிந்தோர் மன்னன்
அன்னவர் தம்மை வெல்லும் ஆசையால் அமர்மேற் கொண்டு
பொன்னணி ஓடை யானை பொருபரி காலாள் மற்றும்
பன்முறை இழந்து தோற்றுப் பரிபவப் பட்டுப் போனான். 5

இப்படி இழந்த மாற்றான் இகலினால் வெல்ல மாட்டான்
மெய்ப்பொருள் வேந்தன் சீலம் அறிந்துவெண் நீறு சாத்தும்
அப்பெரு வேடங் கொண்டே அற்றத்தில் வெல்வா னாகச்
செப்பரு நிலைமை எண்ணித் திருக்கோவ லூரிற் சேர்வான். 6

#### முத்தநாதனின் பொய்ச் சிவ வேடம்

மெய்யெலாம் நீறு பூசி வேணிகள் முடித்துக் கட்டிக்
கையினிற் படைக ரந்த புத்தகக் கவளி யேந்தி
மைபொதி விளக்கே என்ன மனத்தினுள் கறுப்பு வைத்துப்
பொய்தவ வேடங் கொண்டு புகுந்தனன் முத்த நாதன்.

### 'முத்தநாதன், நாயனார் மாளிகையுள் செல்லுதல்

கடையுடைக் காவ லாளர் கைதொழு தேற நின்றே
'உடையவர் தாமே வந்தார் உள்ளெழுந் தருளும்,' என்னத்
தடைபல புக்க பின்பு தனித்தடை நின்ற தத்தன்,
'இடைதெரிந் தருளவேண்டும், துயில்கொளும் இறைவன்,'
[என்றான். 8

என்றவன் கூறக் கேட்டே, 'யானவற் குறுதி கூற
நின்றிடு நீயும்,' என்றே அவனையும் நீக்கிப் புக்குப்
பொன்திகழ் பள்ளிக் கட்டில் புரவலன் துயில, மாடே
மன்றலங் குழல்மென் சாயல் மாதேவி இருப்பக் கண்டான். 9

### முத்தநாதன் பொய் வேடத்தை மெய்வேடம் என்றெண்ணி நாயனார் போற்றி அவனிடம் ஆகமம் கேட்டல்

கண்டுசென் றணையும் போது கதுமென எழுந்து தேவி
வண்டலர் மாலை யானை எழுப்பிட, உணர்ந்து மன்னன்,
அண்டர்நா யகனார் தொண்ட ராமெனக் குவித்த செங்கை
கொண்டிழிந் தெதிரே சென்று கொள்கையின் வணங்கி நின்று. 10

'மங்கலம் பெருக மற்றென் வாழ்வுவந் தணைந்த தென்ன
இங்கெழுந் தருளப் பெற்ற தென்கொலோ?' என்று கூற,
'உங்கள்நா யகனார் முன்னம் உரைத்தஆ கமநூல் மண்மேல்
எங்குமில் லாத தொன்று கொடுவந்தேன் இயம்ப,' என்றான். 11

'பேறெனக் கிதன்மேல் உண்டோ பிரானருள் செய்த இந்த
மாறிலா கமத்தை வாசித் தருள்செய வேண்டும்,' என்ன,
'நாறுபூங் கோதை மாது தவிரவே நானும் நீயும்
வேறிடத் திருத்தல் வேண்டும்,' என்றவன் விளம்ப, வேந்தன். 12

திருமக ளென்ன நின்ற தேவியார் தம்மை நோக்கிப்
பரிவுடன் விரைய வந்தப் புரத்திடைப் போக ஏவித்
தருதவ வேடத் தானைத் தவிசின்மே லிருத்தித் தாமும்
இருநிலத் திருந்து போற்றி, 'இனியருள் செய்யும்,' என்றார். 13

### முத்தநாதன் கொலைச் செயலும் நாயனாரது உயர்குணச் செந்நெறியும்

கைத்தலத் திருந்த வஞ்சக் கவளிகை மடிமேல் வைத்துப்
புத்தக மவிழ்ப்பான் போன்று புரிந்தவர் வணங்கும் போதில்
பத்திரம் வாங்கித் தான்முன் நினைந்தவப் பரிசே செய்ய,
'மெய்த்தவ வேட மேமெய்ப் பொருள்!' எனத் தொழுது
[வென்றார். 14

மறைத்தவன் புகுந்த போதே மனம்அங்கு வைத்த தத்தன்
இறைப்பொழு தின்கட் கூடி வாளினல் எறிய லுற்ருன்
நிறைத்தசெங் குருதி சோர வீழ்கின்ருர், நீண்ட கையால்
தறைப்படும் அளவில், 'தத்தா, நமர்!' எனத் தடுத்து
[வீழ்ந்தார். 15

வேதனை யெய்தி வீழ்ந்த வேந்தரால் விலக்கப் பட்ட
தாதனும் தத்தன் தானும் தலையினல் வணங்கித் தாங்கி,
'யாதுநான் செய்கேன்?' என்ன, 'எம்பிரான் அடியார் போக
மீதிடை விலக்கா வண்ணம் கொண்டுபோய் விடுநீ,' என்ருர். 16

அத்திறம் அறிந்தா ரெல்லாம், 'அரசனைத் தீங்கு செய்த
பொய்த்தவன் றன்னைக் கொல்வோம்!' எனப்புடை சூழ்ந்த போது,
தத்தனு மவரை எல்லாம் தடுத்துடன் கொண்டு போவான்,
'இத்தவன் போகப் பெற்ற திறைவன தாணை,' என்ருன். 17

அவ்வழி அவர்க ளெல்லாம் அஞ்சியே யகல நீங்கச்
செவ்விய நெறியில் தத்தன் திருநகர் கடந்து போந்து
கைவடி நெடுவாள் ஏந்தி ஆளுருக் கானஞ் சேர
வெவ்வினைக் கொடியோன் தன்னை விட்டபின் மீண்டு
[போந்தான். 18

மற்றவன் கொண்டு போன வஞ்சனை வேடத் தான்மேல்
செற்றவர் தம்மை நீக்கித் தீதிலா நெறியில் விட்ட
சொற்றிறங் கேட்க வேண்டிச் சோர்கின்ற ஆவி தாங்கும்
கொற்றவன் முன்பு சென்ருன், கோமகன் குறிப்பில் நின்ருன். 19

சென்றடி வணங்கி நின்று, 'செய்தவ வேடங் கொண்டு
வென்றவற் கிடையூ றின்றி விட்டனன்,' என்று கூற,
'இன்றெனக் கையன் செய்த தியார்செய்ய வல்லார்!' என்று
நின்றவன் றன்னை நோக்கி நிறைபெருங் கருணை கூர்ந்தார். 20

### சிவபெருமான், நாயனுர்க்குக் காட்சியளித்து, அருட்கழல் சேர்த்துக்கொள்ளல்

தொண்டனுர்க் கிமயப் பாவை துணைவனு ரவர்முன் தம்மைக்
கண்டவா றெதிரே நின்று காட்சிதந் தருளி மிக்க
அண்டவா னவர்கட் கெட்டா அருட்கழல் நீழல் சேரக்
கொண்டவர் இடைய ருமல் கும்பிடுங் கொள்கை யீந்தார். 21

—சேக்கிழார்

## குறிப்புரை

### பெரிய புராணம்

பெரிய புராணம் இயற்றியவர் சேக்கிழார். இவர் தொண்டை மண்டலத்தில், புலியூர்க்கோட்டத்துக் குன்றத்தூரில், வேளா

ளர் மரபில், சேக்கிழார் குடியில் தோன்றியவர். இவருடைய பிள்ளைத் திருநாமம் அருண்மொழித்தேவர் என்பது. இவர் காலத்தில் இருந்த அநபாய சோழன் (இரண்டாம் குலோத்துங்கன்) இவரது புலமைத் திறத்தை வியந்து, இவரைத் தன் முதலமைச்சராக்கி, உத்தமசோழப்பல்லவன் என்ற பட்டப் பெயரையும் சூட்டினன். இவ்வேந்தனுடைய வேண்டுகோளுக்கிரங்கி, இவர் இப் புராணம் பாடி முடித்தார். இதனையறிந்த வேந்தன் உளமகிழ்ந்து சேக்கிழாருக்குப் பல சிறப்புகள் செய்து, தொண்டர்சீர் பரவுவார் என்ற சிறப்புப் பெயரையும் சூட்டி, இவரைப் பாராட்டினன். சேக்கிழாரின் காலம் பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதி என்பர்.

பெரிய புராணம் என்னும் இந்நூல், பெருமை பெற்ற சிவனடியார்களின் வரலாற்றினை உணர்த்துவதாகும். தனியடியார் அறுபத்து மூவர், தொகையடியார் ஒன்பதின்மர் எனச் சிவனடியார் எழுபத்திருவராவர். பெரிய புராணத்திற்குச் சேக்கிழார் இட்ட பெயர் திருத்தொண்டர் புராணம் என்பதேயாகும். இந்நூல் சைவத் திருமுறைகளுள் பன்னிரண்டாம் திருமுறை ஆகும். இஃது இரண்டு காண்டங்களாகப் பிரிக்கப்பட்டுத் 'திருமலைச் சருக்கம்' முதல் 'வெள்ளானை சருக்கம்' ஈறாகப் பதின்மூன்று சருக்கங்களையும் 4286 பாடல்களையும் கொண்டுள்ளது. ஈண்டுப் பாடப் பகுதியாக அமைந்த மெய்ப்பொருள் நாயனார் புராணம் முதற் காண்டத்தில் தில்லைவாழந்தணர் சருக்கத்தில் ஐந்தாவது புராணமாகும்.

## மெய்ப்பொருள் நாயனார் புராணம்

சேதி நாட்டில் திருக்கோவலூரில் மெய்ப்பொருள் நாயனார் என்ற மன்னர் வாழ்ந்துவந்தார். அவர் சிவனடியாரின் திருவேடத்தினையே மெய்ப்பொருள் எனக்கொண்டு வாழ்ந்து வந்தமையால், 'மெய்ப்பொருள் நாயனார்' என வழங்கப்பட்டார். அவர் சிவனடியார்களிடம் பக்தி பூண்டு, அவர்களுக்கு வேண்டிய பொருளையெல்லாம் அளித்துவந்தார். அவர் பகைவர் பலரை வென்று அறநெறி மாறாமல் அரசாண்டு வந்தார். முத்தநாதன் என்பவன் நாயனார்மீது பகைமைகொண்டு பலமுறை போர்செய்து தோல்வியுற்றான். பிறகு அவன் நாயனாரை வஞ்சனையால் வெல்ல எண்ணி ஒரு சிவனடியார் வேடங்கொண்டு உடைவாளை மறைத்து வைத்த புத்தகக் கட்டினை எடுத்துக்கொண்டு மெய்ப்பொருள் நாயனாரை அடைந்தான். நாயனார் அவனை வரவேற்று உபசரித்து அவன் வந்த காரணம் யாது எனக் கேட்டார். அதற்கு முத்தநாதன், 'சிவபெருமான் அருளிய ஆகமநூல் ஒன்றை உமக்குப் போதிக்க வந்தேன்; அதனைத் தாங்கள் தனியாக இருந்து கேட்க வேண்டும்,' என்றான். அதனை உண்மை என்று கருதி நாயனார் வணங்கி நிற்க, வஞ்சகமே நெஞ்சமாகக்கொண்ட முத்தநாதன் தான் மறைத்து வைத்திருந்த வாளால் நாயனாரைக் குத்தினான். முத்தநாதன் செய்த கொடுமையைக் கண்ட தத்தன் என்ற காவலன் முத்தநாதனைக் கொல்ல முயன்றான். அப்போது இரத்தம் பெருகிக் கீழே விழும் நாயனார் அவனைத் தடுத்து, 'தத்தா இவர் நம்மவர்: இவருக்கு எத்தகைய தீங்கும் நேராமல் காவலுடன்

அழைத்துச் சென்று நமது நகர எல்லையைக் கடந்து விட்டு வருக,' எனக் கட்டளை இட்டார். தத்தன் அவ்வாறே செய்து நாயனாரிடம் சென்று தான் அவரது கட்டளையை நிறைவேற்றிய செய்தியை அவரிடம் தெரிவித்தான். அப்போது நாயனார் மனம் மகிழ்ந்து தத்தனைப் பாராட்டினார். பின்னர், 'மெய்த்தவவேடமே மெய்ப்பொருள்' எனக்கொண்ட நாயனார் இறைவன் திருவடி நிழலை அடைந்தார்.

## அருஞ்சொற்பொருள்

1. மன்னி - நிலையாக வாழ்ந்து, மாது ஒரு பாகர் - உமா தேவியாரைத் தம் இடப் பாகத்தில் கொண்ட சிவபெருமான். மலாடர் கோமான் - மலையமான் என்ற நாட்டுக்குத் தலைவரான மெய்ப்பொருள் நாயனார் (மலையமான் நாடு மலாடு என வந்தது மரூஉமொழி), நன்னெறி - பண்புத்தொகை.

2. அறநெறி - இருபெயரொட்டுப் பண்புத்தொகை, வரை - மலை (மும்முடியாகுபெயர்), உரை திறம்பாத - சொல் தவறாத. நீர்மை - நற்குணம், திரை - அலை, செய்நீர் - வினைத்தொகை.

3. மன்னும் - நிலைபெற்ற, மல்க - நிறைய, பாடல் ஆடல் - உம்மைத் தொகை, போற்றுதல் புரிந்து - பாதுகாத்து, தங்கள் நாயகருக்கு அன்பர் - தங்கள் தலைவரான சிவபெருமானுக்கு அடியவர்கள், தாள் - திருவடி.

4. மாடு - பொன், நீடு செல்வம் - வினைத்தொகை, தில்லை மன்றுள் ஆடிய பெருமான் - சிதம்பரத்தில் ஞானசபையில் திரு நடனமாடும் சிவபெருமான், நாயன்மார் - சிவனடியார்கள்.

5. இகல்திறம் புரிந்து - பகைமை கொண்டு, அமர் - போர், பொன் அணி ஓடை - பொன்னால் செய்யப்பட்ட அழகுடைய நெற்றிப்பட்டம், பொருபரி - போர் செய்யும் குதிரை (வினைத் தொகை), பரிபவம் - அவமானம்.

6. மாற்றான் - பகைவன், இகல் - போர், மாட்டான் - முற்றெச்சம், சீலம் - நல்லொழுக்கம், அற்றம் - தக்க சமயம், செப்பரு நிலைமை - செப்ப அரு நிலைமை (அகரம் தொக்கது தொகுத்தல் விகாரம்).

7. வேணிகள் - சடைகள், படைகரந்து - உடைவாள மறைத்து வைக்கப்பட்ட, புத்தகக் கவளி - இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கத்தொகை, கவளி - பை, மைபொதி - கருமை நிறத்தைத் தன்னுள்ளே கொண்டிருக்கும். பொதிவிளக்கு - வினைத்தொகை, கறுப்பு - வஞ்சனை.

8. கடைஉடை - அரண்மனை வாயிலில் காவலாக இருக்கும். உடையவர் - நம்மையெல்லாம் அடிமையாக உடைய சிவனடியார், தடை - காவல், இடைதெரிந்து - சமயம் தெரிந்து, துயில் கொள்ளும் - உறக்கம் கொள்ளும் (செய்யும் என்ற வாய்பாட்டு வினைமுற்று, ஆண்பாலில் வந்தது)

9. பொன்திகழ் —பொன்னுல் செய்யப்பட்டு ஒளியோடு திகழும். பள்ளி - பள்ளியறை, பள்ளிக்கட்டில் - ஏழாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கதொகை. புரவலன் - அரசன். மாடு - பக்கத்தில், மன்றல் - மணம் பொருந்திய, குழல் - கூந்தல்.

10 கதுமென - விரைவாக, அலர் - மொய்க்கும், அண்டர் நாயகனுர் - தேவர்களின் தலைவனுகிய சிவபெருமான், செங்கை - பண்புத்தொகை, இழிந்து - இறங்கி, கொள்கையின் - ஆகம விதிப் படி இச்செய்யுள் குளகம்.

11 மங்களம் - நன்மை, உங்கள் நாயகன் - உங்கள் தலைவனுகிய சிவபெருமான். உங்கள் நாயகன் என்று முத்தநாதன் கூறியதால் அவனுக்குச் சிவபெருமான் தலைவனுக இல்லை என்பதும் அவனது சூழ்ச்சியும் குறிப்பினுல் பெறப்படுகின்றன. ஆகமநூல் - சைவ ஆகமநூல், ஆகமநூல் - இருபெயரொட்டுப் பண்புத் தொகை, கொடு - கொண்டு (தொகுத்தல் விகாரம்)

12. பேறு - முதல்நிலை திரிந்த தொழிற்பெயர், உண்டோ - ஓகாரம் எதிர்மறைப் பொருளில் வந்தது, மாறு இல் - குற்றமற்ற. நாறுபூங்கோதை - மணம் வீசுகின்ற பூக்களால் கட்டப்பட்ட மாலை. இச்செய்யுள் குளகம்.

13. பரிவு - விருப்பம், தவிசு - ஆசனம், தருதவ வேடத் தானை - வஞ்சகமாக மேற்கொண்ட தவவேடமுடைய முத்த நாதனை, தருதவம் (வினைத்தொகை).

14. கைத்தலத்து - கையில், கைத்தலம் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை, அவிழ்ப்பான் - வினையாலணையும் பெயர், புரிந்து - விரும்பி, பத்திரம் - உடைவாள், வாங்கி - எடுத்து, அப்பரிசே - அவ்விதமே. சிவனடியாருக்கு நேரும் துன்பங்களைத் தம் வாக்கினுலும் சொல்லக்கூடாது என்று கருதிய சேக்கிழார், 'தான் நினைத்த அப்பரிசே செய்ய,' என்றுர். இதைப்போலவே ஏனுதி நாயனுர் புராணத்தும் 'முன்நின்ற பாதகனும் தன் கருத்து முற்றுவித்தான்' எனக் கூறியது ஈண்டு ஒப்புநோக்கத்தக்கது மெயத்தவ வேடமே - (அப்பொழுதும் நாயனுர் தாம்) இதுவரை உண்மைப்பொருள் எனக் கருதிய சிவனடியார் தவவேடத்தையே. வென்றுர் - தம் பொறுமையால் பிறவிக்குக் காரணமான அஞ்ஞானத்தை வென்றுர்.

15. இறைப்பொழுதின் - கணப்பொழுதில், குருதி - இரத்தம், சோர - பெருக்கெடுத்து ஓடுமாறு, வீழ்கின்றுர் - வினையாலணையும் பெயர், நமர் - நம்மவர்.

16. தாதன் - அடியவன், மீது - இடையூருக இவர்மீது. இடைவிலக்காவண்ணம் - வழிமறித்துத் துன்பம் செய்யாதபடி. விலக்கா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

17. புடை - பக்கம், அரசனைத் தீங்கு - உருபு மயக்கம். போவான் - அழைத்துச் செல்லும் பொருட்டு (வான்ஈற்று எதிர் கால வினையெச்சம்), போகப்பெற்றது - (யாதொரு துன்பமின்றிச்) செல்லுமாறு உரிமை பெற்றது.

18. செவ்விய - பாதுகாப்பான, வடி - கூர்மையான, போந்து - சென்று, ஆள் உறு - மனிதர்கள் நடமாடாத, உறு - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம், போந்தான் - அடைந்தான்

19. செற்றவர் - சினம் கொண்டவர், இலா - இல்லாத (ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்), சொல்திறம் - சிறந்த சொற்களை, கோமகன் - அரசரான மெய்ப்பொருள் நாயனார், குறிப்பில் நின்றான் - அரசனுடைய கருத்துப்படி நடப்பவனாகிய தத்தன், நின்றான் - வினையாலணையும் பெயர்.

20. செய்தவ வேடம் கொண்டு வென்றவன் - வஞ்சனையாகச் செய்து கொண்ட தவ வேடத்துடன் தான் வெற்றி கொண்டதாக நினைத்த முத்தநாதன், செய்தவ வேடம் - வினைத்தொகை, ஐயன் - தாம் இறக்கும் தருவாயில் தம் கொள்கையை நிறைவேற்ற உதவியதால் மெய்ப்பொருள் நாயனார் தம் பணியாளனாக இருந்த தத்தனை 'ஐயன்' என்று பாராட்டினார் (மரபு வழுவமைதி), செய்ததியார் - குற்றியலிகரம்.

21. இமயப்பாவை துணைவனார் - இமவானின் மகளாகிய உமாதேவியார் கணவராகிய சிவபெருமான், பாவை - உவமை ஆகுபெயர், தம்மைக் கண்டவாறு - தம்மை மனக்கண்ணால் தரிசித்தவாறு, மிக்க அண்டர் - சிறந்த மேலுலகத்தில் வாழ்கின்ற, வானவர்கட்கு - தேவர்களுக்கு, எட்டா - கிட்டாத, கழல் நீழல் - திருவடி நீழல், கழல் - தனியாகுபெயர், நீழல் - நீட்டல் விகாரம், கும்பிடும் கொள்கை - கும்பிடும் பேறு.

## வினாக்கள்

1. மெய்ப்பொருள் நாயனார் எவ்வாறு அரசாட்சி புரிந்து வந்தார்?
2. நாயனாரின் சிவவழிபாட்டினையும் அவர் சிவனடியாரிடத்துக் கொண்ட பக்தியினையும் விளக்கி வரைக.
3. முத்தநாதன் எவ்வாறு அவமானப்பட்டான்?
4. முத்தநாதன் கொண்ட பொய்த்தவ வேடத்தினைப் புலப்படுத்துக.
5. முத்தநாதன் தன் அரண்மனைக்கு வரக் காரணம் யாது? என்று நாயனார் கேட்டபோது அவன் அவரிடம் கூறிய விடை யாது?
6. பொய்த்தவ வேடத்துடன் வந்த வஞ்சகன் செய்த கொடிய செயல் யாது? அதனைச் சேக்கிழார் எங்ஙனம் கூறுகின்றார்?
7. முத்தநாதன்மீது தத்தன் வாள் எறியத் தொடங்கும் போது நாயனார் தத்தனை யாது கூறித் தடுத்தார்? அவர் தத்தனுக்கு இட்ட கட்டளை யாது?
8. நாயனார் கட்டளையைத் தத்தன் எம்முறையில் நிறைவேற்றினான்?
9. முத்தநாதனை இடையூறின்றி அனுப்பிவிட்டு வந்த செய்தியைத் தத்தன் கூறியபோது நாயனார் தத்தனை எவ்வாறு பாராட்டினார்?

10. இறைவன் மெய்ப்பொருள் நாயனுருக்கு எவ்வாறு திருவருள் புரிந்தார்?

11. மெய்ப்பொருள் நாயனூர் என்று வழங்கப்படுவதின் பொருத்தத்தினை விளக்குக.

## 4. திருக்குற்றாலக்குறவஞ்சி

### குறத்தி குறி சொல்லுதல்

#### குறத்தி, வசந்தவல்லியின் கையைக் காட்ட வேண்டுதல்

'ஆனேறுஞ் செல்வர் திரிகூட நாதர் அணிநகர்வாழ்
மானே! வசந்தப் பசுங்கொடி யே!வந்த வேளைநன்றே!
தானே யிருந்த தலமும்நன் றே!செழுந் தாமரைபோற்
கானேறுங் கைம்மலர் காட்டாய் மனக்குறி காட்டுதற்கே!

#### கைக்குறி உரைத்தல்

'மாறாமல் இருநிலத்தில் அறம்வளர்க்குங் கையே
மனையறத்தால் அறம்பெருக்கித் திறம்வளர்க்குங் கையே
வீறாக நவநிதியே விளையுமிந்தக் கையே
மேன்மேலும் பாலமுதம் அளையுமிந்தக் கையே
ஆறாத சனங்கள்பசி யாற்றுமிந்தக் கையே
அணங்கனையார் வணங்கிநித்தம் போற்றுமிந்தக் கையே
பேறாக நன்னகரம் காக்கும்இந்தக் கையே
பிறவாத நெறியார்க்கே ஏற்குமிந்தக் கையே.

#### வசந்தவல்லியின் காதல் நிலை உரைத்தல்

'சொல்லக்கே ளாய்குறி சொல்லக்கேளாய் அம்மே!
தோகையர்க் கரசே!குறி சொல்லக் கேளாய்.
முல்லைப்பூ நகையாளே! நன்னகர்வாழ் முத்து
மோகனப் பசுங்கிளியே சொல்லக் கேளாய்
பல்லக்கே றுந்தெருவி லானைநடத்தி மணிப்
பணியா பரணம் பூண்ட பார்த்திபன் வந்தான்.
செல்லப்பூங் கோதையேநீ பந்தடிக்கையில் அவன்
சேனைகண்ட வெருட்சி போலக் காணுதே அம்மே!

#### வசந்தவல்லி பரிசு அளித்தல்

'நன்னகரி லீசருன்னை மேவவருவார்—இந்த
நாணமெல்லாம் நாளைநானுங் காணவே போறேன்.
கைந்நொடியிற் பொன்னிதழி மாலைவருங்காண்—இனிக்
கக்கத்தி லிடுக்குவாயோ வெட்கத்தை யம்மே!'
என்னுமொரு குறவஞ்சி தன்னை யழைத்தே—அவட்
கீட்டுசரு வாபரணம் பூட்டினளே.

—திரிகூடராசப்பக் கவிராயர்

## குறிப்புரை

### திருக்குற்றாலக்குறவஞ்சி

குறவஞ்சி என்பதனைக் 'குறத்தி பாட்டு' என்றும் வழங்குவர். தலைவன், வீதியிலே உலா வருகிறான். தலைவி, அவன்மீது அன்பு கொள்ளுகிறாள். தலைவிக்குக் குறத்தி குறி சொல்லிப் பரிசில் பெறுகிறாள். இது இந்நூலின் பொது அமைப்பாகும்.

குற்றாலக்குறவஞ்சியின் பாட்டுடைத்தலைவர், திருக்குற்றாலத்தில் எழுந்தருளியுள்ள குற்றாலநாதர். இந்நூல் வெண்பா, அகவல், விருத்தம் முதலியவற்றோடு சிந்து, கண்ணி முதலியனவும் விரவி நாடகப்பாங்கில் அமைந்துள்ளது.

இதை இயற்றியவர் திரிகூடராசப்பக் கவிராயர். இவர் ஊர், குற்றாலத்திற்கு அண்மையில் உள்ள மேலகரம். குலம், வேளாளர் குலம். இவர் குற்றாலத் தலபுராணம் முதலிய 14 பிரபந்தங்களைப் பாடியுள்ளார். கி.பி. 18ஆம் நூற்றாண்டில் மதுரையை ஆண்ட விஜயரங்க சொக்கநாத நாயக்கர், குறவஞ்சியை அரங்கேற்றுவித்து, இப்புலவர்க்குப் பாராட்டும் பரிசிலும் அளித்தார்.

### அருஞ்சொற்பொருள்

1. ஆன் ஏறும் - இடப வாகனத்தில் ஏறும், தலமும் - இடமும், கான் ஏறும் - மணம் மிகும், கைம்மலர் - உருவகம்.

2. மனையறம் - இல்லறம், திறம் - உறுதிப்பொருள், வீறாக - மிகுதியாக, விளையும் - விளைக்கும், அளையும் - கலக்கும், ஆறாத - தணியாத, அணங்கனையார் - தெய்வப்பெண்களை ஒத்த மகளிர். போற்றும் - புகழும், பிறவாத நெறியார் - பிறப்பு இறப்பு இல்லாத முழுமுதற்கடவுள் (திரிகூட நாதர்).

3. தோகையர் - மயில் போலும் சாயலை உடைய பெண்டிர், அம்மே - விளி, முல்லை - முல்லை மலர், நகையாளே - சிரிப்பை உடையவளே, முத்து மோகனம் - முத்தாலாகிய மாலை, பசுங்கிளி - பண்புத்தொகை, ஆனை (ஆன் + ஐ) - இடப வாகனத்தை, பணி - பாம்பு, பார்த்திபன் - அரசன் (தலைவன்), செல்லம் - அருமை, பூங்கோதை - பூமாலை போன்ற பெண் (உவமை ஆகு பெயர்), வெருட்சி - அச்சம்.

4. மேவ - அடைய, கைந்நொடி - கணப்பொழுது, பொன் இதழி மாலை - பொன் போன்ற கொன்றை மாலை, கக்கம் - கை இடுக்கு, வெட்கம் - நாணம், குறவஞ்சி - குறப்பெண், ஈட்டு - சேர்த்து வைத்த, சருவாபரணம் (சருவ + ஆரணம்) - எல்லா வகை ஆபரணங்களும்.

### வினாக்கள்

1. வசந்தவல்லியின் கையைப் பார்த்துக் குறத்தி எவ்வெவவாறு புகழ்ந்துரைத்தாள்?
2. 'ஆனேறுஞ்செல்வர், பிறவாத நெறியார்' என்று யாரைக் குறவஞ்சி கூறுகிறது? ஏன்?

3. குறிசொல்லும் குறத்தி வசந்தவல்லியை எவ்வாறெல்லாம் புகழ்ந்து பேசுகிறாள்?
4. வசந்தவல்லிக்குக் குறத்தி சொன்ன குறி யாது?
5. 'சருவாபரணம் பூட்டினாள்'—யார்? யாருக்கு? ஏன்?
6. 'திருக்குற்றாலக்குறவஞ்சி' இயற்றமிழ் இலக்கியமேனும் நாடகத்தமிழின் நற்பண்புகள் அதில் மிளிர்வதை எடுத்துக்காட்டுக.

## 5. இரட்சணிய யாத்திரிகம்

### மனம் திருந்திய மைந்தன்

#### இளைய மகன் தந்தையிடம் பங்கு பெறுதல்

ஒருவனன் புடைய தந்தைக் கோரிரு புதல்வ ருள்ளார்;
இருவரில் இளையான், 'ஐய! என்னொரு பாகம் எற்குத்
தருக!' என் றிரந்து கேட்பத் தந்தைதன் னுரிமை யாவும்
திருவிகற் பாகப் பங்கிட் டுதவினன் நேர்மை யாக. 1

#### பொருள் பெற்ற மைந்தன் கெட்டழிதல்

கைபபொருள் கண்டான். தந்தை கரைந்தசொற் பொருளைக் [காணான்,
மெய்ப்பொரு ளறியான், உள்ளம் விழைந்தசிற் றின்ப மாய
பொய்ப்பொருள் நச்சி யோடிப் புறம்போய்த் தந்தை யீந்த
அப்பொரு ளிழந்தான்; அந்தோ அகதியா, யினன்சின் னாளில்! 2

அங்கொரு குடும்பி தன்னை அடுத்தவன் பன்றி மேய்த்துத்
திங்களோர் இரண்டு மூன்று செல்லவத் தேச மெங்கும்
வெங்கொடும் பஞ்சம் நேர்ந்து வெதுப்பிடும் பசிக்காற் றாணய்
நுங்கினான் பன்றிக் கூட்டும் நொறுங்குகுற் றுமித்த விட்டை. 3

#### மைந்தன் பிழையுணர்ந்து மனந்திருந்தல்

குற்றுமித் தவிடுங் கிட்டாக் கொடும்பஞ்ச மதிக ரிக்கச்
சற்றுளந் தெளிந்தா னாகிச் சஞ்சலித் தழு'தென் தந்தைக்கு
உற்றவூ ழியர நேகர் உண்டுதேக் கெறிய, யானோர்
துற்றுண வின்றி யாவி சோர்குவல்! இதென்துர்ப் புத்தி! 4

'புகலொன்று மில்லேன்!' என்னாப் புந்தியில் பிழையை யுள்ளி
மிகவுள முடைந்து நைந்தான்; மெய்ம்மனத் தாபங் [கொண்டான்;
'தகவுடைத் தாதை பக்கற் சார்குவ னேல்தாம் பெற்ற
மகனெனப் பரிவ ரல்லால் மறுத்திடார்,' எனத்தே றுற்றான். 5

### தந்தையின் மகிழ்ச்சி

இல்லையே யெழுந்தான்; தந்தை யுத்தம குணமுன் னீர்க்க
அல்லல்செய் பசியின் னுந்த அடுத்தனன்; அறிந்து தந்தை
வல்லைவந் தணைத்து முத்தி மகிழ்ந்தனன்; மகவா சைக்கோர்
எல்லையு முளதோ மைந்தன் எத்தனை பிழைசெய் தாலும்? 6

### மன்னிக்கத் தந்தையை வேண்டுதல்

'எந்தையே! எந்தை யே!' என் றேங்கிநெட் டுயிர்த்துக் [கண்ணீர்
சிந்திநொந் 'துமக்கு முன்னுந் தெய்வத்துக் கெதிரு மாகப்
புந்தியற் றளவில் பாவம் புரிந்தனன்! இனியான் உந்தம்
மைந்தனென் றுரைக்கத் தானும் அபாத்திரன்! மதியொன் [றில்லேன்! 7

'ஐய! மன் னிக்கச் சித்த மாயின், மற் றனிய னேன்யான்
உய்யுமா றருளி நும்பால் ஊழியத் தொருவ னாக்கி
வையகத் திருத்து 'கென்னு வாய்திறந் தரற்றி நிற்ப,
'நையல்!' என் றருளிற் கூட்டிச் சென்றனன் அகத்துள் [நண்பால். 8

### தந்தை சிறப்புச் செய்தல்

'மகனிவன் மரித்தான் இன்னே மறுத்துயிர் பெற்று னாகத்
தகவுடை விருந்தெ மர்க்குச் சமைக்'கெனப் பணித்து மைந்தற்கு
உகவையின் வஸ்தி ராதி உடுத்தருங் கலமும் பூட்டிப்
புகரறு மகிழ்கொண் டாடி யிருந்தனன் புதல்வ னோடும். 9

### தமையன் சினமும் தந்தை அறிவுறுத்தலும்

ஆயிடைச் சேட்டன் வந்தான்; அகக்களி யாட்டுக் கண்டான்.
'மேயதென்?' எனவி னுவி யறிந்தனன் வெகுண்டு நின்றான்;
நேயமார் தந்தை நேர்ந்து, 'நின்னொரு கனிட்டன், மாண்டு
போயவன், பிழைத்து வந்த புதுமையின் களியீ 'தென்றான் 10

'மைந்த! நீ யென்னோ டுள்ளாய்; வாழ்வெனக் குள்ள யாவும்
சொந்தமற் றுனக்கே யன்றோ? சோதரன் மதியற் றேகி
நொந்துவந் தணைந்தான் மீண்டு; நுண்மதி யுடையை நீ; உன்
சிந்தனை திருகல் நன்றோ? சேர்ந்துடன் களித்தி,' என்றான். 11

—எச். ஏ. கிருஷ்ணப்பிள்ளை

## குறிப்புரை

### இரட்சணிய யாத்திரிகம்

இரட்சணிய யாத்திரிகம் என்பது ஆத்துமாவின் இரட்சிப்பைப் பெற விரும்புபவனின் யாத்திரையை விவரிப்பது; ஆங்கிலப் புலவரான ஜான் பன்யன் என்பாரின் பில்கிரிம்ஸ் புரோக்ரஸ் (Pilgrims Progress) என்னும் நூலையும், தமிழில் மொழிபெயர்க்கப் பட்ட அதன் மொழிபெயர்ப்பாகிய மோட்சப்பிரயாணம் என்னும் நூலையும் தழுவி இயற்றப்பட்டது. இக்கிறித்துவப் பெருங்காப்பியம், ஏறக்குறைய 3800 பாடல்களை உடையது. 47 படலங்களைக் கொண்டது; பெரும்பகுதியாகிய பருவங்களையும் உட்பிரிவாகிய படலங்களையும் கொண்டு அமைந்துள்ளது.

இந்நூலை இயற்றியவர், எச். ஏ. கிருஷ்ணப்பிள்ளை என்பவர் இவரது முழுப்பெயர் ஹென்றி ஆல்பிரட் கிருஷ்ணப்பிள்ளை என்பது. 1827ஆம் ஆண்டு, ஏப்பிரல் திங்கள், 27ஆம் நாளில் இவர் பிறந்தார். இவர் பிறந்த ஊர் பாளையங்கோட்டையை அடுத்த இரெட்டியாபட்டி என்பது. இவர் வேளாளர் மரபில் தோன்றியவர். இவர் தந்தையார், சங்கர நாராயணப்பிள்ளை இவர் பெற்றோர், உற்றோர், உறவினர் எல்லாரும் வைணவ சமயத்தினரே. இவர் தமது 30ஆம் வயதில் கிறித்துவ சமயத்தைத் தழுவினார். இவர் கம்பராமாயணத்தில் பெரிதும் ஈடுபாடு கொண்டவர்; திருநெல்வேலியிலும் சாயர்புரத்திலும் உள்ள கல்லூரிகளில் தமிழ்ப்பணி ஆற்றினார். இவருடைய தமிழாசிரியர் திருப்பாற்கடல் நாதன் கவிராயர். கிருஷ்ணப்பிள்ளை, 'கிறித்துவக் கம்பர்' என்னும் புகழைப் பெற்றுள்ளார். இவர் இயற்றிய வேறு நூல்கள் இரட்சணிய சமய நிர்ணயம், இரட்சணிய மனோகரம், இரட்சணியக் குறள் என்பவை.

பாடப்பகுதியாய் அமைந்த பாடல்கள் சுவிசேஷ மார்க்கப் படலத்தில் உள்ளவை. சுவிசேஷம் - நற்செய்தி. அதாவது, ஏசு கிறிஸ்துவினால் இவ்வுலகுக்கு ஏற்பட்டுள்ள மீட்பாகிய மெய்ம் மார்க்கமே சுவிசேஷ மார்க்கம் ஆகும். இப்பகுதியில் யோவானின் செய்தியும், கிறிஸ்து பெருமானின் பிறப்பும், அவர் நிகழ்த்திய அற்புதங்களும் அறிவுரைகளும் அடங்கியுள்ளன. மனம் திருந்திய மைந்தன் கதை, கிறிஸ்து பெருமான் கூறிய உவமைக் கதைகளுள் ஒன்று.

## அருஞ்சொற்பொருள்

1. பாகம் - பங்கு, எற்கு (என்+கு) - எனக்கு, உரிமை - உரிமையான செல்வங்கள், நிருவிகற்பாக - வேறுபாடில்லாமல்

2. கரைந்த - சொல்லிய, சொற்பொருளை - சொற்களின் உண்மையை, மெய்ப்பொருள் - உண்மைப்பொருள், விழைந்த - விரும்பிய, நச்சி - விரும்பி, புறம் போய் - (வீட்டையும் நாட்டையும் விட்டு) வெளியே சென்று, அந்தோ - ஐயோ (இரக்கக் குறிப்பு).

3. குடும்பி - இல்லறத்தான், திங்கள் - மாதம், வெதுப்பிடும் - வருத்திடும், கொடும்பஞ்சம் - பண்புத்தொகை, நுங்கினன் - விழுங்கினன், ஊட்டும் - உண்ணச்செய்யும்.

4. கிட்டா - அகப்படாத (ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்), சற்று - சிறிது, சஞ்சலித்து - மனம் வருந்தி, ஊழியர் - பணிபுரிபவர், தேக்கெறிய - ஏப்பமிட, துற்று - ஒருவாய் உணவு, ஆவி - உயிர், சோர்குவல் - தளர்வேன், துர்ப்புத்தி - கெட்ட அறிவு.

5. புகல் - அடைக்கலம், என்னு - என்று, 'செய்யா' என்னும் வாய்பாட்டு வினையெச்சம், புந்தி - புத்தி, உள்ளி - நினைந்து, மனத்தாபம் - மனவருத்தம், தகவு - பெருந்தன்மை, தாதை - தந்தை (மரூஉ).

6. ஒல்லை, வல்லை - விரைவு, ஈர்க்க - இழுக்க, உந்த - தள்ள, அடுத்தனன் - நெருங்கினன். இப்பாட்டு வேற்றுப்பொருள் வைப்பு அணி.

7. எந்தை - எம் தந்தை (மரூஉ), எந்தையே - விளி, நெட்டுயிர்த்து - பெருமூச்சு விட்டு, புந்தி - புத்தி (மெலித்தல் விகாரம்), அளவில் - அளவில்லாத, அபாத்திரன் - தகுதியில்லாதவன், மதி - அறிவு, ஒன்று - சிறிது.

8. ஐய - விளி, சித்தமாயின் - எண்ணினால், மற்று - அசை நிலை, அளியனேன் - இரங்கத்தக்க யான், ஊழியம் - பணி, வையகம் - உலகம், அரற்றி - புலம்பி, நிற்ப - நிற்க, நையல் - வருந்தாதே, அகத்துள் - வீட்டினுள்.

9. மரித்தான் - இறந்தான், இன்னே - இப்பொழுதே, மறுத்து - மீண்டும், தகவு - சிறப்பு, சமைக்க - செய்க, பணித்து - (ஊழியர்க்குக்) கட்டளையிட்டு, உகவையின் - மகிழ்ச்சியால், வஸ்திராதி - ஆடை முதலியன, அருங்கலம் - அருமையான அணிகலன், பூட்டி - அணிவித்து, புகரறு - குற்றம் தீர்ந்த, மகிழ் கொண்டாடி - சிறப்புச்செய்து.

10. ஆயிடை - (அ+இடை) அந்தச் சமயத்தில், அகக்களியாட்டு - வீட்டில் நடக்கும் கொண்டாட்டம், சேட்டன் - தமையன், மேயது - நடந்தது, வினவி - கேட்டு, வெகுண்டு - கோபித்து, நேயம் - நேசம் (அன்பு), கனிட்டன் - பின்னவன் (தம்பி), மாண்டுபோயவன் - இறந்துபோனவன்.

11. மைந்த - விளி, மற்று - அசை நிலை, சோதரன் - சகோதரன், ஏகி - சென்று, நொந்து - வருந்தி, நுண்மதி - கூரிய புத்தி, சிந்தனை - எண்ணம், திருகல் - மாறுபடுதல்.

வினாக்கள்

1. இளைய மைந்தன் அகதியானது எதனால்?
2. செல்வம் இழந்த இளையவன் யாது செய்தான்?
3. இளைய மைந்தனின் மனம் திருந்தியது எதனால்?
4. உணவின்றி வருந்திய மைந்தன் தன் உள்ளத்து எண்ணியது யாது?

5. மனம் திருந்திய மைந்தனைக் கண்ட தந்தையின் நிலைமை விளக்குக.
6. மைந்தன் தந்தையிடம் வேண்டிய மன்னிப்புரை யாது?
7. தந்தை இளைய மகனுக்குச் சிறப்புச் செய்தது ஏன்?
8. மூத்த மைந்தனின் சினத்தைத் தந்தை எவ்வாறு மாற்றினான்?
9. இடஞ்சுட்டி விளக்குக:
   அ. 'புகலொன்று மில்லேன்.'
   ஆ. 'புந்தியற்றளவில் பாவம் புரிந்தனன்.'
   இ. 'சிந்தனை திருகல் நன்றோ? சேர்ந்துடன் களித்தி.'

## 6. மனோன்மணீயம்

### ஜீவகன் போர்ப்படைக்குக் கூறிய வீரவுரை

**ஜீவகன்:**

வேற்படைத் தலைவரே! நாற்படை யாளரே!
கேட்பீர் ஒருசொல்: கிளர்போர்க் கோலம்
நோக்கியாம் மகிழ்ந்தோம்! நுமதுபாக் கியமே
பாக்கியம்! அஆ! யார்க்கிது வாய்க்கும்?
யாக்கையின் அரும்பயன் வாய்த்ததிங் குமக்கே! 5
தாயினும் சிறந்த தயைபூண் டிருந்தநும்
தேயமாந் தேவிக்குத் தீவினை யிழைக்கத்
துணிந்தவிவ் வஞ்சரை எணுந்தொறும் எணுந்தொறும்
அகந்தனில் அடக்கியும் அடங்கா தெழுந்து,
புகைந்துயிர்ப் பெறியப் பொறிகண் பொரிய 10
நெடுந்திரள் புருவம் கொடுந்தொழில் குறிப்ப
வளங்கெழு மீசையுங் கிளர்ந்தெழுந் தாடக்
களங்கமில் நும்முகம் காட்டுமிச் சினத்தீக்
கண்டப் பாண்டியே கொண்டனள் உவகை!

**படைகள்:**

ஜே! ஜே!

**ஜீவகன்:**

கருதுவீர் தாம்பிர பன்னியின் கட்டுரை: 15
'மக்காள்! அருந்தி வளர்மின்! நுமக்கு
மிக்கோ'ரில்லா வீரமாய்ப் பரந்து
முதுசுதந் தரத்தின் முத்திரை யாகி,
இதுபரி ணமித்தும் மிதயத் துறைக!

அன்னியன் கைப்படா இந்நீர் கற்பிற்கு
இழிவுறின் மார்பினின் றிதுவே சோரியாய்ப்
பொழிகநீர் பொன்றிடும் அளவும்!' என் றன்றோ
வாழ்த்தி நுந்தமை வளர்த்தனள்? அவளுரை
தாழ்த்தா திவண்நீர் போர்த்தபோர்க் கோலம்
பார்த்தால் ஆர்த்தவள் வாழ்த்தாதென் செய்வாள்! 25

**படைகள்:**

ஜே! ஜே!

**ஜீவகன்:**

விந்தம் அடக்கினோன் தந்தநற் றமிழ்மொழி
தற்சுதந் தரமறும் அற்பர்வாய்ப் படுமோ?

**படைகள்:**

தமிழ் மொழிக்கு ஜே! ஜே!

**ஜீவகன்:**

பழையோர் பெருமையும் கிழமையும் கீர்த்தியும்
மன்னிய அன்பினும் அன்னையர் பாடி
நித்திரை வரும்வகை ஒத்தறுத் துமது 30
தொட்டில்தா லாட்டவவ் விட்டமாம் முன்னோர்
தீரமும் செய்கையும் வீரமும் பரிவும்
எண்ணி யிருகணும் கண்ணீர் நிறையக்
கண்துயி லாதுநீர் கனிவுடன் கேட்ட
வண்தமிழ் மொழியால் மறித்திக் காலம், 35
'ஆற்றிலம்; ஆண்மையும் உரிமையும் ஒருங்கே
தோற்றனம்!' எனச்சொலத் துணிபவர் யாவர்?

**படைகள்:**

சிச்சீ!

**ஜீவகன்:**

அந்தணர் வளர்க்குஞ் செந்தழல் தன்னினும
நாட்டபி மானமுள் மூட்டிய சினத்தீ
அன்றோ வானோர்க் கென்றுமே உவப்பு? 40
வந்தவிக் கயவர் சிந்தையிற் கொளுத்திய
வெந்தழற் கவரே இந்தனம் ஆகுக!

படைகள்:

*ஆகுக! ஆகுக!*

ஜீவகன்:

*இன்றுநீர் சிந்தும் இரத்தம்ஓர் துளியும்,*
*நின்றுகம் பலவும் நிகழ்த்துமே, 'இந்தப்*
*பாண்டியர் உரிமை பாராட்டும் பண்பினர்; 45*
*தீண்டன்மின் திருந்தலீர்! அவர்தஞ் செருக்கு.*
*சுதந்தரம் அவர்க்குயிர்; சுவாசம்மற் றன்று.*
*நினைமின் நன்ருய்க் கனவினும் இதனை!'*
*எனமுர சறையுமே யெத்திசை யார்க்கும்.*
*இத்தனிப் போரில்நீர் ஏற்றிடுங் காயம் 50*
*சித்தங் களித்து ஜெயமா துமக்கு*
*முத்தமிட் டளித்த முத்திரை யாகி*
*எத்தனை தலைமுறைக் கிலக்காய் நிற்கும்!*

படைகள்:

*ஜே! ஜே!*

ஜீவகன்:

*போர்க்குறிக் காயமே புகழின் காயம்.*
*யார்க்கது வாய்க்கும்! அஆ! நோக்குமின்! 55*
*புண்ணே? புகழின் கண்ணே. எவரே*
*புண்படா துலகில் புகழுடம் படைந்தார்?*
*புகழுடம் பன்றியிவ் விகழுடம் போமெய்?*
*அப்பெரும் புகழுடம் பிப்படி யின்றிதோ!*
*சுலபமாய் நுமக்கெதிர் அணுகலால், துதித்துப் 60*
*பலமுறை நுமது பாக்கியம் வியந்தோம்!*

—பேராசிரியர் பெ. சுந்தரம் பிள்ளை

குறிப்புரை

மனோன்மணீயம்

இந்நூல், 19ஆம் நூற்ருண்டில் தோன்றிய சிறந்த கவிதை நாடக நூல். இது பாண்டிய மன்னன் சீவகனின் மகளான மனோன்மணியின் கதையைக் கூறுவது. இஃது ஆங்கிலப் புலவர் லிட்டன் பிரபு இயற்றிய இரகசிய வழியின் (The Secret Way) தழுவலாகும்.

இந்நாடகத்தில் 5 அங்கங்களும் ஒவ்வோர் அங்கத்திலும் பல களங்களும் இடம் பெற்றுள்ளன. இது 4502 அடிகளை உடையது. பாடப்பகுதி, நான்காம் அங்கத்திலே முதற்களத்தில் உள்ளது. 'இடம்—படைப்பயிற்சிக்களம்; காலம்—காலை' என்று நிகழ்ச்சி நடந்த இடமும் காலமும் தொடக்கத்தில் தரப்பட்டிருக்கின்றன.

மனோன்மணீயம், பேராசிரியர் சுந்தரம் பிள்ளையின் கைவண்ணத்தால் உருவாகியது. அவர் தமிழ் இலக்கியக் கடலில் மூழ்கியவர்; ஷேக்ஸ்பியரின் நாடகத்திறனில் தோய்ந்தவர். பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, கி.பி. 1855ஆம் ஆண்டு, ஏப்பிரல் திங்கள், 4ஆம் நாள் கேரள மாநிலத்தில் உள்ள ஆலப்புழையில் பிறந்தவர். அவர் தந்தையார், பெருமாள் பிள்ளை. சுந்தரம் பிள்ளை, தத்துவத் துறையில் எம்.ஏ. பட்டம் பெற்று திருவனந்தபுரம் அரசினர் கல்லூரியில் பேராசிரியராய்ப் பணி புரிந்தார். அவர் இயற்றிய ஆராய்ச்சி நூல்கள் பிற்கால ஆராய்ச்சியாளர்க்கு வழிகாட்டிகளாய் உள்ளன. அவர், 1897இல் மறைந்தார்.

## கதைச் சுருக்கம்

பாண்டி நாட்டை ஆண்ட சீவகன் தாயற்ற தன் மகள் மனோன்மணியைச் சீரும் சிறப்புமாக வளர்த்துவந்தான். மன்னன் குலகுரு சுந்தர முனிவர், அரசனுக்குப் பாதுகாவலாய் விளங்கினர்; அவனுக்குத் தக்க அறிவுரைகளும் கூறிவந்தார். ஆயினும், சீவகன் எடுப்பார் கைப்பிள்ளையாய்க் குடிலன் என்னும் வஞ்சக அமைச்சன் சொற்கேட்டுப் பல்வேறு துன்பத்திற்கு ஆளாயினன்; தலைநகராய் இருந்த மதுரையை விட்டுத் திருநெல்வேலியைத் தலைநகராக்கி அங்குச் சென்றான். மனோன்மணியைத் தன் மகன் பலதேவனுக்கு மணம் செய்விக்கக் கருதிக் குடிலன் செய்த சூழ்ச்சியால், சேர நாட்டு மன்னன் புருடோத்தமன் திருநெல்வேலியின் மீது படையெடுத்து வந்தான். இந்த நிலையில் சீவகன் நாட்டைக் காக்கத் தன் நாட்டு வீரர்கள் எழுச்சியும் வீரமும் கொள்ளும் வண்ணம் பற்பல வீர உரைகளைக் கூறினன். சீவகன் கூறிய உரைப்பகுதியே இங்குப் பாடமாகத் தரப்பட்டுள்ளது.

## அருஞ்சொற்பொருள்

அடி 1. நாற்படை - தேர்ப்படை, யானைப்படை, குதிரைப் படை, காலாட்படை.

3. பாக்கியம் - செல்வம்.
5. யாக்கை - உடம்பு.
6. தயை - கருணை.
7. தேயம் - நாடு.
8. எணுந்தொறும் - எண்ணும் பொழுதெல்லாம்.
9. அகம் - மனம்.
10. உயிர்ப்பு - பெருமூச்சு, பொறி - தீப்பொறி.
11. கொடுந்தொழில் - வளைதலாகிய தொழிச்

அடி 13. களங்கம் - குற்றம், சினத்தீ - கோபமாகிய நெருப்பு (உருவகம்).

14. உவகை - மகிழ்ச்சி.

15. தாம்பிர பன்னி - தாம்பிரபரணி ஆறு, கட்டுரை - அறிவுரை.

16. அருந்தி - உண்டு.

17. மிக்கோர் - மேலோர்.

18. முத்திரை - இலச்சினை.

19. பரிணமித்து - மாறி, உறைக - தங்குக (வியங்கோள).

20. அன்னியன் - அயலான், கற்பு - தாம்பிரபரணி மாதாவின் கற்பு. பாண்டி நாட்டைத் தேவியாக உருவகம் செய்திருப்பதால் 'கொண்டனள்' எனப் பெண்பால் வினைமுற்றான் முடித்தார்.

21. சோரியாய் - இரத்தமாய்.

22. பொழிக - சொரிக, பொன்றிடும் அளவும் - இறக்கும் வரையிலும்.

24. தாழ்த்தாது - காலம் போக்காமல், போர்த்த - மேற்கொண்ட.

25. ஆர்த்து - பேரொலியெழுப்பி.

26. விந்தம் - விந்தியமலை, விந்தம் அடக்கினோன் - அகத்தியர். அகத்தியர் விந்திய மலையின் தருக்கை அடக்கி அதைத் தலைவணங்கச் செய்தார் என்பது புராண வரலாறு.

27. அற்பர் - பயன்படாதவர்.

28. கிழமை - உரிமை, கீர்த்தி - புகழ்.

29. மன்னிய - நிலைபெற்ற.

30. நித்திரை - உறக்கம், ஒத்தறுத்து - இசையமைதி பொருந்தச் செய்து.

31. இட்டம் - விருப்பம்.

32. தீரம் - துணிவு.

33. கணும் - கண்ணும் (தொகுத்தல் விகாரம்).

34. கனிவு - நெகிழ்ச்சி.

35. வண்தமிழ் - வளப்பமான தமிழ், மறித்து - மீண்டும்.

36. ஆற்றிலம் - தாங்க இயலாதவர்கள் ஆனோம், ஆண்மை - வீரம், ஆற்றிலம், தோற்றனம் - தன்மைப் பன்மை வினைமுற்று.

38. செந்தழல் - வேள்வித்தீ.

39. அபிமானம் - பற்று.

40. வானோர் - தேவர்.

41. கயவர் - கீழோர், கொளுத்திய - மூட்டிய.

42. வெந்தழல் - கடுமையான நெருப்பு (பண்புத்தொகை), இந்தனம் - விறகு.

அடி 44 உகம் - யுகம், ஊழிக்காலம்.
46 திருந்தலீர் - பகைவரே, செருக்கு - ஆணவம்.
47. சுவாசம் - மூச்சு, அவர்க்கு - பாண்டியர்க்கு.
49. முரசு - போர்ப்பறை.
51. சித்தம் - மனம், ஜெயமாது - வெற்றி மகள்.
53. தலைமுறை - குடிவழி, இலக்காய் - குறிக்கோளாய்.
55. வாய்க்கும் - கிட்டும்.
58. இகழுடம்பு - இகழப்படுமுடல்.
60. அணுகலால் - நெருங்கி வருவதால்.

### வினாக்கள்

1. வீரனின் சினக்குறிப்பை ஜீவகன் வாயிலாய்க் கவிஞர் எவ்வாறு எடுத்துக்காட்டுகின்றார்?
2. 'கண்டப் பாண்டியே கொண்டனள் உவகை.'—யார் கூற்று? பாண்டி உவகை கொண்டது ஏன்?
3. தாம்பிரபன்னியின் கட்டுரை எதுவென ஜீவகன் கூறுகிறான்?
4. வண் தமிழ் மொழி குறித்து ஜீவகன் கூறுவது என்ன?
5. படைகள் 'சிச்சீ' என இகழ்ந்தது எதனை?
6. நாட்டபிமானத்தின் மேன்மையை ஜீவகன் எவ்வாறு எடுத்துக் கூறுகிறான்?
7. பாண்டியர் பண்பு நலன்களை விளக்குக.
8. 'போர்க்குறிக் காயமே புகழின் காயம்,' என்பதுபற்றி ஜீவகன் உரைப்பது என்ன?
9. 'பலமுறை நுமது பாக்கியம் வியந்தோம்!'—இது யார் கூற்று? வியந்தது ஏன்?
10. இடஞ்சுட்டிப் பொருள் விளக்குக:
 'தமிழ் மொழிக்கு ஜேஜே!'
 'ஆகுக ஆகுக!'
11. ஜீவகன் பேச்சாற்றல் மிக்கதொரு பாத்திரமாகப் படைக்கப்பட்டிருக்கும் நயத்தினை விளக்குக.

# IV

# மொழிபெயர்ப்புப் பாடல்கள்

## 1. கீதாஞ்சலி

**(இரவீந்திரநாத தாகூர்)**

பண்ணெழுகு பாடலைப் பாடென் றெனக்குமருள்
பாலிக்கும் வேளை, இந்தப்
பாரெங்கும் அறியாத கர்வமது பொங்கிப்
பரந்துளம் விம்ம நிற்பேன்;
அண்ணலுன் திருமுகம் நோக்கிநிற் பேன்;விழிகள்
அருவிநீர் பாய நிற்பேன்;
ஆகாத குணமெலாம் அடியோடு நீங்கநல்
அமுதகுணம் ஓங்க நிற்பேன்;
எண்ணரிய ஆழியைத் தாண்டுபுள் போல்அன்பும்
இறகினை விரிக்கும் அதனால்
ஏத்தியிசை பாடத் தொடங்குவேன்; நீயும்அதில்
இன்புறுவை என்ப துணர்வேன்;
நண்ணுதற் கானவழி வேறெதுங் கண்டிலேன்;
நானுமென் களிமயக்கால்
நண்பனென் றேயழைக் கின்றனன்; என்னையாள்
நாதனே! ஞான பரனே! ௧

### வேறு

இன்னிசைநீ பாடுமுறை ஏதுமறி யேன்யான்;
இரவுபகல் கேட்டின்பம் எய்திவியந் திடுவேன்;
மன்னுலகை ஒளிசெய்வ துன்னிசையின் ஒளியாம்;
வானெங்கும் உலவுயிரும் உன்னிசையின் உயிராம்! ௧

பன்னரிய நின்னிசையின் பாலாறு பொங்கிப்
பாறைகளும் உடைந்துருளப் பாய்ந்தொழுகும் அதனோடு
என்னிசையுங் கலந்தொழுக ஏற்றகுரல் காணேன்;
எண்ணிலிசை வலையிலிழுத் தெனையாளும் இறையே! ௨

உறுப்பனைத்தும் உயிர்பரந்திவ் வுருவமையும் வண்ணம்
உனதுகரம் தீண்டுகுறிப் புணர்வதனுல், எளியேன்
வெறுப்பரிய உடலென்றும் விளக்கமுறச் செய்வேன்;
மேலாகி உயிர்க்குயிராய் விளங்குபரம் பொருளே! 4

என்னுளத்து ஞானஒளி ஏற்றியமெய்த் தீபம்
இறையாகும் நீ,அதனுல் இறையேனும் பொய்கள்
மன்னுபல நினைப்புகளில் வந்துகல வாமல்
வன்மையொடு காத்திடுவன்; வழுத்தரிய சிவமே! 5

ஏழையுளந் திருக்கோயில் எனக்கொண்டு நீயும்
எழுந்தருளி யிருக்குமுறை அறிந்து,அடிமை அங்கே
சூழவரு வஞ்சனையைத் துரத்தி,நிறை அன்பாம்
சுந்தரநாண் மலர்மாலை சூட்டிநிதம் தொழுவேன். 6

ஆயபல தொழிலெடுக்க ஆற்றல்தரு வதுநீ;
அதனுல்என் செய்கருமம் அனைத்தூடும் அடியேன்
தூயநிலை துலக்கிடவே துணிந்திடுவேன்; எவர்க்கும்
சொல்லரிய பரம்பொருளே! சுயஞ்சோதிப் பொருளே! 7

—கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை

## 2. குயிலுக்கு

(வேர்ட்ஸ்வொர்த்து)

கிளர்ச்சிதரு விருந்தினனே!
கேட்டுள்ளேன் உன்பாடல்;
கேட்கின்றேன்இப்பொழுதும், மகிழ்ச்சி கொண்டேன்;
வளர்பறவை ஒன்றென்றோ,
வட்டமிடும் குரலென்றோ,
வந்தழைப்ப தெவ்வாறு? குயிலே சொல்க! 1

பசும்புல்லின் குளிர்ப்பரப்பில்
படுத்திருக்கத் தேன்குரலில்
பாடுகின்ற உன்பாட்டைக் கேட்டேன் நானே!
இசையதுவும் மலைக்குமலை
ஏகுவது போல்தோன்றும்;
இங்கிருக்கும் அங்குலவும் ஓர்க ணத்தே 2

கதிரொளியும் மலர்களுமே
காணும்மலைச் சாரலிலே
கனிந்தஇசை, நீமெல்ல முணுமுணுப்பாய்!
அதனாலே, நெடுநேரம்
அழகுசொரி நினைவுகளில்
ஆழ்த்துகின்ற ஓர்கதையை எனக்களித்தாய்.
வரவேற்றேன் பன்முறையும்;
வசந்தத்தின் கண்மணியே!
வரவேற்றேன் என்றாலும் நீஎனக்கோர்
பறவையெனத் தோன்றவில்லை;
பார்த்திடவோர் உருவின்றிப்
பாடுகின்ற குரலாய்,ஓர் புதிராய் உள்ளாய்! 4
இளம்பள்ளிப் பருவத்தில்
ஈர்த்தென்னைக் கவர்ந்ததுவும்
இக்குரலே! இக்குரல்தான் என்னை அந்நாள்
வளம்மிகுந்த புதர்களிலே
வானத்தில் மரங்களிலே
வந்துன்னைக் காணஎனைத் தூண்டிற் றன்றே! 5
காடுமலை புல்வெளிகள்
கடந்துன்னைப் பலநாளும்
கண்டிடவே நானலைந்தேன்; உன்னைக் காணக்
கூடவில்லை; ஆவலுந்தான்
குறையவில்லை; எனினும்நீ
குன்றாத நம்பிக்கை; அன்பின் சின்னம்! 6
இன்னமும்நான் உன்னிசைதான்
எழுந்திடுமேல் கேட்டிடுவேன்
ஏகாந்தப் புல்வெளியின் மேற்கிடந்தே;
பின்னுமொரு பொற்காலம்
பெயர்ந்திங்கே வரும்வரையில்
பெய்கின்ற உன்னிசையைக் கேட்டிருப்பேன். 7
புகழ்ப்பறவையே!இந்தப்
புவியெல்லாம் மீண்டுமொரு
புதுமாயக் கனவுநிறை உலகாய் மாறித்
திகழ்வதனால் இங்கிதுதான்
தேடிவந்து நீயிருக்கச்
சிறந்ததொரு வீடென்று செப்புவேன்நான்! 8

—'சிற்பி' பாலசுப்பிரமணியம்

## குறிப்புரை

### மொழிபெயர்ப்புப் பாடல்கள்

தமிழில் பண்டைநாளிலே வடமொழியிலிருந்து மொழி பெயர்த்த பாடல்கள் தோன்றின. இன்றோ, தமிழ் உலகமொழிக ளோடு உறவாடி எல்லா மொழியினரையும் இழுக்கின்ற இயல் புடையதாய் விளங்கி வருகிறது. தமிழரும் பல மொழி பயில்வ தோடு சிறப்பாக ஆங்கிலம் வழியாகவும் பல மொழிச் செல்வத் தைக் கற்று இன்புறுகின்றனர். ஆகவே, பல மொழிகளிலும் சிறந்து விளங்கும் பாடல்கள் தமிழ்க் கவிதை உருவம் பெறுகின் றன. எனவே, மொழிபெயர்ப்புப் பாக்களும் தமிழ்க் கவிதைப் பூங்காவில் ஒரு பகுதியாய் விளங்குகின்றன.

இப்பகுதியில் வங்கக் கவிஞர் தாகூர் பாடிய கீதாஞ்சலிப் பாடல் களில் சிலவும், ஆங்கிலக் கவிஞர் வேர்ட்ஸ்வொர்த்துப் பாடிய 'குயிலுக்கு' என்ற பாடலின் மொழிபெயர்ப்பும் தரப்பட்டுள்ளன.

### 1. கீதாஞ்சலி

#### இரவீந்திரநாத தாகூர்

உலகப் புகழ்பெற்ற வங்க மகா கவிஞர் 1861, மே மாதம், 7ஆம் நாள் கல்கத்தாவில் பிறந்தார். இவர் தந்தையார் தேவேந்திர நாத தாகூர். இரவீந்திரநாத தாகூரைக் காந்தி அடிகள் 'பெருங் காவலர்' (Creat Sentinel) என்று வழங்கினர். இவர் சிறந்த கவிஞர்; சிறுகதை ஆசிரியர்; நெடுங்கதை ஆசிரியர்; கட்டுரையாளர்; ஓவியர். இவருக்கு 1913இல் இலக்கியத்திற்கான நோபெல் பரிசு அளிக்கப்பட்டது. இவர் 1941, ஆகஸ்டு, 7ஆம் நாள் காலமானர்.

இவர் இயற்றிய கீதாஞ்சலி, புகழ்பெற்ற திறனாய்வாளர் பிராட்லி போன்ற ஆங்கில அறிஞர்களின் பாராட்டுகளைப் பெற்றது. இவர் இந்நூலை 1910-11ஆம் ஆண்டுகளில் இயற்றினர். இந்நூல் பல மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. நாம் இசைத்துவரும் 'ஜன கண மன' என்ற தேசிய கீதமும் இவர் இயற்றியதே.

#### கவிமணி

கீதாஞ்சலியைத் தழுவித் தமிழில் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை சில பாடல்களை இயற்றியுள்ளார். தமிழ்க் கவிதை மொழி பெயர்ப்பில் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை பாடிய சில பாடல்களே மரபுவழி அமைந்து கற்பார் உள்ளத்தைக் களிப்புறச் செய்வன. கீதாஞ்சலியைப்போலப் பாரசிகக் கவி உமார்க்கய் யாம் பாடல்களையும், ஆசிய ஜோதி முதலிய பல ஆங்கிலக் கவிதை களையும் இவர் அழகிய தமிழில் எளிய கவிதையாக மொழி பெயர்த்துள்ளார். கவிமணி, 1876ஆம் ஆண்டு, கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள தேரூர் என்னும் சிற்றூரில் பிறந்தவர்; ஆசிரியப் பணி புரிந்தவர்; இளமை தொட்டே கவி பாடுவதிலும்

கல்வெட்டுகளை ஆராய்வதிலும் சிறந்து விளங்கினார். இவர் குழந்தைகளுக்கான பாடல்களைப்பாடி, குழந்தைக் கவிதைகள் தமிழில் வளர்வதற்கு முன்னோடியாய் விளங்கினார். இவர் 26-9-1954இல் மறைந்தார்.

பாடப்பகுதியாகிய கீதாஞ்சலிப்பாடல், 'மலரும் மாலையும்' என்னும் நூலில் 'பக்தி மஞ்சரி' என்னும் பகுதியில் அமைந்துள்ளது.

### அருஞ்சொற்பொருள்

1. பண் - இசை, அருள் பாலிக்கும் - கருணை செய்யும், பார் - பூமி, அமுத குணம் - இனிய குணம், ஆழி - கடல், புள் - பறவை. அன்பைக் கவிஞர் பறவையாக உருவகம் செய்கிறார். ஏத்தி - புகழ்ந்து, நண்ணுதற்கு - அடைவதற்கு, களி - களிப்பு, நாதன் - தலைவன், பரன் - மேலானவன்.

2. ஏதும் - சிறிதும், மன்னுலகம் - நிலை பெற்ற உலகம், வான் - வான் உலகம்.

3. பன்னரிய - சொல்லுவதற்கு அரிய, ஏற்ற குரல் - பொருத்தமான மிடற்று ஒலி. இசையை ஆறாகவும், வலையாகவும் உருவகம் செய்கிறார் கவிஞர்.

4. குறிப்பு - அறிகுறி, பரம்பொருள் - மேலான பொருள், இறைவன்.

5. ஞான ஒளி - அறிவு ஒளி, மெய் - உண்மை, தீபம் - விளக்கு, இறையேனும் - சிறிதாகிலும், வழுத்தரிய - புகழ்தற்கு அரிய.

6. ஏழை - அறிவிலி, அடிமை - தொண்டன், சுந்தர நாள் மலர் மாலை - அழகிய அன்று அலர்ந்த பூக்களாலாகிய மாலை, நிதம் - தினமும்.

7. கருமம் - தொழில், துலக்கிட - விளக்கிட, சுயஞ்சோதி - இயற்கை ஒளி.

## 2. குயிலுக்கு

### வேர்ட்ஸ்வொர்த்து

வில்லியம் வேர்ட்ஸ்வொர்த்து என்பது இவருடைய முழுப் பெயர். இவர், 1770 ஏப்பிரல், 7ஆம் நாள் இங்கிலாந்து நாட்டுக் கம்பர்லேண்டில் உள்ள காக்கர் மவுத் என்னும் இடத்தில் பிறந்தார். இவர் தந்தையார் ஜான் வேர்ட்ஸ்வொர்த்து. இளமையில் பெற்றோரை இழந்த இவர், தம் சகோதரியார் டோரதி வேர்ட்ஸ்வொர்த்தின் ஆதரவில் வளர்ந்தார்; 1850இல் காலமானார்.

ஆங்கில இலக்கியத்தில் இவருடைய கவிதைகள் தனியிடம் பெற்றுத் திகழ்கின்றன. இவர் இயற்கை அழகில் ஈடுபட்டுக் கவிதை புனைவதில் மிகவும் வல்லவர். எனவே, இவரை 'இயற்கைக் கவிஞர்' (Nature Poet) என்று வழங்குவர்.

**'சிற்பி' பாலசுப்பிரமணியம்**

இவர், 1936ஆம் ஆண்டு கோவை மாவட்டத்தில் ஆத்துப் பொள்ளாச்சி என்னும் சிற்றூரில் பிறந்தவர்; அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் 1956ஆம் ஆண்டு தமிழ்ச் சிறப்பு வகுப்பில் முதல் மாணவராய்த் தேறியவர்; பொள்ளாச்சி நல்லமுத்துக் கவுண்டர் மகாலிங்கம் கல்லூரியில் விரிவுரையாளராய்ப் பணியாற்றி வருகிறார். தமிழ், மலையாளம், ஆங்கிலம் ஆகிய மொழிப் பயிற்சி இவருக்கு உண்டு. இவர் இலக்கியத்துறையில் புதுமை நாட்டம் உள்ளவர். பாவேந்தரின் பாராட்டைப் பெற்ற இவரது மற்றொரு கவிதைத் தொகுப்பு, சிரித்த முத்துகள் என்பது.

இப்பாடப்பகுதி நிலவுப்பூ என்னும் கவிதைத் தொகுப்பில் ஆங்கிலப் பூங்கா என்னும் பகுதியில் முதற்கவிதையாய் அமைந்துள்ளது.

**அருஞ்சொற்பொருள்**

தேன் குரல் - இனிமையான குரல், ஏகுவது - செல்வது, கதிரொளி - சூரிய ஒளி, மலைச்சாரல் - மலைப்பக்கம், கனிந்த இசை - பண்பட்ட பாட்டு, முணுமுணுப்பு - இரட்டைக்கிளவி, வசந்தம் - இளவேனில், புதிராய் - புரியாத பொருளாய், ஈர்த்து - இழுத்து, குன்றாத - குறையாத, ஏகாந்தம் - தனிமை, பொற்காலம் - வளமான காலம், புவி - பூமி, மாயம் - வியப்பு, செப்புவேன் - சொல்லுவேன்.

**வினாக்கள்**

**1. கீதாஞ்சலி**

1. கீதாஞ்சலி பாடிய இரவீந்திரரது சிறப்பினை விளக்குக.
2. இறைவன் அருள் பாலிக்கும் வேளையில், அவ்வருளைப் பெற்றவன் எந்நிலையடைகிறான்?
3. அன்பின் எழுச்சியைக் கீதாஞ்சலி எவ்வாறு கூறுகிறது?
4. பரம்பொருளின் மேன்மையைக் கவிஞர் எவ்வாறு எடுத்துரைக்கிறார்?
5. இசைபற்றிக் கீதாஞ்சலிப்பாடல் கூறுவது யாது?

**2. குயிலுக்கு**

1. குயிலின் பாட்டைப்பற்றிக் கவிஞர் கூறுவது யாது?
2. 'வசந்தத்தின் கண் மணியே,' என்று குயிலைப் புகழ்ந்தது எதனால்?
3. குயிலின் குரலைப்பற்றி ஆசிரியர் கூறுவது யாது?

# V

# மறுமலர்ச்சிப் பாடல்கள்

## 1. பாண்டியன் பரிசு

### வேலனும் அன்னமும்

#### ஓடம் ஏறி உலவ அன்னத்தை நீலி அழைத்தல்

விழிப்புனலில் குளிப்பவளாய்த் துன்ப ஆற்றின்
மேற்றுறையும் காணாளாய் இவ்வா றெல்லாம்
கொழிப்பாள்நெஞ் சிளகுமொழி; 'அன்ன மே!பூங்
கொடியே!நல் இளம்பிடியே! வளர்ந்த தேக்கின்
செழிப்பினிலே நிழல்சாய்ந்த செய்யாற் றோரம்
திருத்தமுற நிறுத்திவைத்த ஓடம் ஏறிக்
கழிப்போமே நேரத்தை!' என்றாள் நீலி;
கையூன்றி எழுந்திருந்தாள் தையல் நல்லாள். ௧

#### செய்யாற்றில் ஓடம் இயக்குதல்

நீர்தேங்கும் செய்யாற்றின் ஓடம் துன்பம்
நினைந்தேங்கும் அன்னத்தை நீலி யைப்பூந்
தார்தாங்கும் தட்டம்போல் தன்பால் தாங்கத்
தடக்கையால் துடுப்பசைய ஓட்டு வார்கள்
ஆர்தாங்கள் எனக்கேட்டும் இன்பம் ஊட்டும்
அரும்பாட்டுப் பலஇசைத்தும் ஓட்ட லானார்;
சீர்தேங்கும் வெள்ளன்னம் அசைந்தி டாது
செல்லல்போல் தெண்ணீரில் சென்ற தோடம். ௨

#### இயற்கையின் எழில் கண்டு அன்னம் மகிழ்தல்

தேங்கிநிற்கும் புனல்மீது செல்லா நிற்கும்
செம்படகில் ஒருபுறத்தில் சிரித்த வண்ணம்
பாங்கிநிற்கப் பார்த்துநின்ற அன்னம் சொல்வாள்:
'பாரடிநீ மேற்றிசைவா னத்தை! அங்கும்
தேங்கிநிற்கும் பொன்னாற்றில் செழுமா ணிக்கச்
செம்பருதிப் படகோடும்! கீழ்த்தி சைவான்
வாங்கிநிற்கும் ஒளியைப்பார்! காட்சித் தேனில்
வண்டடிநாம்!' என்றுரைத்து மகிழ்ந்து நின்றாள். ௩

### வெள்ளத்தில் படகு தத்தளித்தல்

இழக்கினைநோக் கிப்படகு செல்லும் போதில்
கேள்விஇலார் நெஞ்சம்போல் இருண்டு, நீளும்
வழக்குடையார் செல்வம்போல் மின்னி மாய்ந்து,
வண்பொருளை இழந்தான்போல் அதிர்ந்து பின்னர்
மழைக்கண்ணீர் உகுத்ததுவான்; மேற்கி னின்று
வந்ததுசெய் யாற்றினிலே பெரிய வெள்ளம்;
பழக்குலைமேல் எறிந்தகுறுந் தடியே போலப்
பாய்ந்ததொரு பெருங்காற்றுப் படகு நோக்கி. 4

[செம்மானூர்க் கரையில் ஆத்தாவோடு இருந்த வேலன், செய் யாற்று வெள்ளத்தில் தத்தளித்தாரைக் காண்கிறான்; தன் தாயிடம் விடை பெற்று, அவர்களைக் கரையேற்றி, தன் குடிசையில் கொண்டுவந்து சேர்க்கிறான்.]

### மகளிரை வெள்ளத்திலிருந்து வேலன் காத்தல்

'விடை'என்று கேட்டான்சேய்! 'நட'என் றாள்தாய்!
விரைந்தோடிப் பெருமரத்தில் கயிறு கட்டி
நெடுமுனையை ஒருகையால் பற்றி நீந்தி
நிலைதவறும் ஓடத்தில் ஏறிச் சேந்திக்
கடிதினிலே ஓடத்தைக் கரையிற் சேர்த்தான்;
கசங்கியஓர் கொடிபோலக் கிடந்த அன்னத்
துடியிடைக்கும் நீலிக்கும் தோள்கொ டுத்துச்
சுரைபடர்ந்த சிறுகுடிசை தன்னிற் சேர்த்தான்! 5

[ஆத்தாவின் அன்புப் பணிவிடைகளால் களைப்பு நீங்கிய அன்னம், அவனிடம் வேலனைக் குறித்து வினவி அறிகிறாள்; அவனுக்கு நன்றி தெரிவிக்கிறாள்.]

### அன்னத்தின் நன்றியுரை

'ஆத்தாவே! இவர்யார்?' என் றன்னம் கேட்டாள்;
'அவன்தான்என் மகன்'என்று சொன்னாள் ஆத்தா;
'தீத்தாவும் கண்ணுடையார் வேழ நாட்டார்
சிறைபிடிக்க வருகையிலே மறித்தே என்னைக்
காத்தாரும் இவர்தாமோ?' என்றாள் அன்னம்;
'கடமைபுரிந் தான்இவனே' என்றாள் ஆத்தா;
'வாய்த்தீரே மானத்தை உயிரைக் காக்க!
மறப்பரிது நும்நன்றி!' என்றாள் அன்னம். 6

## வேலன் தன் கடமை எடுத்துரைத்தல்

'எனைஈன்ற தந்தைக்கும் தாய்க்கும் மக்கள்
இனம்ஈன்ற தமிழ்நாடு தனக்கும் என்னல்
தினையளவு நலமேனும் கிடைக்கு மென்றால்
செத்தொழியும் நாள்எனக்குத் திருநா ளாகும்!
பனையளவு நலமேனும் தன்ன லத்தைப்
பார்ப்பானே, மக்களிலே பதடி யாவான்!
உனையொன்று வேண்டுகின்றேன்: என்னல் ஆவ
துண்டென்றால் அதற்கென்றன் உயிருண் டெ'ன்றான். 7

## அன்னத்தின் வேண்டுகோள்

'இழந்தபாண் டியன்பரிசைத் தருவார்க் கென்னை
இழந்துபோ வேன்!' என்று முரசம் எங்கும்
முழங்கியஓர் சேதியினை அறியீர் போலும்!
முயலாமே இத்தனைநாள் கழித்தீர் போலும்!
பழம்பெரிய பாண்டியனார் பேழைக் குள்ளே
பகைவர்தமை ஒழித்திடும்ஓர் குறிப்பும் உண்டு!
கொழுத்தபுகழ் உமக்குண்டு கொண்டு வந்தால்!
கொடைகொடுத்த தாகும்இந் நாட்டுக் கெ'ன்றாள். 8

## வேலனின் உறுதிமொழி

பேழையினை தடையாளம் பறிபோய் விட்ட
பின்னிலைமை முன்னிலைமை பூதச் சேதி
ஆழஉரைத் திடலானாள் அன்னம்; வேலன்
அத்தனையும் கேட்டிருந்தான், 'நானோ மெத்த
ஏழைமகன்; நரிக்கண்ணர் ஆணை எங்கே,
யா.னெங்கே! ஆயினும்என் கடமை உண்டு;
பேழையினைக் கொண்டுவந்து தருவேன்; அன்றிப்
பேருலகில் உயிர்வாழேன்!' என்றான் வேலன். 9

—பாரதிதாசனார்

## 2. முகில் விடு தூது

வான வெளியரசே! வள்ளல் பெருமனம்போல்
தானம் பொழிகின்ற தண்முகிலே ! காற்றைப் 1

புரவியெனக் கொண்ட புரவலனே! எங்கே
விரைகின்ருய்? ஒன்று விளம்புகின்றேன்: சற்றேநில்! 2

ஈர மனமுடையாய்! இவ்வுலகில் எப்பொழுதும்
சோர விடமாட்டாய் என்றுன்னைச் சொல்கின்ருர். 3

சோரவிடாய் என்னுந் துணிவால் மொழிகின்றேன்;
ஆர அமர அரிவையுரை கேட்டிடுவாய்: 4

அன்ருெருநாள் என்துணைவர் ஆற்றிப் பிரிந்துசென்ருர்;
இன்றுவரை அஞ்சல் எழுதவில்லை; நாடோறும் 5

அஞ்சலார் இவ்வழிதான் ஏகிடுவார் ஆனாலும்,
வஞ்சி எனதகத்து வாயிற் படிமிதியார்; 6

கற்றைகற்றை யாய்க்கடிதம் கையில் குவிந்திருக்கும்;
பற்ருக் குறைக்கந்தப் பையிலொரு கூடையுண்டு; 7

'ஐயா பெரியவரே! அஞ்சலுண்டோ?' என்பேன்நான்;
கையால் விரித்துரைப்பார்! கண்கலங்கி நின்றிருப்பேன்; 8

எத்தனைநாள் இப்படியே இன்னலுற்றுச் செத்திடுவேன்!
மெத்தவுனை வேண்டுகிறேன்; மேவியிதைக் கூறிடுவாய்: 9

வாடகை கேட்டுமிக வாட்டுகிருர் வீட்டார்கள்;
தேடரிய கல்வி தெரிவிக்கும் பள்ளிக்குச் 10

சம்பளம் வேண்டுமென்று சாற்றுகின்ருன் என்பிள்ளை;
கம்பளம் விற்றுக் கடன்கழித்தேன்; கையிருப்போ, 11

ஒன்றுமில்லை; இத்தகைய ஊறு மிகவருத்தக்
கன்றியுடல் உன்போல் கறுத்தேன்; விழிசிந்தும் 12

நீர்த்துளியோ நின்னைப் புறங்கண்டு விட்டதுபோல்
ஆர்த்து மிகுகின்ற தையாவோ! என்னவரைக் 13

காணின் அருள்கூர்ந்து காசனுப்பச் செப்பிடுவாய்;
ஆணி இருந்தால்தான் அச்சுவண்டி மேலோடும்; 14

மெய்யில் உயிர்நிற்க வேண்டுமெனில், பள்ளிசெலும்
பையன் பயில்கின்ற பாடம் வளரவெனில், 15

காசுபணம் வேண்டுமெனக் காதலர்பால் நெஞ்சுணர்ந்து
பேசு; பிழையாகப் பேசி வருத்தாதே! 16

காதல் முகந்தன்னைக் கண்டு பலநாள்கள்
ஆதல் அவரறிவார்; ஆசைக் கணவரைத்தான் 17

கண்டு மகிழ்வுபெறக் கண்துடிக்கும் செய்தியையும்
விண்டு திரும்பு விரைந்து. 18

—முடியரசன்

## குறிப்புரை

### மறுமலர்ச்சிப் பாடல்கள்

நெடுங்காலமாகச் சமுதாயத்தின் உள்ளூர இயங்கிவரும் பல சத்திகள், சிற்சில காலங்களில் சிற்சில காரணங்களால், பொங்கி மேலிடுவதுண்டு. பழைய மரபுவழி வரும் பண்பாடு, புத்துருவம் பெற்றுக் காலத்துக்கியைந்தபடி வெளிப்படுவது மறுமலர்ச்சி ஆகும். மறுமலர்ச்சிப்பாடல்கள் யாப்பு மரபைப் புறக்கணியாது தழுவிக்கொண்டு காலத்திற்கேற்ற புதுக் கருத்துகளையும் பொலிவு பெற அமைத்துச் சமுதாயத்தை எழுச்சி கொள்ளச் செய்கின்றன. இத்தகைய மறுமலர்ச்சியில் மலர்ந்த இக்காலக் கவிதைகளுள் இரண்டு இங்கே இடம் பெற்றுள்ளன.

### 1. பாண்டியன் பரிசு

இந்நூற்றுண்டில் புதுமைக் கவியாய் விளங்கிய பாரதியார் வழியில் வந்த புலவர்களுள் பாவேந்தர் பாரதிதாசனுர் தலைசிறந்தவர்; சமுதாயத்திற்கு எழுச்சியூட்டக்கூடிய, திருத்தக்கூடிய பல கவிதைகளைத் தந்து, புரட்சிக்கவிஞர் என்னும் பெயரையும் பெற்றுர்; 1891இல் புதுவை மாநிலத்தில் பிறந்தார்; கனகசபை என்பவரின் புதல்வராவார். இவரது இயற்பெயர் சுப்புரத்தினம் என்பது. இவர் ஆசிரியப் பணி புரிந்தவர்; பாரதியாரோடு மிகவும் நெருங்கிப் பழகியவர்; தமிழ் மொழி, தமிழினம் என்பவற்றை உயிர் மூச்சாகக் கொண்டவர். இவர் பாடிய பாடல்களுள் சில, கவிதைத் தொகுதிகளாயும், பாண்டியன் பரிசு, இருண்ட வீடு, குடும்ப விளக்கு, அழகின் சிரிப்பு, தமிழியக்கம் போன்ற தனி நூல்களாயும் வெளிவந்துள்ளன. இவர், 21-4-1964இல் மறைந்தார்.

### கதைச் சுருக்கம்

கதிரைவேல் மன்னன் ஆண்டுவரும் கதிர் நாட்டின்மேல் வேழ நாட்டரசன் வேழ மன்னன் படையெடுத்து வருகின்றுன். இதற்குக் காரணமாய் அமைந்தவன், வேழ நாட்டுப் படைத் தலைவனும் கதிரைவேல் மன்னனின் மைத்துனனுமாகிய நரிக்கண்ணன் ஆவான். இந்த நரிக்கண்ணனே, நரிபோலும் தந்திரமுடையவன். போரில் இவன் கதிரைவேல் மன்னனையும் தன் தங்கை கண்ணுக்கினியாளையும் வஞ்சகமாகக் கொலை புரிகிறுன். கதிரைவேல் மன்னனின் ஒரே மகளான அன்னம் என்பவளையும் மாய்த்துவிட்டு, அந்நாட்டை வேழ மன்னனுக்கு உற்ற துணைவன்

போல நடித்துத் தான் பெற்றுவிடவேண்டும் என்பதே அவனுடைய எண்ணம். அவ்வாறே வேழ மன்னன் கதிர் நாட்டு மன்னனுக முடிசூட்டப் பெறுகிறன்.

இந்நிலையில் அரசகுமரி அன்னம், உண்மைப் பணியாளர்களான ஆத்தா, அவள் மகன் வேலன், தோழி நீலி முதலியோர் துணையுடன் வேழ மன்னனைக் கண்டு தன் மாமன் நரிக்கண்ணனின் வஞ்சக எண்ணங்களையும் செயல்களையும் எடுத்து மொழிகிறுள்: பண்டை நாளில் தன் மூதாதையருள் ஒருவன் செய்த போர்ப் பணிக்காகப் பாண்டிய மன்னன் அளித்த பரிசாகிய கதிர் நாட்டு உரிமைப்பட்டயமும் ஆடையாபரணமும் வாள் முதலியவற்றையும் உள்ளடக்கிய பேழையைப் பெற்றுத்தரவேண்டும் எனவும் வேண்டுகிறுள்.

வேழ மன்னன் நரிக்கண்ணனைச் சினந்து நோக்கி, 'நீ திருடிவிட்ட பாண்டியன் பரிசைக் கொடுத்துவிடு!' என்று மொழிகிறுன். அப்போது நரிக்கண்ணனே, 'நான் யாரையும் கொலை செய்யவில்லை. என் மகனை அன்னம் மணந்துகொண்டு இந்நாட்டை ஆளட்டும்' என்று கூறுகிறுன். வேழ மன்னன் அன்னத்தின் கருத்தைக் கேட்க, அவள், 'என் பாண்டியன் பரிசை எனக்கு அளிப்பவன் எவனுயினும், அவனுக்கு நான் உரியவள் ஆவேன்' என்றும், 'அதற்கு ஆவன செய்யவேண்டும்' என்றும் வேண்டிக் கொள்கிறுள். வேழ மன்னனும் அதற்கு ஒருப்பட்டு, நாடெங்கும் செய்தி அறிவிக்கிறுன்.

அதன் பின்னர் நரிக்கண்ணன் பாண்டியன் பரிசைத் தேடித் தானே பெற வேண்டி நாட்டில் பூதத்தின் அச்சத்தைக் கிளப்பி விடுகிறுன். எங்கும் அவனுடைய ஆள்கள் பேழையைத் தேடுகிறுர்கள். நிகழ்ந்துவரும் நிலைமையைக் கண்டு அன்னம் வருத்தமுற்றவளாய்த் தன் தாய் தந்தையர் முடிவை எண்ணியும் தன் எதிர்கால வாழ்வை உன்னியும் தோழி நீலியிடம் சொல்லி, வருந்துகிறுள். அன்னத்தின் மனத்துயரை மாற்றும் வகையில், 'ஓடம் ஏறி உலவிவரலாம்' எனத் தோழி நீலி அவளை அழைக்கிறுள். இருவரும் செய்யாற்றில் ஓடம் ஏறிச்செலுத்திச் சென் போது நிகழ்ந்தவற்றை இப்பகுதியில் காணலாம். படகில் அன்னமும் தோழியும் செல்லும்போது பெருமழை பெய்து வெள்ளம் வரவே, அவர்கள் தண்ணீரில் தத்தளிக்கிறுர்கள்.

இதனைக் கரையிலிருந்து கண்ட வீரன் வேலன், அவர்களை வெள்ளத்திலிருந்து காப்பாற்றுகிறுன். வீரன் வேலன், பின்னர்ப் பல இன்னல்களுக்கு ஆளாகியும், உற்ற துணைவர்களின் கூட்டுறவினுல் முடிவில் பாண்டியன் பரிசைப் பெற்றுக் கொண்டு வருகிறுன். வேழநாட்டு மன்னன் முன்னின்று அன்னம் வேலன் திருமணமும் கதிர் நாட்டாட்சியை நடத்த முடிசூட்டும் நடத்தி வைக்கிறுன்.

அருஞ்சொற்பொருள்

1. விழிப்புனல் - கண்ணீர், துன்ப ஆறு - உருவகம், துறை - ஆற்றில் இறங்கி ஏறும் இடம், கொழிப்பாள் - இரங்கிக் கூறு

வாள், இளகு மொழி - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை (அன்னம்), இளம்பிடியே - இளமையான பெண்யானை போன்றவளே (அன்மொழித்தொகை), தையல் - பெண்.

2. தட்டம் - அகலமான பாத்திரம், தடக்கை - பெரிய கை. தெண்ணீர் - தெளிந்த நீர்.

3. பாங்கி - தோழி, பொன் ஆற்றில் - பொன் நிறமான ஆற்றில், பருதி - சூரியன்.

4. கேள்வி இலார் - அறிவு இல்லாதவர், வண்பொருள் - மிகுந்த பொருள், வளமான பொருள்.

5. சேந்தி - கயிற்றைப் பற்றி இழுத்து, கடிதினிலே - விரைவினிலே, துடியிடை - துடி போன்ற இடையுடையவள் (அன்மொழித்தொகை), சுரை - சுரைக்கொடி.

6. தீத்தாவும் - தீப்பொறி பறக்கும், கோபக் குறிப்பை உடைய, வாய்த்தீர் - அமைந்தீர், மறப்பரிது - மறக்க இயலாதது.

7. எனை - என்னை, திருநாள் - நல்ல நாள், பனையளவு - மிகுந்த அளவு. தினை, பனை - சிறுமை, பெருமையைக் காட்டும் அளவைப் பெயர்கள், பதடி - பதர், உனை - உன்னை.

8. இழந்து போவேன் - உரிமையாவேன், சேதி - செய்தி, முயலாமே - முனையாமல் (ஈடுபடாமல்), பேழை - பெட்டி. குறிப்பு - குறிப்புச்சீட்டு, கொழுத்த புகழ் - பெரும்புகழ்.

9. பூதச் சேதி - இறந்தவர் ஆவி உலவுகிறது என்னும் பொய்ச் செய்தி, ஆழ உரைத்தல் - பதிய உரைத்தல், பேருலகு - பெரிய உலகு.

## வினாக்கள்

1. 'பாண்டியன் பரிசு' காவியத்தின் கதைச் சுருக்கம் எழுதுக.
2. அன்னத்தின் துக்கத்தை மாற்றும்பொருட்டுத் தோழி நீலி உரைத்தது யாது?
3. செய்யாற்றில் ஓடம் சென்றதைப்பற்றிப் பாரதிதாசனார் எங்ஙனம் வருணிக்கிறார்?
4. பின்வரும் உவமைகளின் நயத்தைப் புலப்படுத்துக:
   - (அ) 'தார் தாங்கும் தட்டம்போல்.'
   - (ஆ) 'வெள்ளன்னம் அசைந்திடாது செல்லல் போல்.'
   - (இ) 'கேள்வி இலார் நெஞ்சம் போல்.'
   - (ஈ) 'பழக்குலைமேல் எறிந்த குறுந்தடியே போல.'
5. இடஞ்சுட்டி விளக்குக:
   - (அ) 'காட்சித் தேனில் வண்டடிநாம்.'
   - (ஆ) 'விடை என்று கேட்டான் சேய்! நட என்றாள் தாய்.'
   - (இ) 'மறப்பரிது நும் நன்றி.'

6. மேற்றிசை வானத்து இயற்கை எழிலை அன்னம் எவ்வாறு வியந்து போற்றுகிறாள்?

7. வானம் இருண்டு மின்னி, அதிர்ந்து மழை சொரிந்ததைக் கவிஞர் எங்ஙனம் வருணிக்கின்றார்?

8. வேலன் தன் கடமைகளை எவ்வாறு எடுத்துரைக்கின்றான்?

9. அன்னம் வேலனை வேண்டிக்கொண்டது யாது?

10. வேலன் அன்னத்திடம் உரைத்த உறுதிமொழிகள் யாவை?

11. 'பாரதிதாசனார் ஓர் உவமைக் கவிஞர்.'—இக்கூற்றினை நிறுவிக் காட்டுக.

## 2. முகில் விடு தூது

முடியரசன் மதுரை மாவட்டத்தில் பெரியகுளத்தில் பிறந்தவர்; காரைக்குடி மீனாட்சி சுந்தரேசர் உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர். காவியப் பாவை, பூங்கொடி என்னும் கவிதை நூல்கள் இவர் இயற்றியவை. பாடப்பகுதியாகிய முகில் விடு தூது, முடியரசன் கவிதைகள் என்னும் தொகுப்பில் உள்ளது.

தூது - ஒருவர் மூலம் பிறர்க்குச் செய்தி சொல்லி அனுப்புவது. கணவனைப் பிரிந்த மனைவியர் கிளி, அன்னம், வண்டு, மேகம் முதலிய பல பொருள்களிடம் தமது குறையைச் சொல்லித் தூது சென்று வர வேண்டுவதாகக் கவிஞர்கள் பாடுவது மரபு. இதனைத் 'தூது இலக்கியம்' என்பர்.

'முகில் விடு தூது' என்பது, மேகத்தைத் தூது விடுவதாகும்.

### அருஞ்சொற்பொருள்

1. வள்ளல் - கொடையாளி, தானம் - கொடை, தண்முகில் - குளிர்ச்சியான மேகம்.

2. புரவி - குதிரை, புரவலன் - காப்பவன், விளம்புகின்றேன் - சொல்லுகின்றேன், சற்றே - சிறிதே.

3. ஈரமனம் - இரக்கமனம், சோர விடமாட்டாய் - கைவிடமாட்டாய்.

4. ஆர அமர - நிதானமாக, அரிவை - பெண்.

5. துணைவர் - கணவர், ஆற்றி - ஆறுதல் கூறி, அஞ்சல் — கடிதம்.

6. அஞ்சலார் - தபாற்காரர், ஏகிடுவார் - சென்றிடுவார், வஞ்சி - பெண்.

7. கற்றை கற்றையாய் - கட்டுக்கட்டாய்.

9. இன்னலுற்று - துன்பமுற்று, மெத்த - மிகவும், மேவி — சென்று.

11. சாற்றுகின்றான் - சொல்லுகின்றான்.

12. ஊறு - துன்பம், கன்றி - வருந்தி.
13. புறங்கண்டுவிட்டது - வெற்றி கொண்டது.
14. செப்பிடுவாய் - சொல்லிடுவாய், ஆணி - அச்சாணி.
17. காதல் முகம் - அன்பு முகம்.
18. விண்டு - சொல்லி.

### வினாக்கள்

1. முகிலை முடியரசன் எவ்வெவ்வாறு புகழ்ந்து உரைக்கிறார்?
2. தலைவனைப் பிரிந்து வாழும் தலைவி, அஞ்சலாரைப்பற்றிக் கூறுவது யாது?
3. தலைவி முகிலிடம் தன் தலைவனுக்கு உரைக்குமாறு சொன்ன செய்திகள் யாவை?
4. காசு பணத்தின் அருமையைக் கவிஞர் எவ்வாறு எடுத்துரைக்கின்றார்?
5. 'ஆணி இருந்தால்தான் அச்சுவண்டி மேலோடும்.'—இது யார் கூற்று? இதன் கருத்தை விளக்குக.
6. 'தூது' என்னும் பழைய முறை இலக்கிய உத்தியை இன்றைய சமூகக் கண்ணோட்டத்துக்கிசையக் கவிஞர் பாடியிருக்கும் பாங்கினை எடுத்துக்காட்டுக.

# VI

# பல்சுவைப் பாடல்கள்

## 1. கலிங்கத்துப்பரணி

பாலை நிலக் காட்சி

பொரிந்த காரை கரிந்த சூரை
புகைந்த வீரை எரிந்தவேய்
உரிந்த பாரை எரிந்த பாலை
உலர்ந்த ஓமை கலந்தவே. 1

உதிர்ந்த வெள்ளில் ஒடுங்கு நெல்லி
உணங்கு தும்பை உலர்ந்தவேல்
பிதிர்ந்த முள்ளி சிதைந்த வள்ளி
பிளந்த கள்ளி பரந்தவே. 2

வற்றல் வாகை வறந்த கூகை
மடிந்த தேறு பொடிந்தவேல்
முற்றல் ஈகை முளிந்த விண்டு
முரிந்த புன்கு நிரைந்தவே. 3

—சயங்கொண்டார்

## 2. இரட்டுற மொழிதல்

சங்கரர்க்கு மாறுதலை; சண்முகர்க்கு மாறுதலை;
ஐங்கரர்க்கு மாறுதலை யானதே;—சங்கைப்
பிடித்தோர்க்கு மாறுதலை; பித்தா! நின் பாதம்
படித்தோர்க்கு மாறுதலைப் பார்.

—காளமேகப் புலவர்

## 3. முக்கூடற்பள்ளு

நாட்டு வளம்

ஆசூர் வடகரை நாடு

மீதுயர்ந்திடும் தெங்கிள நீரை
மிடைந்த பூகம் சுமந்துதன் காயைச்
சூத மொன்றிச் சுமக்கக் கொடுக்கும்;
சூதந் தன்கனி தூங்கும் பலாவில்;

ஓது மந்தப் பலர்க்கனி வாழை
உளுக்க வேகமந் தொண்குலை சாய்க்கும்;
மாது ளங்கொம்பு வாழையைத் தாங்கும்
வளமை யாசூர் வடகரை நாடே.

சீவலமங்கைத் தென்கரை நாடு

பங்க யந்தலை நீட்டிக் குரம்பிற்
பச்சை இஞ்சியின் பாசடை தீண்டும்;
தங்கும் இஞ்சியும் மஞ்சட் கழுத்தைத்
தடவி மெள்ளத் தொடும்; அந்த மஞ்சள்
அங்க சைந்திடுங் காய்க்கதிர்ச் செந்நெல்
அளாவி நிற்கும்; அச் செந்நெலும், அப்பால்
செங்க ரும்புக்குக் கைதரும் போல்வளர்
சீவல மங்கைத் தென்கரை நாடே. உ

—என்னயினுப்புலவர்

## 4. திருவேங்கட மாலை

தண்டா மரைச்சுனையிற் சாதகமும் வேடுவரும்
விண்டாரை நாடுகின்ற வேங்கடமே—தொண்டாக்கி
ஏவத் தனக்குடையார் என்னைமுன் ளுளெடுத்த
கோவத் தனக்குடையார் குன்று.

—பிள்ளைப்பெருமாளையங்கார்

## 5. சீட்டுக்கவி

கணிகொண்ட பஞ்சலட் சணமும்ரா மாயணக்
கடலையு முணர்ந்தபுலவன்
கவிராசர் புகழ்கின்ற காழியரு ணுசலக்
கவிராய னெழுதுமோலை
மணிகொண்ட மார்பிலிங் கப்பமகி பாலகன்
மகிழ்ந்தசுதன் வணிகாதிபன்
வருஞ்சீர் படைத்ததேப் பெருமாள் மகீபனிதை
மனமுவந் தினிதுகாண்க

அணிகொண்ட தியாகேசர் வண்ணமுரை செய்ததும்
அதற்குவெகு மதிசெய்ததும்
அதுநமக் குபகார மானதுவு மிப்புவியில்
அறியாத பேருமுளரோ?
பணிகொண்ட ராமகீர்த் தனையுமிப் படியே
பரிந்துநீ கேட்டல்வேண்டும்;
பாரிலோ ராயிரம் பிறைகண்டு நீபொருள்
படைத்துவாழ்ந் திடுகமாதோ!

—சீகாழி அருணாசலக்கவிராயர்

## 6. கச்சிக்கலம்பகம்

### வண்டு விடு தூது

ஓர்காற் செலினறுகால் உற்றனையென் பார்வளமை,
ஆர்காஞ்சி மேய அமலர்திரு—மார்பாடுந்
தாராய கொன்றை தரச்சேறி வண்டே! யான்
பேராத இன்பம் பெற.

—பூண்டி அரங்கநாத முதலியார்

## 7. கபிலர் அகவல்

### மனிதரின் ஆயுள்நிலை

உலகத் தீரே, உலகத் தீரே,
நாக்கடிப் பாக வாய்ப்பறை அறைந்து
சாற்றக் கேண்மின், சாற்றக் கேண்மின்:
மனிதர்க்கு வயது நூறுஅல்ல தில்லை;
5. ஐம்பது இரவில் அகலும் துயிலினால்;
ஒட்டிய இளமையால் ஓர்ஐந்து நீங்கும்;
ஆக்கை இளமையால் ஐம்மூன்று நீங்கும்;
எழுபது நீக்கி இருப்பன முப்பதே!
அவற்றுள்
10. இன்புறு நாளும் சிலவே; அதாஅன்று.
துன்புறு நாளும் சிலவே; ஆதலால்,

### செல்வம், இளமை, வாழ்நாள்

பெருக்காறு ஒத்தது செல்வம்; பெருக்காற்று
இடிகரை ஒத்தது இளமை; இடிகரை
வாழ்மரம் ஒத்தது வாழ்நாள்! ஆதலால்,

**நன்று உடனே செய்க! நாளை என்பது நமனுடைய நாள்**

15. ஒன்றே செய்யவும் வேண்டும்; ஒன்றும்
நன்றே செய்யவும் வேண்டும்; நன்றும்
இன்றே செய்யவும் வேண்டும்; இன்றும்
இன்னே செய்யவும் வேண்டும்; இன்னும்
நாளை நாளை என்பீர் ஆகில்,
20. நமனுடை முறைநாள் ஆவதும் அறியீர்!
நம்முடை முறைநாள் ஆவதும் அறியீர்!

கூற்றுவனின் செயல்

எப்போ தாயினும் கூற்றுவன் வருவான்;
அப்போ(து) அந்தக் கூற்றுவன் தன்னைப்
போற்றவும் போகான்; பொருளொடும் போகான்;
25. சாற்றவும் போகான்; தமரொடும் போகான்;
நல்லார் என்னான்; நல்குரவு அறியான்;
தீயார் என்னான்; செல்வர்என் றுன்னான்;
தரியான் ஒருகணம் தறுக ணாளன்!
உயிர்கொடு போவான்; உடல்கொடு போகான்!

ஏதுக்கு அழுவீர்? அழுவது அறிவுடைமையன்று

30. ஏதுக்கு அழுவீர், ஏழை மாந்தர்காள்?
உயிரினை இழந்தோ, உடலினை இழந்தோ?
உயிர்இழந்(து) அழுதுமென்(று) ஓதுவீ ராகில்,
உயிரினை அன்றலா(து) இன்றும் காண்கிலீர்!
உயிரினை இழந்த உடலது தன்னைக்
35. களவு கொண்ட கள்வனைப் போலக்
காலும் ஆர்த்துக் கையும் ஆர்த்துக்
கூறை களைந்து கோவணம் கொழுவி
ஈமத் தீயை எரியெழ மூட்டிப்
பொடிபடச் சுட்டுப் புனலிடை மூழ்கிப்
40. போய்த் தமரொடும் புந்திநைந்து அழுவது
சலம் எனப்படுமோ? சதுர் எனப்படுமோ?

—கபிலர்

## 8. காந்தியின் வாழ்வு

காந்தியின் வாழ்வே கடவுளைக் காட்டும்;
கல்விகள் தேடிடும்; கருணையை ஊட்டும்;
சாந்தியைப் புகட்டிடும் சாத்திரம் அதுவே;
சத்திய நெறிதரும் சூத்திரம் அதுவே. 1

இமயமும் குமரியும் இருக்கிற வரைக்கும்
இப்பெரு வுலகினில் அவன்பெயர் சிறக்கும்;
சமயமும் நிறங்களும் சமமெனக் கருதும்
சகலரும் காந்தியை வணங்குவர் பெரிதும். 2

—நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளை

## 9. தமிழ்க்குமரி

காவிரியின் பாய்ச்சலெலாம் கருப்பஞ் சோலை;
கழனியெலாம் கதிர்முத்தும் செந்நெற் சாலை;
பூவிரியும் மதுப்பொழியும்; வண்டு தேடும்;
பொங்கரெலாம் குயிலினங்கள் வதுவை கூடும்;
தாவிவரும் முகில்பார்த்து மயில்க ளாடும் ;
தமனியத்துப் பாறைகளில் சுனைகள் நீடும்;
பாவிரியும் கவிவாணர் புகழ்ந்து பாடும்
பசுந்தமிழ்நாடு ஈடில்லை எந்த நாடும்! 1

சந்தனமும் சண்பகமும் தேக்கும் பாக்கும்
சாமைதினைப் பயிர்வகைகள் தலையைத் தூக்கும்;
கொந்தளவு மாங்கனியும் தீம்ப லாவும்
குளிர்நறவத் தொடுகுழைந்து மதுக்கு லாவும்;
பந்தரெலாம் கிளிக்குலங்கள் கதைகள் பேசும்;
பசியமந்த மாருதத்தின் வாடை வீசும்;
இந்துவந்து மரக்கிளைகள் ஊடு பார்க்கும்
இளந்தமிழ்நாட் டுக்கீடெந் நாடு வாய்க்கும்! 2

—ச. து. சுப்பிரமணியயோகியார்

### குறிப்புரை

#### 1. கலிங்கத்துப்பரணி

பரணி என்பது போர் வெற்றியைப் பாடும் பிரபந்தம். இது 96 வகைப் பிரபந்தங்களுள் ஒன்று.

இது முதற்குலோத்துங்கச் சோழன் படைத்தலைவனை கருணாகரத் தொண்டைமான் வட கலிங்க நாட்டின்மீது படையெடுத்து அரசன் அனந்தவர்மனை வெற்றிகொண்ட செய்தியைக் கூறுவது. கலிங்க நாட்டில் கொண்ட வெற்றிச்செய்தி கலிங்கத்துப்பரணி என்று வழங்கப்படுகிறது. இதுவே தமிழில் தோன்றிய முதல் பரணி நூலாகும்.

ஆசிரியர் சயங்கொண்டார், தஞ்சை மாவட்டத்தில் உள்ள தீபங்குடியிற்பிறந்தவர். இவர் பாடிய பரணியின் சிறப்பால் 'பரணிக்கோர் சயங்கொண்டான்' எனப் பாராட்டப்படுகிறார். கவிச்சக்கரவர்த்தி என்னும் பட்டமும் இவருக்கு உண்டு.

கலிங்கத்துப்பரணி கடவுள் வாழ்த்து முதல் களம்பாடியது ஈறாக 13 பகுதிகளைக் கொண்டது. அவற்றுள் பாலை நிலக் காட்சியை வருணிக்கும் தாழிசைகள், காடு பாடியது என்னும் பகுதியைச் சார்ந்தவை.

### அருஞ்சொற்பொருள்

காரை, சூரை, வீரை - பாலை நிலத்துக் காணப்படும் செடிகள். ஓமை, வெள்ளில் - மரவகைகள்; வெள்ளில் - விளா மரம், வேல் - வேல மரம், பிதிர்ந்த - பிளந்த, வாகை - வாகை மரம், கூகை - கூவைக் கிழங்கின் கொடி, தேறு - தேற்றுமரம், முற்றல் - முதிர்தல், ஈகை - இண்டங்கொடி, புன்கு - புங்கமரம்.

## 2. இரட்டுற மொழிதல்

15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சிறந்த புலவர்களுள் ஒருவர் காளமேகப் புலவர். இவரது இயற்பெயர் வரதன். இவர், கும்பகோணத்துக்கு அருகில் உள்ள நந்திக்கிராமத்தில் பிறந்தார்; திருவரங்கம் கோயில் மடைப்பள்ளியில் பணி புரிந்தார். வைணவராகிய இவர், பின்பு சைவராய் மாறினர் என்பர். இரட்டையர், அதிமதுரகவி என்போர் இவர் காலத்துப் புலவர்களாவர். இவர், சித்திரமடல், திருவானைக்கா உலா முதலிய நூல்களையும் இயற்றியுள்ளார். இவர் பாடிய தனிப்பாடல்கள் தனிப்பாடல் திரட்டில் சேர்க்கப்பட்டுள்ளன. அப்பாடல்களுள் ஒன்றே இங்குத் தரப்பட்டுள்ளது.

இரட்டுற மொழிதல் என்பது ஒரு சொல்லையோ, தொடரையோ இரண்டு பொருள்பட உரைத்தலாம். இதனைச் சிலேடை என்பர்.

### அருஞ்சொற்பொருள்

சங்கரர் - சிவபெருமான், சண்முகர் - ஆறுமுகர், ஐங்கரர் - விநாயகர், சங்கைப் பிடித்தோர் - சங்கைக் கையில் உடைய திருமால், பாதம் படித்தோர் - திருவடியைத் துதித்த தொண்டர்.

சங்கரர்க்கும் ஆறுதலை - சிவனுக்கும் கங்கை ஆறு தலையிலுள்ளது, சண்முகர்க்கும் ஆறுதலை - ஆறு திருமுகங்கள், ஐங்கரர்க்கு மாறுதலை - விநாயகர்க்கு மாறுபட்ட தலை, சங்கைப் பிடித்தோர் - திருமால், ஆறுதலை - நதியிடம், இது திருவரங்கத்தை உணர்த்தியது. பாதம் படித்தோர்க்கு - அன்பர்களுக்கு, ஆறுதலை - அமைதியை, பித்தா - பித்தனே (சிவபெருமானே). பார் - எண்ணிப் பார்.

## 3. முக்கூடற்பள்ளு

உழவர் வாழ்க்கையைச் சிறப்பித்துப் பாடுவது பள்ளு இலக்கியம். முக்கூடல் என்னும் ஊர் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ளது. இங்குக் கோயில் கொண்டுள்ள அழகர்மீது பாடப்பட்டதே இந்நூல். பள்ளர், பள்ளியர்களுக்கிடையே நடைபெறும் வாழ்க்கைப் போராட்டங்களைப்பற்றிய நகைச்சுவைச் சித்திரமே முக்கூடற்பள்ளு.

இதனை இயற்றியவர் என்னயினாப்புலவர். இவரது மறு பெயர் வேலன் சின்னத்தம்பி என்பது. முத்துப்புலவரிடமும், நாச்சிமுத்துக் கவுண்டரிடமும் இவர் கல்வி பயின்றவர். இவரது காலம் 17ஆம் நூற்றாண்டு.

### அருஞ்சொற்பொருள்

1. ஆசூர் வடகரை நாடு - திருநெல்வேலிச் சீமையில் முக்கூடல் நகரை உள்ளடக்கிய பகுதி, மிடைந்த - நெருங்கிய, பூகம் - பாக்கு மரம், சூதம் - மாமரம், உளுக்கும் - சுளுக்கும், ஒண்குலை - அழகிய குலை.

2. சீவலமங்கைத் தென்கரை நாடு - திருநெல்வேலிச் சீமையில் மருதூரை உள்ளடக்கிய நாட்டுப்பகுதி, பங்கயம் - தாமரை, குரம்பு - கரை, இஞ்சியின் பாசடை - இஞ்சிச் செடியின் பச்சிலை, அளாவி - கலந்து, கை தரும் - கை கொடுக்கும்.

## 4. திருவேங்கட மாலை

ஆசிரியர், பிள்ளைப்பெருமாள் ஐயங்கார்; மறுபெயர், அழகிய மணவாள தாசர்; திருமங்கையில் வாழ்ந்த வைணவ அந்தணர்; திருவரங்கத்தில் மிக்க ஈடுபாடு கொண்டவர். இவர் பாடிய எட்டு நூல்களின் தொகுப்பு அஷ்டப்பிரபந்தம் எனப்படும். அவற்றுள் ஒன்றே திருவேங்கட மாலை. இது 100 செய்யுள்களைக் கொண்டது; திருவேங்கடத்துத் திருமாலைத் துதிக்கும் துதி நூல். இவர் காலம் 17ஆம் நூற்றாண்டு.

### அருஞ்சொற்பொருள்

சுனை - மலையில் உள்ள இயற்கை நீரூற்று, சாதகம் - மழைப் பறவை; வானத்திலிருந்து விழும் மழைத்துளியை உணவாக உடையது. விண்டாரை - (விண்+தாரை) வானத்திலிருந்து விழும் மழைத்தாரை, வேடுவர் - காட்டில் வேட்டையாடி வாழும் இனத்தவர், விண்டாரை - பகைவரை, மழைப்புள் விண் தாரையை விரும்பும்; வேடுவர் பகைவரை நாடுவர். இப்பாட்டில் விண்டாரை என்பது ஒரு சொல்லாய்ப் பகைவரையும், இரு சொல் தொகையாய் மழைத்துளியையும் குறிக்கும். இவ்வாறு இரு பொருள்பட அமையும் வெண்பாக்களைச் சிலேடை வெண்பா என்பர். இதன் முற்பகுதி சிலேடையாகவும், பிற்பகுதி தலத்தின் புகழாகவும் அமையும். தொண்டு - தொண்டர், ஏவ - ஏவிப் பணி செய்ய.

உடையார் - உடைமையாகப் பெற்றவர், முன்னாள் - பண்டைக் காலத்தில், எடுத்த - பிடித்த, கோவத்தனம் - கோவர்த்தன மலை. கோவர்த்தனம் என்னும் மலையைக் குடையாகப் பிடித்தவன் கண்ணன். கண்ணன் விடாப் பெருமழையிலிருந்து ஆயர்களையும் பசுக்கூட்டங்களையும் காப்பாற்றக் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்தான் என்பது வரலாறு. குன்று - மலை (திருவேங்கடம்).

## 5. சீட்டுக்கவி

சீகாழி அருணாசலக் கவிராயர் 1712 முதல் 1779 வரை வாழ்ந்தவர்; தில்லையாடியில் வேளாளர் குலத்தில் தோன்றியவர். இவர் தந்தையார் நல்லதம்பிப் பிள்ளை; தாய் வள்ளியம்மை. இவர் தருமை ஆதீன அம்பலவாணத் தம்பிரானிடம் கல்வி கற்றவர்; பன்மொழிப்புலமை உடையவர். இவர் இயற்றிய நூல்கள் 'இராம நாடகம், சீகாழித் தலபுராணம், சீகாழிக் கோவை, அனுமார் பிள்ளைத்தமிழ், அசோமுகி நாடகம்' என்பவை. இவர் பாடிய சில தனிப்பாடல்களும் உள்ளன. அவற்றுள் இச்சீட்டுக்கவியும் ஒன்று.

சீட்டுக்கவி என்பது செய்யுள் மூலம் ஒருவர் மற்றவருக்குச் செய்தி அனுப்பும் மடல்.

### அருஞ்சொற்பொருள்

கணிகொண்ட - மதிக்கப்பட்ட, பஞ்சலட்சணம் - ஐந்து இலக்கணம் (எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி), இராமாயணத்தின் விரிவு கருதி 'இராமாயணக்கடல்' என்கிறார். கவிராயன் - சிறந்த கவிஞன், காழி - சீர்காழி, ஓலை - ஓலையில் எழுதப்படும் கடிதம், மணி - மணியாகிய ஆபரணம், மகிபாலகன் - அரசன், சுதன் - புதல்வன், வணிகாதிபன் - (வணிக+அதிபன்) வணிகத்தில் சிறந்தவன், அதிபன் - தலைவன், தேப்பெருமாள் - ஆசிரியரை ஆதரித்த அரசன், மகீபன் - அரசன், அணி - அழகு, தியாகேசர் வண்ணம் - திருவாரூரில் எழுந்தருளி இருக்கும் தியாகராசப் பெருமானைத் துதித்துப் பாடும் இசைப்பாட்டு நூல், வெகுமதி - பரிசில், புவி - உலகம், பணிகொண்ட - இயற்றிய, இராம கீர்த்தனை - இராமநாடகக் கீர்த்தனை; கம்பராமாயணத்தைப் பின்பற்றிக் கீர்த்தனைக் கவியாகப் பாடப்பட்ட நூல்; இசை நயமும் இலக்கிய நயமும் செறிந்தது. பரிந்து - விரும்பி, பார் - பூமி, ஆயிரம் பிறை கண்டு வாழ்தல் - நீண்ட நாள் வாழ்தல்.

## 6. கச்சிக்கலம்பகம்

இதன் ஆசிரியர், தொண்டை நாட்டில் உள்ள பூண்டி என்னும் சிற்றூரைச் சார்ந்தவர்; 1844ஆம் ஆண்டு பூண்டி சுப்பராய முதலியாருக்குப் புதல்வராய்ப் பிறந்தார்; சென்னை மாநிலக் கல்லூரியில் கணிதப் பேராசிரியராய்ப் பணி புரிந்தார்; ஆங்கிலம், தமிழ், வரலாறு, தத்துவம் முதலிய பல துறைகளில் சிறந்து விளங்கினார்; 49ஆம் வயதில் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

கலம்பகம் என்பது, பல்வேறு வகையான பாடல் வகைகளும் பொருள்களும் கொண்ட சிற்றிலக்கியம்.

கச்சி - காஞ்சீபுரம். காஞ்சியில் உள்ள ஏகாம்பர நாதர் புகழ் பாடுவது இக்கலம்பகம்.

வண்டு விடு தூது என்பது, ஒரு பெண் வண்டைத் தூதாக விடுவதாகப் பாடப்படுவது. தூது பற்றிய விளக்கத்தை 'முகில் விடு தூது' பற்றிய உரைப்பகுதியில் காண்க.

### அருஞ்சொற்பொருள்

ஓர் கால் - ஒரு முறை, அறு கால் உற்றனை - ஆறு கால்களைப் பெற்றுள்ளாய், 'ஆறு முறை சென்றாய்' என்றும் பொருள்படும். அமலர் - இறைவர், மார்பாடும் - மார்பில் அசையும், தாராய கொன்றை - கொன்றை மாலை, சேறி - செல்வாய் (முன்னிலை வினைமுற்று), வண்டே - விளி, பேராத - நீங்காத.

## 7. கபிலர் அகவல்

இப்பாடலைப் பாடிய கபிலர் திருவள்ளுவருடன் பிறந்தவர் எனச் செவிவழிச் செய்தியொன்று உண்டு. இதனை உறுதியாகக் கூறத்தக்க சான்றுகள் இல்லை. புறநானூற்றுப் பாடல்களைப் பாடிய கபிலர் இவர் அல்லர். இவர் காலம் 14ஆம் நூற்றாண்டு என்பர்.

### அருஞ்சொற்பொருள்

நா - நாக்கு, கடிப்பாக - பறையை அடிக்கும் கோலாக, நாக்கடிப்பு, வாய்ப்பறை - நாவாகிய கடிப்பு, வாயாகிய பறை (உருவகம்), ஆக்கை - உடம்பு, ஐம்மூன்று - பதினைந்து ஆண்டுகள், அதாஅன்று - அதுவன்றி, இன்னே - இப்போதே, நாளைநாளை - அடுக்குத்தொடர், கூற்றுவன், நமன் - எமன், தமர் - சுற்றத்தார், நல்குரவு - வறுமை, தறுகணாளன் - அஞ்சாமையுடையவன், ஆர்த்து - பிணைத்து, புந்தி - அறிவு, சலம் - வஞ்சனை, சதுர் - சாமர்த்தியம்.

## 8. காந்தியின் வாழ்வு

நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளை 1888 முதல் 1972 வரை வாழ்ந்தவர்; சேலத்தை அடுத்த நாமக்கல்லைச் சார்ந்தவர். இதனால் இவரை 'நாமக்கல் கவிஞர்' என்று வழங்கு வர். இவர் அரசவைக் கவிஞராய் விளங்கியவர்; நாட்டு விடுதலைப் போரில் ஈடுபட்டுச் சிறை சென்றவர்; காந்தி அடிகளிடம் அன்பு கொண்டவர். இவரைக் 'காந்தியக் கவிஞர்' என்றும் வழங்குவர்.

### அருஞ்சொற்பொருள்

சாந்தி - அமைதி, சத்திய நெறி - உண்மை வழி, இமயம் - இமயமலை, சகலரும் - எல்லாரும்.

## 9. தமிழ்க்குமரி

**ச.து. சுப்பிரமணிய யோகியார்** தேசபக்தருள் ஒருவர்; துரைசாமி ஐயருக்கும் மீனாட்சி அம்மையாருக்கும் புதல்வராய்ப் பிறந்தார். பால பாரதி வேங்கடேச ஐயர் இவருக்குக் குரு. 'தமிழ்க் குமரி,' 'அகல்யா,' 'மேரி மக்தலேனா' முதலிய கவிதைகளை இவர் பாடியிருக்கிறார்; கூத்தநூலுக்கு உரை எழுதியுள்ளார்; 1963இல் அமரரானார்.

### அருஞ்சொற்பொருள்

மது - தேன், பொங்கர் - சோலை, தமனியம் - பொன், ஈடில்லை - ஒப்பு இல்லை, நறவம் - தேன், பந்தர் - பந்தல் (போலி), மந்த மாருதம் - தென்றற்காற்று, இந்து - சந்திரன்.

### வினாக்கள்

1. பாலை நிலக் காட்சியைக் கலிங்கத்துப்பரணி எவ்வாறு வருணிக்கிறது?
2. 'இரட்டுற மொழிதல்' என்பது யாது?
3. 'ஆறுதலை' என்று காளமேகப்புலவர் இரட்டுற மொழியும் வகையைப் புலப்படுத்துக.
4. 'ஐங்கரர்க்கு மாறுதலையானதே.'—பொருளை விளக்குக.
5. ஆசூர் வடகரை நாட்டு வளத்தை முக்கூடற்பள்ளு எவ்வாறு போற்றுகிறது?
6. சீவலமங்கைத் தென்கரை நாட்டில், பங்கயம், இஞ்சி, மஞ்சள், செந்நெல், கரும்பு ஆகியவை எவ்வாறு வளர்ந்தோங்கின?
7. 'சாதகமும் வேடுவரும் விண்டாரை நாடுகின்ற வேங்கடமே.'—இதில் 'விண்டாரை' என்பதற்கு அமைந்த இரு பொருளையும் விளக்குக.
8. திருவேங்கடமுடையானைப் பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் எவ்வாறு புகழ்கின்றார்?
9. சீட்டுக்கவியின் இயல்புகளை விவரிக்க.
10. அருணாசலக்கவிராயர் தம்மை எவ்வாறு அறிமுகப்படுத்துகிறார்?
11. தேப்பெருமாள் மகீபன் எத்தகைய சிறப்புடையவன்?
12. அருணாசலக்கவிராயர் தம் சீட்டுக்கவி மூலம் தேப்பெருமாளிடம் வேண்டுவது யாது?
13. 'ஓர்கால் செலின் அறுகால் உற்றனை என்பார்,' என வண்டை நோக்கிக் கூறும் நயத்தைப் புலப்படுத்துக.
14. வண்டைத் தூது விடும் தலைவி, அதற்குக் கூறிய செய்தி யாது?

15. மக்களின் ஆயுட்காலம் எவ்வெவ்வாறு கழிகின்றன?

16. செல்வம், இளமை, வாழ்நாள் ஆகிய மூன்றும் எவை போன்றவை?

17. நிலையாமை உணர்ந்து மக்கள் செய்ய வேண்டிய கடமைகளாகக் கபிலர் கூறுவன யாவை?

18. எமனைத் 'தறுகணாளன்' எனக் குறிப்பிடக் காரணம் யாது?

19. உடலின் நிலையாமையை ஆசிரியர் எங்ஙனம் விளக்கிக் கூறியுள்ளார்?

20. காந்தியின் வாழ்வு காட்டும் உண்மைகள் யாவை?

21. 'தமிழ் நாட்டுக்கு ஈடில்லை எந்த நாடும்,' என்று தமிழ்க் குமரி ஆசிரியர் எடுத்துக்கூறக் காரணம் என்ன?

22. தமிழ் நாட்டின் இயற்கை வளத்தை யோகியார் எப்படி வருணிக்கிறார்?

# VII

# வழிபாட்டுப் பாடல்கள்

### திருவருட்பா

அப்பாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்;
ஆருயிர்கட் கெல்லாம்நான் அன்புசெயல் வேண்டும்;
எப்பாரும் எப்பதமும் எங்கணும்நான் சென்றே
எந்தைநின தருட்புகழை இயம்பியிடல் வேண்டும்;
செப்பாத மேனிலைமேல் சுத்தசிவ மார்க்கம்
திகழ்ந்தோங்க அருட்சோதி செலுத்தியிடல் வேண்டும்;
தப்பேது நான்செயினும் நீபொறுத்தல் வேண்டும்;
தலைவ! நினைப் பிரியாத நிலைமையும்வேண் டுவனே.

—இராமலிங்க சுவாமிகள்

### நாலாயிரத்திவ்வியப்பிரபந்தம்

தருதுயரந் தடாயேலுன் சரணல்லால் சரணில்லை
விரைகுழுவு மலர்ப்பொழில்சூழ் வித்துவக்கோட் டம்மானே!
அரிசினத்தா லீன்றதா யகற்றிடினும் மற்றவள்தன்
அருள்நினைந்தே யழுங்குழவி யதுவேபோன் றிருந்தேனே!

—குலசேகரப்பெருமான்

### சீவகசிந்தாமணி

திங்கள்மும் மாரி பெய்க! திருவறம் வளர்க! செங்கோல்
நன்கினி தரச ளுள்க! நாடெலாம் விளைக! மற்றும்
எங்குள அறத்தி னோரும் இனிதூழி வாழ்க! எங்கள்
புங்கவன் பயந்த மெய்ந்நூல் புகழொடும் பொலிக மிக்கே!

—திருத்தக்கதேவர்

### வீரசோழியம்

அருள்வீற் றிருந்த திருநிழற் போதி
முழுதுணர் முனிவ! நிற் பரவுதுந் தொழுதக
ஒருமன மெய்தி யிருவினைப் பிணிவிட்டு

முப்பகை கடந்து நால்வகைப் பொருளுணர்ந்து
ஓங்குநீ ருலகிடை யாவரும்
நீங்கா வின்பமொடு நீடுவாழ் கெனவே! 4

—புத்தமித்திரர்

சீறாப்புராணம்

திருவினுந் திருவாய்ப் பொருளினும் பொருளாய்த்
தெளிவினுந் தெளிவதாய்ச் சிறந்த
மருவினும் மருவா யணுவினுக் கணுவாய்
மதித்திடாப் பேரொளி யனைத்தும்
பொருவினும் பொருவா வடிவினும் வடிவாய்ப்
பூதலத் துறைந்தபல் லுயிரின்
கருவினுங் கருவாய்ப் பெருந்தலம் புரந்த
கருத்தனைப் பொருத்துதல் கருத்தே. 5

—உமறுப்புலவர்

இரட்சணிய யாத்திரிகம்

உலகமகிழ்ந் தீடேறப் பரலோக வாசிகளுக்
குவகை யேற
அலகையுளந் திகிலேற அகண்டபரி பூரணனூர்
அருண்மெய் வாக்கு
விலகிலதாய் நிறைவேறத் துதியேற நரவுருவாய்
விளங்கி யன்பாற்
சிலுவைமிசை யேறியமெய்ஞ் ஞானசூ ரியனடியைச்
சிந்தை செய்வாம். 6

—எச். ஏ. கிருஷ்ணப்பிள்ளை

குறிப்புரை

1. திருவருட்பா

திருவருட்பா இயற்றியவர் இயற்பெயர் இராமலிங்கர். இவரைத் திருவருட்பிரகாச வள்ளலார் என்றும் வழங்குவர். இவர் 1823இல் மருதூரில் இராமையாப் பிள்ளைக்கும் சின்னம்மைக்கும் புதல்வராய்ப் பிறந்தார்; இளமையிலேயே இறையன்பில் ஈடுபட்டார்; தமது 42ஆம் வயதில் வடலூரில் சமரச சன்மார்க்க சங்கத்தை நிறுவி, உயிர் இரக்கத்தை உலகுக்கு அறிவித்தார்.

இவர் சீவகாருண்ய ஒழுக்கம், மனுமுறை கண்ட வாசகம் முதலிய உரைநடை நூல்களையும் இயற்றியுள்ளார். இவர் பாடிய பாடல்கள் திருவருட்பா எனப்படும். இந்நூல் 6 திருமுறைகளாய்ப் பகுக்கப்பட்டுள்ளது.

### அருஞ்சொற்பொருள்

பார் - பூமி, எங்கணும் - எல்லா இடங்களிலும், எந்தை - எம் தந்தை, செப்பாத - சொல்லவியலாத, சிவமார்க்கம் - சிவநெறி.

### 2. நாலாயிரத்திவ்வியப்பிரபந்தம்

திருமால் அன்பர்களாகிய ஆழ்வார்கள் பாடிய பாடல் தொகுதி நாலாயிரத்திவ்வியப்பிரபந்தம் எனப்படும். அதில் குலசேகரப் பெருமாள் பாடிய பாடல்கள் பெருமாள் திருமொழி என வழங்கப்படும். வித்துவக்கோட்டுப் பெருமானைக் குறித்த திருமொழியில் உள்ளது இப்பாடல். இவர் சேர மன்னராய் இருந்து பின்பு துறவு பூண்டார்.

### அருஞ்சொற்பொருள்

சரண் - அடைக்கலம், விரை - மணம், அம்மானே - தலைவனே, அரிசினத்தால் - மிக்க கோபத்தால், ஈன்ற தாய் - பெற்ற தாய், குழவி - குழந்தை.

### 3. சிந்தாமணி

திருத்தக்க தேவர் சோழர் குடியில் பிறந்தவர். இவர் இளமையில் துறவு மேற்கொண்ட சமண முனிவர். இவர் இயற்றிய காப்பியம் சீவகசிந்தாமணி. இஃது ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்று. இது பெருங்காப்பிய வரிசையில் முதன்மையாக வைத்து எண்ணப்படுவது. இப்பாடல் சிந்தாமணியின் இறுதியில் அமைந்த வாழ்த்துப்பாட்டு.

### அருஞ்சொற்பொருள்

மாரி - மழை, திருவறம் - சமண ஒழுக்கம், செங்கோல் - அரசநீதி, ஊழி - முடிவுகாலம், புங்கவன் - தூயவனான அருக தேவன், பொலிக - விளங்குக.

### 4. வீரசோழியம்

இந்நூல் புத்த சமயத்தைச் சார்ந்த புத்தமித்திரர் இயற்றிய இலக்கண நூல். இதில் புத்த தேவர் துதியாய்ப் பல பாடல்கள் எடுத்துக்காட்டாய்த் தரப்பட்டுள்ளன. அவற்றுள் கலிப்பாவின் இறுதியுறுப்பாய் விளங்குவது இந்த ஆசிரியப்பா.

### அருஞ்சொற்பொருள்

போதி - அரசமரம், பரவுதும் - தொழுவோம் (தன்மைப் பன்மை), இருவினை - நல்வினை தீவினை, முப்பகை - காமம் வெகுளி மயக்கம், நால்வகைப்பொருள் - அறம் பொருள் இன்பம் வீடு, ஓங்கு நீர் - மிக்க நீரை உடைய கடல். ஒன்று முதல் நான்கு வரை எண்ணுப்பெயர். தொடர்ந்து வருவதால் இஃது எண்ணலங்காரம் எனப்படும்.

## 5. சீறாப்புராணம்

முகமது நபியின் வரலாற்றைப் பாடுவது இந்நூல். ஆசிரியர் உமறுப்புலவர்; இராமநாதபுரம் மாவட்டம் கீழக்கரையில் பிறந்தவர்; எட்டையபுரம் வேங்கடேசுவர எட்டப்ப பூபதியின் அவைப் புலவர்; கடிகை முத்துப் புலவரின் சீடர். இவரது காலம், 17ஆம் நூற்றாண்டு.

### அருஞ்சொற்பொருள்

திரு - மேன்மை, பொருள் - உண்மைப்பொருள், தெளிவு - அறிவு, மரு - மணம், மதித்திடா - அளவிடவியலாத, பொரு - ஒப்பு, பெருந்தலம் - உலகம், கருத்தன் - கருத்தாவாகிய இறைவன், பொருத்துதல் - இதயத்தில் இருத்துதல்.

## 6. இரட்சணிய யாத்திரிகம்

இந்நூலைப்பற்றிய விளக்கத்தைத் தொடர்நிலைச் செய்யுட் பகுதியில் காண்க.

ஏசு பெருமானைத் துதிக்கும் இப்பாட்டு இரட்சணிய சரிதப் படலத்தின் 2ஆம் பாடலாய் உள்ளது.

### அருஞ்சொற்பொருள்

உலகம் - உலகத்தார் (இடவாகு பெயர்), ஈடேற - கடைத்தேற (பிழைக்க), பரலோக வாசிகள் - முத்தி உலகத்தவர், உவகை - மகிழ்ச்சி, ஏற - மிக, அலகை - பேய் (சாத்தான்), திகில் - பயம், அகண்ட பரிபூரணனுர் - எங்கும் நிறைந்துள்ள கடவுள், விலகிலதாய் - நீங்காததாய், நரவுரு - மனித வடிவம், சிந்தைசெய்வாம் - நினைந்து வணங்குவோம்.

### வினாக்கள்

1. இராமலிங்கர் சிவபெருமானிடம் வேண்டுவன யாவை?
2. திருமாலையன்றித் தமக்கு வேறு புகலிடம் இல்லை என்பதைக் குலசேகரப்பெருமாள் எவ்வாறு விளக்குகிறார்?
3. திருத்தக்கதேவர் வேண்டுவன யாவை?

4. புத்த தேவர் எவ்வாறு புகழப்பட்டுள்ளனர்?

5. புத்தபிரானிடம் கவிஞர் தெரிவிக்கும் வேண்டுதல்கள் யாவை?

6. மெய்ஞ்ஞான சூரியனின் மெய்ப்புகழ்கள் யாவை?

# உரைநடைப்பகுதி

## 1. காமராஜ் ஆட்சியில் கல்விப் புரட்சி

[திரு. முருக. தனுஷ்கோடி]

இந்த நூற்றாண்டுத் தமிழகத்தின் மகத்தான வரலாற்று நாயகர், தலைவர் காமராஜ் ஆவார். மனித குலத்துக்கும் நாட்டுக்கும் அருந்தொண்டாற்றும் அருளாளர்கள் நம் நாட்டில் இடையிடையே தோன்றிவருவார்கள். அத்தகையோரின் வரிசையில் தாமும் ஒருவராக விளங்கியவர் காமராஜ். 1903ஆம் ஆண்டு ஜூலை மாதம் 15ஆம் தேதியன்று விருதுநகரில் குமாரசாமி-சிவகாமி அம்மாள் தம்பதியர்க்கு மகவாய் உதித்தார் காமராஜ். சிறு வயதிலேயே தேசிய விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்ட காமராஜ், தமிழ்நாட்டின் முதலமைச்சராக 1954ஆம் ஆண்டு ஏப்ரல் 13ஆம் தேதியன்று பதவி ஏற்றார்.

கல்வியைக் கண் என்று போற்றியவர்கள் தமிழர்கள். 'அறிவாளிகள் நிறைந்தது தமிழ்நாடு,' என்னும் பெருமை நமக்கு ஏற்பட்டதும் இதனால்தான். இந்தத் தமிழ்க் குலத்தில் தோன்றிய காமராஜ், தமது ஆட்சிக் காலத்தில், கல்வித் துறையில் செய்த பெரும் புரட்சி அழியாச் சிறப்புடையதாகும்.

படிக்கக் கல்வி நிலையங்கள் வேண்டும். இதுதான் முதல் நடவடிக்கை. 'இல்லாமை என்னும் இருளில் மக்கள் சிக்கிக்கிடக்கும் போது, கல்வி ஒளியூட்டும் பள்ளிகளை மூடுவதா? இது கொடுமை.' என்று காமராஜ் சினந்தார். எனவே, மூடப்பட்டுக்கிடந்த ஆறு யிரம் தொடக்கப் பள்ளிகளையும் திறக்க ஆணையிட்டார். இவை போதவில்லை என்று மேலும் 14 ஆயிரம் புதிய பள்ளிகளையும் திறந்தார். ஆண்டுதோறும் பள்ளிகளின் எண்ணிக்கை பெருகியது.

வயது வந்தவர்களுக்கெல்லாம் வாக்குரிமை உண்டு என்று ஆனபின்னர் படிக்காமல் இருப்பது தவறு என்பதைக் காமராஜ் உணர்ந்தார்.

முதல் திட்ட முடிவில் தொடக்கப் பள்ளிகளின் எண்ணிக்கை 21 ஆயிரத்து 500ஆக உயர்ந்தது. இரண்டாவது திட்டக் காலத்தில் இது 26 ஆயிரத்து 750ஆக உயர்ந்தது. அதன் பின்னர் இந்த எண்ணிக்கை 30 ஆயிரத்தையும் தாண்டிவிட்டது.

தொடக்கப் பள்ளிக்குச் செல்லும் மாணவர் தொகை முதல் திட்டக் காலத்தில் 25 இலட்சமாக உயர்ந்தது; இரண்டாவது திட்ட இறுதியில் 33·3 இலட்சமாக இருந்தது. பின்னர் 46·1 இலட்சமாக உயர்ந்தது. மூன்றுவது திட்டக் காலத்தில் மேலும் 14 இலட்சம் சிறுவர்களைப் பள்ளியில் சேர்க்கவேண்டும் என்று அளவு நிர்ணயிக்கப்பட்டது. ஆனால், 1962-63க்கு முன்பே, மேலும் 12·3 இலட்சம் பேர் பள்ளியில் சேர்ந்துவிடுவார்கள் என்னும் நிலை ஏற்பட்டது.

கல்வியின் சிறப்பை உணராத மக்கள், சின்னஞ்சிறு குழந்தைகளைக் கல்லாத மூடராக்கிவரும் தீமைதனைக் கண்டு வெகுண்டார் காமராஜ். கட்டாயத் தொடக்கக் கல்வித் திட்டத்தை உருவாக்கினர். இன்று பல்லாயிரக்கணக்கான சிற்றூர்களில் இத்திட்டம் நிறைவேறுகிறது. இலட்சோபலட்சம் குழந்தைகள் கல்வி ஒளி படைத்தவர்களாகிவருகிறார்கள்.

சிற்றூர்தோறும் கல்விப் பிரசாரம் செய்வதற்கான குழுக்கள் அமைக்கப்பட்டு குழந்தைகளைப் பள்ளிகளில் சேர்க்க ஆவன செய்யப்பட்டன.

இலவசக் கல்வி வசதி, கட்டாயக் கல்விமுறை ஆகிய இரண்டும் நடைமுறையில் இருந்தும் எல்லாக் குழந்தைகளும் படிக்கும் நிலை ஏற்படவில்லை. இந்த நிலை ஏன் என்று காமராஜ் கவலையுடன் சிந்தித்தார்; சிற்றூர்களிலுள்ள மக்களைச் சந்தித்தார். இதன் பயனாக இந்நிலைக்கான காரணங்களைக் காமராஜ் அறிந்துகொண்டார். இதற்குப் பரிகாரமும் அவர் மனத்தில் தோன்றியது.

வறுமையில் மெலிந்த உடல், ஒளியில்லாத கண், எண்ணெய் இல்லாத தலை, உடை இல்லாத உடம்பு, ஒதுங்கி வாழக் குடிசை, வயிறார உண்ண ஒருவேளைக் கஞ்சி ஆகியவை இல்லாத ஏழை தன் குழந்தைகளை எப்படிப் பள்ளிக்கு அனுப்புவான்?

ஒரு வேளையாவது குழந்தைகளுக்குப் பள்ளியிலேயே உணவு அளித்தால் பிள்ளைகளைப் பள்ளிக்கு அனுப்பும் ஆசை, பெற்ற தாய்க்கும் தந்தைக்கும் ஏற்படுமே. இதைக் காமராஜ் உடனே செய்தார்.

இலவச மதிய உணவுத் திட்டம் இலட்சக்கணக்கான குழந்தைகளைப் பள்ளிக்கு வரச்செய்தது. உலக நாடுகள் பலவும் இதைப் பாராட்டின. ஓர் அமெரிக்க அறிஞர் இதை அமெரிக்காவில் பிரபலப்படுத்தப்போவதாக ஒருமுறை அறிவித்தார். நேரு இத்திட்டத்தைக் கண்டு உள்ளம் பூரித்தார்.

மதிய உணவு அளிக்கும் திட்டம் 1956இல் முறையாகத் தொடங்கப்பட்டது. இதற்கு முன்பு மக்கள் தாங்களே ஏற்று நடத்துவதாக இருந்த திட்டம், அரசாங்க மானியம் வழங்கப் பட்டதுமுதல் வலுப்பெற்றுவிட்டது.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட இறுதிக்குள்ளாக மாநிலத்தி லுள்ள பெரும்பகுதிப் பள்ளிகளில் இலவச மதிய உணவுத் திட்டம் நடைமுறைக்கு வந்துவிட்டது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் தொடர்ந்து இத்திட்டம் தீவிரமாக நடை முறைப்படுத்தப்பட்டது. பின்னர், 14 இலட்சத்துக்கும் அதிக மான சிறுவர்கள் இத்திட்டத்தால் பயன்பெற்றார்கள்.

மக்கள் அளிக்கும் உதவி, அரசாங்கம் அளிக்கும் மானியம் இவை இரண்டுடன் 1961-62இல் அமெரிக்காவின் 'கேர்' நிறு வனத்தின் உதவியும் இத்திட்டத்திற்குக் கிடைத்தது. பால் தூள், சோள மாவு, தாவர எண்ணெய் ஆகிய பொருள்களைக் 'கேர்' நிறுவனம் நம் தொடக்கப் பள்ளிகளுக்கு இலவசமாக வழங்கியது.

கல்வி வளர்ச்சியில் ஆழ்ந்த அக்கறை கொண்ட காமராஜ், மக்களின் ஆர்வத்தை மேலும் தீவிரப்படுத்த விரும்பினார். கல்வியை வளர்க்கவும் பரப்பவும் கல்வித் திட்டங்களை நிறைவேற்ற வும் நிருவகிக்கவும் அரசாங்கம் பல்வேறு பொறுப்புகளையும் ஏற்றுக் கொண்டிருக்கிறது. இது நெடுநாளைய நிலைமை. எனினும், காமராஜ் ஆட்சிக் காலத்தில் அரசாங்கத்தின் இந்தப் பொறுப்புப் பல மடங்கு உயர்ந்தது. அதனால், பல புதுத் திட்டங்கள் நிறை வேறின.

கல்விப் பணிகளில் மக்கள் நேரடியான ஈடுபாடும், காட்ட வேண்டிய அளவுக்கு அக்கறையும் காட்டவில்லை. பள்ளிகள் கட்டு வதும் பகல் உணவு அளிப்பதும் ஆசிரியரை நியமிப்பதும் ஏதோ அரசாங்கம் செய்ய வேண்டிய பணிகள்; இவற்றில் நமக்கு எந்தப் பொறுப்பும் இல்லை என்ற நிலைதான் மக்களிடம் நிலவியிருந்தது. இதை மாற்றிக் கல்வித் துறையின் வரலாற்றிலேயே என்றும் கண்டிராத மாபெரும் புரட்சி இயக்கம் ஒன்றைக் காமராஜ் தொடங்கினார்.

'கல்வி என் பொறுப்பு; கல்வி வளர்ச்சிக்குப் பாடுபடுவது என் கடமை,' என்னும் உணர்ச்சி ஒவ்வொரு மனிதரின் உள்ளத்திலும் ஏற்படும்படி செய்தது அந்த அற்புத இயக்கம். அதன் பெருமையை எழுத்தால் விளக்கிவிட இயலாது. அதுதான் பள்ளிவளர்ச்சித் திட்டம். இதை மக்கள் இயக்கமாக்கி மக்கள் உணர்ச்சியை இதில் இரண்டறக் கலக்கச் செய்த பெருமை காமராஜுக்கே உரியது.

தமிழ்நாடெங்கும் பள்ளி வளர்ச்சி இயக்க மாநாடுகள் நடத்தப்பட்டன. இருபத்தைந்து மாதங்களில் தமிழகமெங்கும் நடைபெற்ற 133 மாநாடுகளின் வாயிலாக 6 கோடியே 47 இலட்ச ரூபாய் பெறுமானமுள்ள நன்கொடைகள் கிடைத்தன. பணமாக மட்டும் ஏறத்தாழ 4 கோடி ரூபாய் நன்கொடை அளித்தார்கள் மக்கள்.

புதுமையான இத்திட்டம் அனைவரையும் கவர்ந்தது. காமராஜை உலக மக்கள் மனமாரப் பாராட்டினார்கள். ஏழைக் குழந்தைகளுக்கு இலவசமாகப் பாடநூல், எழுதுபலகை ஆகியவை வழங்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டன. இலட்சக்கணக்கான ஏழைச் சிறுவர்கள் பயன்பெற்றார்கள்.

ஏழைச் சிறுவர்களுக்கு இலவசமாகச் சீருடை வழங்கும் திட்டம் ஒன்றும் வகுக்கப்பட்டுச் செயற்படுத்தப்பட்டது. குழந்தைகளிடையே ஏழை-பணக்காரன் என்னும் ஏற்றத்தாழ்வு ஏற்படாமல் தடுக்க ஏதாவது வழி செய்யப்படவேண்டும் என்று காமராஜ் சிந்தித்தார். அதன் பயன்தான் இலவசச் சீருடைத் திட்டம். இதனால், குழந்தைகளின் உள்ளத்தில் தாழ்வு உணர்ச்சி தலைகாட்ட இடமில்லாமல் போகுமன்றோ? இன்று பள்ளிகளில் மனத்தைக் கவரும் கண்கொள்ளாக் காட்சியாகச் சீருடை அணிந்து சிறுவர்-சிறுமியர் காணப்படுகின்றார்கள். இத்திட்டத்தின் வாயிலாகப் பல இலட்சம் குழந்தைகள் பயன் அடைந்தார்கள்.

எல்லாருக்குமே இலவசக் கல்வி அளிக்கவேண்டும் என்பது காமராஜ் விருப்பம். இதனை நிறைவேற்ற, 1955-56ஆம் ஆண்டு முதன்முதலாக எல்லா ஏழைக் குழந்தைகளுக்கும் இலவசக் கல்வி அளிக்க உத்தரவிட்டார்.

11ஆம் வகுப்புவரை ஏழைப் பிள்ளைகள் அனைவருக்கும் இலவசக் கல்வி அளிப்பது என்று 1960ஆம் ஆண்டில் காமராஜ் முடிவு செய்தார். இந்தச் சலுகை பெறும் சிறுவர்களின் பெற்றோருக்கு ஆண்டு வருவாய் ரூ. 1,200-க்குக் குறைவாக இருக்க வேண்டும் என்பது நிபந்தனை. இந்த நிபந்தனையை 1962-63ஆம் ஆண்டில் காமராஜ் திருத்தியமைத்தார். ஆண்டு வருவாய் ரூ. 1,500 வரை உள்ளவர்களின் குழந்தைகளுக்கும் 11ஆம் வகுப்பு வரை இலவசக் கல்வி அளிக்க உத்தரவிட்டார். இதுவன்றியும் அரசிதழ்ப் பதிவுபெறாத அரசாங்க ஊழியர்கள், உள்ளாட்சி மன்ற ஊழியர்கள் ஆகியோரின் குழந்தைகளுக்கும் உயர்நிலைப் பள்ளிகளில் இறுதி வகுப்புவரை கட்டணம் கட்டவேண்டியதில்லை என்று உத்தரவிடப்பட்டது.

1956-57ஆம் ஆண்டு முதல் தொடக்கப் பள்ளி ஆசிரியர்கள், காவலர்கள், தலைமைக் காவலர்கள், கடைநிலை அரசாங்க ஊழியர்கள் ஆகியோரின் குழந்தைகளுக்கு உயர்நிலைப் பள்ளி இறுதி வகுப்புவரை முழுக் கட்டணச் சலுகை அளிக்கப்பட்டது. இந்தத் திட்டங்களின் விளைவாக 100க்கு 83 விழுக்காடு மாணவர்கள் இலவசக் கல்வி பெறுவதாகவும் எஞ்சிய 17 விழுக்காடு மாணவர்களே இலவசக் கல்வி பெறாதவர்கள் என்பதாகவும் தெரியவந்தது. இவர்களுக்கும் பயன் கிட்டும் வண்ணம் எல்லாருக்குமே இலவசக் கல்வி என்னும் திட்டம் 1962ஆம் ஆண்டு நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டது.

கல்வித் துறையில் காமராஜ் ஆற்றிய பணிகளுக்கு அவர் செயற்படுத்திய புரட்சிகரமான திட்டங்களும் மக்களிடையே கல்வி ஆர்வம் கரைபுரண்டு ஓடச் செய்தன. இதன் விளைவாக, இன்று தமிழகத்தில் தொடக்கப் பள்ளிகள் இல்லாத சிற்றூர்களே இல்லை என்னும் பெருமிதம் மிக்க நிலை ஏற்பட்டிருக்கிறது. 5 கல் தொலைவிற்கு ஓர் உயர்நிலைப் பள்ளியும் அமைக்கப்பட்டிருக்கின்றது.

பள்ளிகளின் எண்ணிக்கையைப் பெருக்கிய அதே வேளையில் கல்வித் தரத்தைக் காக்கவும் உயர்த்தவும் பல்வேறு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. பள்ளிகளின் வேலை நாள்கள் எண்ணிக்கை ஆண்டுக்கு 180 என்று இருந்தது 200ஆக உயர்த்தப்பட்டது.

பல வகைப்பட்ட திறன்களுக்கும் வாய்ப்பளிக்கும் வண்ணம் பாடத் திட்டங்கள் ஏற்படுத்தப்பட்டன. இருகூறு வகுப்புகள் பல தொடங்கப்பட்டன. 45 பலநோக்குப் பள்ளிகளும் திறக்கப்பட்டன. பள்ளிகளில் அறிவியல் பாடத்தை நன்றாகக் கற்பிப்பதற்காக நவீன ஆய்வுக்கூடங்கள் ஏற்படுத்தப்பட்டன; நூல் நிலையங்களும் திறம்பட நிறுவப்பட்டன.

ஆசிரியர்களின் தரத்தை உயர்த்தவும் அவர்களுக்குத் தங்கள் பணியில் ஆர்வம் ஏற்படுத்தவும் வேண்டி ஊதியத்தில் உயர்வு அளிக்கப்பட்டது. மேலும், ஓய்வூதியம், வருங்கால வைப்பு நிதி, கட்டாயக் காப்புறுதி என்னும் முப்பெரும் நன்மை தரும் புரட்சித் திட்டத்தையும் காமராஜ் செயற்படுத்தினர். இத்திட்டத்தை இந்தியாவில் முதன்முதலில் நிறைவேற்றிய பெருமை காமராஜையே சாரும். இத்துடன் குடும்ப ஓய்வூதியத் திட்டமும் ஆசிரியர்களுக்குக் கொண்டுவரப்பட்டது.

சிற்றூர்களில் உள்ள ஆசிரியர்களுக்கு அரசாங்கமே வீடு கட்டிக் கொடுக்கும் திட்டம் ஒன்றும் வகுக்கப்பட்டது. இதற்கென மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 25 இலட்சம் ஒதுக்கப்பட்டது.

மருத்துவக் கல்லூரி, பொறியியல் கல்லூரி, வேளாண்மைக் கல்லூரி முதலிய தொழில் கல்லூரிகளில் படிக்கும் ஏழை மாணவர்களுக்கு வட்டியில்லாக் கடன் அளிக்கும் ஏற்பாட்டினைக் காமராஜ் செயற்படுத்தினர். இதனால், தொழில் கல்லூரிகளில் சேரும் ஏழை மாணவர் தொகை பெருகியது.

காமராஜ் ஆட்சிக் காலத்தில் அரசாங்கக் கலைக் கல்லூரிகளின் எண்ணிக்கை வேகமாக உயர்ந்தது. 2 உடற்பயிற்சிக் கல்லூரிகளும் 10 ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிகளும் 39 ஆசிரியர் பயிற்சிப் பள்ளிகளும் திறக்கப்பட்டன. தமிழ்நாட்டில் மேலும் ஒரு பல்கலைக் கழகம் தொடங்கவும் காமராஜ் அமைச்சரவை ஆவன செய்தது.

இவ்வாறாக, காமராஜ் ஆட்சிக் காலத்தில் தமிழ்நாட்டின் கல்வித் துறையில் மிகப் பெரிய புரட்சி நடைபெற்று மக்களுக்குக் கல்வியின் பலன் கனிந்து கிட்டியது.

### அருஞ்சொற்பொருள்

நடவடிக்கை - செயல், பிரசாரம் - கருத்துப் பரப்புதல், இலட்சோப லட்சம் - இலட்சக்கணக்கான, பரிகாரம் - தீர்வு, பிரபலப்படுத்துதல் - ஒரு பொருளைப் புகழ்ந்து மக்களிடையே கருத்துப் பரப்புதல், பூரித்தார் - மகிழ்ச்சியால் பெருமிதம் அடைந்தார். மானியம் - கொடை.

### வினாக்கள்

1. காமராஜ் ஆட்சிக்கு வந்ததும் மேற்கொண்ட முதல் நடவடிக்கை யாது?
2. காமராஜ் ஆட்சி காலத்தில் பள்ளிகளின் எண்ணிக்கையும் மாணவர்களின் எண்ணிக்கையும் உயர்ந்த விதத்தினை விளக்குக.
3. இலவசக் கல்வி முறை நடைமுறையில் இருந்தும் ஏன் ஏழைகளின் பிள்ளைகள் பள்ளி செல்லவில்லை? இதற்குக் காமராஜ் கண்ட பரிகாரம் என்ன?
4. இலவச மதிய உணவுத் திட்டம் தீவிரமடைந்த விதத்தினை விளக்குக.
5. பள்ளி வளர்ச்சி இயக்க மாநாடுகளினால் ஏற்பட்ட நன்மைகள் யாவை?
6. சீருடைத் திட்டத்தினால் விளைந்த புரட்சிகர விளைவு யாது?
7. எல்லாருக்குமே இலவசக் கல்வி என்னும் இலட்சியத்தைக் காமராஜ் எவ்வாறு நிறைவேற்றினர்?
8. கல்வித் தரம் உயரக் காமராஜ் செய்த பணிகள் யாவை?
9. ஆசிரியர்கள், ஏழை மாணவர்களுக்குக் காமராஜ் ஆட்சி செய்துதந்த வசதிகள் யாவை?

## 2. நாடக வளர்ச்சித் திட்டம்

[அறிஞர் அண்ணா]

*[10-9-1967இல் தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகளின் நூற்றாண்டு விழா, சென்னை ஏ. வி. எம். இராசேசுவரி திருமண மண்டபத்தில் நடைபெற்றபோது, 'ஔவை' தி. க. சண்முகம் அவர்களின் 'நாடகக்கலை' என்னும் நூலினை வெளியிட்டு அறிஞர் அண்ணா அவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவு]*

அன்புள்ள தலைவர் அவர்களே! பெரியோர்களே! தாய்மார்களே! நண்பர்களே!

நாடகக்கலைக்கு அடிப்படையான நல்ல தொண்டாற்றிய சங்கரதாஸ் சுவாமிகளின் நூற்றாண்டு விழாவில் நான் கலந்து கொள்வதற்கான வாய்ப்புக் கிட்டியதற்கு மிக்க மகிழ்ச்சி அடைகின்றேன்.

தலைமையேற்றிருக்கின்ற தமிழ்ப்பேரறிவாளர், டாக்டர் மூ. வரதராசனார் அவர்கள், நாடகக்கலையினுடைய மாண்பினைப் பற்றி மிக நல்ல முறையிலே எடுத்துச்சொன்னார்கள். ஓவியம், காவியம், இசை இவைகள்மூலமாக மக்கள் கருத்துகளைப் பெற்றுக் கொள்வதைவிட நாடகத்தின்மூலம் எளிய முறையில்—இனிய தன்மையில்—கருத்துகளைப் பெற்றுக்கொள்ள இயல்கிறது. அதனால்தான் இந்த நாட்டிலேயும் பிற நாடுகளிலேயும் நாடகக் கலையிலே நாட்டு மக்களுக்கெல்லாம் மிகுந்த விருப்பம் நாளுக்கு நாள் வளர்ந்தவண்ணமிருக்கிறது.

### நாடகத்தின் பயன்

மூன்று மணி நேரம் வேறு பல வேலைகளிலே ஈடுபடவிருக்கின்ற மக்களை நாம் அழைக்கின்றோம்; 'இன்றைய தினம் நாங்கள், இந்த நாடகத்தை நடத்துகின்றோம்; காண வாருங்கள்,' என்று அழைக்கின்றோம். மூன்று மணி நேரம் அவர்கள் தங்களுடைய சொந்தத் தொல்லைகளையெல்லாம் மறந்து, ஒரு புதிய உலகத்தில்—ஒரு தனி உலகத்தில்—மூன்று மணிநேரம் மாத்திரமே நிலைத்திருக்கத் தக்க ஓர் உலகத்தில் வந்து அமர்கிறார்கள். அமர்ந்திருக்கின்ற அந்த மூன்று மணி நேரத்தில், அவர்கள், தங்களையும் தங்கள் பிரச்சினைகளையும் மறந்து, நாடக மேடையில் எந்தப் பிரச்சினை எடுத்துச்சொல்லப்படுகிறதோ, அந்தப் பிரச்சினையைத் தங்கள் பிரச்சினையாக்கிக்கொண்டு, நாடக மேடையில் எந்தக் காட்சி காட்டப்படுகிறதோ அந்தக் காட்சியோடு தங்களை இணைத்துக் கொண்டு, நாடக மேடையில் எந்தக் கருத்து எடுத்துச்சொல்லப்

படுகிறதோ, அந்தக் கருத்துக்குத் தங்களை உடையவர்களாக்கிக் கொண்டு, மெய்ம்மறந்த நிலையில்—ஆனால், புதியதோர் உலகில்—ஆனால், இன்பகரமான உலகில்—ஈடுபட்டிருக்கின்றார்கள். திரும்பிச் செல்கின்ற நேரத்தில் அவர்கள் உள்ளே நுழைகின்றபொழுது கொண்டுவந்த கருத்தோடுகூட, இரண்டொரு கருத்துகளை யாகிலும் வெளியே எடுத்துச்செல்கின்றார்கள். கருத்துகளை எடுத்துச்செல்வதைவிட, நடை உடை பாவனைகளையே அதிகமாக எடுத்துச்செல்கிறார்கள் என்பதை நாம் மறந்துவிடவில்லை. ஒரு நாடகத்தைப் பார்த்ததும், அதிலே கண்ட நடை, அதிலே பேசிய பேச்சு, அதிலே காணப்பட்ட உடைகள், அதிலே காணப்பட்ட காட்சி, அதிலே தெரிந்த புன்னகை ஆகியவைகளையெல்லாம் அதிகமான அளவுக்கு வெளியே கொண்டுசெல்வதில் நம்முடைய ரசிகர்கள் மிக்க சமர்த்தர்கள். ஆனால், நாடகம் மூலமாகத் தரப்பட்டிருக்கின்ற கருத்துகளில் இரண்டொரு கருத்துகளையாகிலும் அவர்களுடைய உள்ளத்திலே தாங்கிச் செல்வார்களேயானால், அந்த மூன்று மணி நேரம் நாடகம் பார்த்ததன் பலனை அவர்களும் பெற்றவர்களாவார்கள். அவர்கள்மூலம் நாமும் பெற்றிருக்க இயலும் என்பதனாலே, நாடகம் எந்தக் கருத்தோடு நடத்தப்பட்டாலும், சில கருத்துகளை மக்களுக்குத் தந்து அனுப்புகின்ற ஒரு கருவியாக—ஒரு வாய்ப்பாக—ஒரு பிரசாரமாகவே அது அமைந்திருக்கின்றது. அதிலும், தமிழகத்தில் மிக நேர்த்தியான முறையில் அந்தக் கருவி நல்ல விதத்திலே இயங்கிக்கொண்டு வருகின்றது.

### சங்கரதாஸின் முதன்மை

அதற்கு உறுதுணையாய் இருந்தவர்களுள் நம் சங்கரதாஸ் சுவாமிகள் முதல்வராவார்கள். பல நாடகங்களை நாடகக் குழுவினருக்கு அவர்கள் ஆக்கித்தந்திருக்கிறார்கள். அவர்கள் பல நாடகங்களைக் கோத்துக்கொடாமல் இருந்திருப்பார்களானால், பல்வேறு காப்பியங்களிலேயும் புராணங்களிலேயும் இணைந்துபோய்த் தொக்குப்போயிருந்த பல கருத்துகள் நாடக வடிவத்தைப் பெற்றிருத்தல் இயலாது.

அப்படிப்பட்ட புதிய நாடகங்களை அவர்கள் பல ஆண்டுகளுக்கு முன்னாலே ஆக்கிக்கொடுத்து, அவை மூலமாக நடிகர்களுக்கு நடிப்பதற்கேற்ற தன்மையையும் ஆக்கிக் கொடுத்திருக்கின்றார்கள். அதைத் தொடர்ந்து பல நாடகாசிரியர்கள் தமிழகத்திலே தோன்றியிருக்கின்றார்கள். ஆகையினால், நாடகக்கலைக்கு வித்திட்டவர், அதை வளர்க்க உறுதுணையாய் இருந்தவர், பல நாடகங்களைத் தந்தவர் என்ற முறையில் நாடகக்கலையிலே ஈடுபட்டவர்களும்

நாடகக்கலையோடு பல்வேறு வகையிலே தொடர்பு கொண்டவர்களும் இந்த விழாவிலே பங்கேற்றுக்கொள்வது மிகவும் பொருத்தமானதாகும். இந்த விழாவின் மூலம் அவரைப்பற்றியும், அவர் தந்த நூல்களைப்பற்றியுமட்டும் அல்லாமல், அந்த நாடகங்களை நடத்துவதன் மூலம் நாடகக்கலைக்கு நல்ல உயிரூட்டத்தைக் கொடுத்த நடிகர்களைப்பற்றியும், நடிப்புக் கலையைப்பற்றியும், நாம் போற்றுவதற்கும் பாராட்டுவதற்கும் வரவேற்பதற்கும் வாழ்த்துவதற்கும் ஒரு வாய்ப்பு நமக்கெல்லாம் கிடைத்திருக்கின்றது.

## நாடகம் தாய்க்கலை

நாடகக்கலை வளர வளர, நாட்டிலே உள்ள மற்றக் கலைகள் எல்லாம் வளரும் என்பதில் எந்தவிதமான ஐயப்பாடும் இல்லை. நாடகக்கலையோடு தொடர்புகொண்டது, ஒப்பனைக்கலை; நாடகக் கலையோடு தொடர்புகொண்டது, ஓவியக் கலை; நாடகக்கலை யோடு தொடர்புகொண்டது, இசைக்கலை; நாடகக்கலையோடு தொடர்புகொண்டது, உடை தைக்கும் கலை; நாடகக்கலையோடு தொடர்புகொண்டதே வணிகக்கலையும்.

நல்ல நாடகம் நடத்துதல் மட்டும் போதாது. 'நடத்துவதில் எப்படி நொடித்துக்கொள்ளாமல் பார்த்துக் கொள்வது?' என்ற வணிக நுட்பங்கூட நாடகக்கலையோடு இணைந்ததுதான். எனக்குத் தெரிந்தவர் பலர் நாடகங்களைக் குத்தகை எடுத்து, அதனாலே நஷ்டம் ஏற்பட்டு, பிறகு அவர்களே நடிகர்களாய் மாறிப்போயிருக்கின்றார்கள்; அதுவும் எனக்குத் தெரியும். அந்த முறையிலே இல்லாமல், நாடகக்கலை நல்ல வணிகத்திறமையோடுங்கூட நடத்தப்படவேண்டும்.

## வருங்காலத் திட்டம்

இன்று நாடு விடுதலை பெற்றுவிட்டது. பெற்றுவிட்ட பிறகு நாடகக்கலையின் மூலம் நாம் என்னென்ன கருத்துகளை எடுத்து வலியுறுத்தவேண்டுமென்பதை அவரவர்கள், இந்த நாடு எப்படியிருக்க வேண்டும் என்று எண்ணுகிறார்களோ, அதற்கேற்ற கருத்துகளை நாடகத்தின் மூலம் அளிக்கலாம். இன்ன கருத்தையே தர வேண்டுமென்று நான் வற்புறுத்தவில்லை. நாடு எப்படியிருக்க வேண்டுமென்பதற்கு ஓர் இலக்கணத்தை வகுத்துக்கொள்வோமானால், 'அந்த இலக்கணத்திற்கு ஏற்றவையல்லாதவை என்னு முறையில் இன்று என்னென்ன இருக்கின்றன?' என்னும் பட்டியலை வகுத்துக்கொள்வோம்; அந்தப் பட்டியல் தயாராகுமானால், அந்தப் பட்டியலிலே காணப்படும் கேடுகள் எவை என்பதை ஒப்புக்

கொள்வோம். அவைகள் கேடுகள் என்று ஒப்புக்கொள்ளப் பட்டால், 'அந்தக் கேடுகளை நீக்குவதற்கு நாடகத்தின் மூலம் என் னென்ன செய்யலாம்? அந்தக் கேடுகள் நீங்கிய பிறகு வெற்றிட மாக விட்டுவிடாமல், அதிலே எதைக் கொண்டு வந்து புகுத்த லாம்?' என்பதற்கு ஒரு பட்டியலைக்கொண்டு, நாடகங்கள் நடத் தப்படவேண்டும் என்று நான் விரும்புகின்றேன். பல நாடகங்கள் இன்றைய தினம் அந்த முறையிலே நடத்தப்பட்டுவருகின்றன என்பதிலேயும் நான் மிக்க மகிழ்ச்சியடைகின்றேன்!

## நாடகத்தின் கருப்பொருள்

நான் நம்முடைய நடிக நண்பர்களை ஒன்று கேட்டுக் கொள்வேன்: நீங்கள் எந்தப் பொருளை வேண்டுமானாலும் நாடகத்திலே மைய மாக வைத்துக்கொள்ளுங்கள்; எடுத்துக்காட்டாக, மாறுதல் என்னும் ஒரு பொருளை எடுத்துக்கொள்ளுங்கள். மாறுதல் என்ப தற்கான இலக்கணத்தைக் காட்டுங்கள். எது எது, எப்படி எப்படி மாறியிருக்கிறது? அதையும் எடுத்துக்காட்டுங்கள். 'மாறியதாலே நல்லது எது, கெட்டது எது?' என்பதை விளக்குங்கள். அதற் கிடையிலே 'நான் மாறவேமாட்டேன்' என்னும் ஒரு பாத்திரத் தையும் படையுங்கள். 'மாறவேமாட்டேன்' என்று சொல்லிக் கொண்டிருப்பவனே எப்படிப் படிப்படியாக மாறிக்கொண்டு வரு கிறான் என்பதையும் எடுத்துக்காட்டுங்கள். இதற்கிடையிலே ஒரு கதையும் கோத்துக் காட்டுங்கள். இவைகளை நீங்கள் செய்வீர்க ளானால், இதைவிட நாங்கள் என்ன பிரசாரம் செய்ய இயலும்? எதுவும் செய்ய இயலாது.

ஆகையாலேதான், நம் தலைவர் சொன்னபடி நான் பேசியது மட்டுமல்லாமல்—எழுதியது மட்டுமல்லாமல்—நாடகக்கலை யையும் என்னுடைய கருத்துகளை எடுத்துச் சொல்வதற்கு ஒரு துணையாகக் கொண்டேன் என்பதில் மறுப்புத் தெரிவிக்கவில்லை; அதற்கு எனக்குத் தொடர்ந்து வாய்ப்புக்கிட்டவில்லை என்பது தான் எனக்குள்ள வருத்தமே தவிர, சில காலம் அதிலே இருந் தேன் என்பதிலே சிறிதும் நான் வருந்தவில்லை.

## முந்தைய நாடக நினைவுகள்

நான் மட்டுமன்றித் தேசிய இயக்கத்திலே தலைசிறந்தவர் என்று தமிழகத்தார் மட்டுமல்லாமல், இந்தியா முழுவதிலும் உள்ள அரசியல் வாதிகளால் ஒப்புக்கொள்ளப்பட்ட காலஞ்சென்ற சத்தியமூர்த்தி அவர்களும் கலைத்துறையிலே மிகுந்த ஈடுபாடு கொண்டவர்கள்; கலைத்துறையிலே ஈடுபாடு கொண்டவர்கள் மட்டுமன்றி, இரண்டொரு நாடகங்களில் அவர்கள் நடித்து

யிருக்கின்றூர்கள். ஆந்திரகேசரி என்று கொண்டாடப்பட்ட பிரகாசம் அவர்களும் நாடகத்திலே ஈடுபட்டவர்கள்; நாடக மேடையிலே தோன்றியவர்கள்; பாத்திரமேற்றுக்கொண்டவர்கள் ஆகையினுலே, நான் தவறு செய்திருந்தால், அது பெரியவர்க ளோடு சேர்ந்த தவறு என்றும், நான் செய்தது தவறு அன்று என்றுல், அவ்வளவு பெரியவர்கள் செய்ததை நான் செய்கிற பொழுது அது தவருக இருக்க இயலாதென்றும், நீங்கள் கொள்ள வேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறேன்.

### நாடகத்தின்மூலம் நாட்டைத் திருத்துதல்

நாடகக்கலையின் மூலம், நமது நாட்டுக்குத் தேவையானவை களை நான் இன்னமும் மிகுதியாக எதிர்பார்க்கிறேன். நமது சமு தாயம் ஒரு புதிய உருவத்தைப் பெற்ருகவேண்டும்; நம் மக்க ளுடைய மனப்பான்மையில் அதிதீவிரமான ஒரு மாறுதல் ஏற்பட் டாகவேண்டும்.

நாடகக்கலைத்துறையில் புத்தம்புதிய முறைகளெல்லாம் ஏற்பட வேண்டும். நம் அரசியற் கருத்துகளிலும் புதிய திருப்பங்கள் ஏற்படவேண்டும். இவைகளையெல்லாம் ஏற்படுத்திக்கொடுப் பதற்குக் கட்டுரைகள், பேருரைகள், சிறுகதைகள், பெருங்கதைகள் ஆகியவைகளையெல்லாம்விட, நாடகத்தின்மூலம் மிகுந்த பலன் கிட்டுமென்பதில் நான் மிகுந்த நம்பிக்கை வைத்திருக்கிறேன்.

### 'நாடகக்கலை' நூலின் சிறப்பு

அந்த வகையில் நாடகக்கலையினைப்பற்றி என் நண்பர் திரு. டி. கே. சண்முகம் அவர்கள் எழுதி வெளியிட்டுள்ள நாடகக்கலை என்னும் இந்நூலை வெளியிடுவதில் நான் மிகவும் பெருமைப் படுகின்றேன்! அவர் நாடகக்கலையினை ஏட்டளவோடு பெற்றவ ரல்லர்; இளமையிலிருந்தே நாடகக்கலையோடு தம் வாழ்வை ஒன்ருகப் பிணைத்துக்கொண்டவர்; எந்தப் பாத்திரத்தை ஏற்ரு லும், அந்தப் பாத்திரத்தோடு தம்மையும் இணைத்துக்கொண்டவர்.

ஒருமுறை அவர் ஒளவையார் வேடந்தாங்கி நடித்ததைப் பார்த்தவர்கள், 'இது என்ன பிரமாதம்! கிழவிபோல ஒப்பனை செய்துகொண்டு, ஒரு தடியினைக் கையில் ஏந்திக்கொண்டு நடுங்கி நடுங்கி வந்தால், அது ஒளவையாராகிவிடும்,' என்று கூறினுர்கள்.

"சிறந்த நடிப்புக்குரிய இலக்கணம், ஒருவர் பார்த்தவுடன் 'நாமும் இதைச் செய்யலாம்,' என்னும் எண்ணத்தை உண்டாக்க வேண்டும். ஆனுல், செய்ய ஆரம்பித்தால், 'செய்ய இயலவில் லையே!' என்று வருந்தவேண்டும். இந்த இரண்டுக்கும் இடையில்

இருப்பதுதான் நடிப்பின் இலக்கணம். இயலுமானால் செய்து பாருங்கள்!'' என்று அவர்களிடத்திலே நான் சொன்னேன். இதை எதற்கு நான் சொல்கிறேனென்றால், நண்பர் டி. கே. சண்முகம் அவர்களை மிகுந்த துடிப்புள்ள இளைஞராகச் சில நாடகங்களில் பார்த்திருப்பீர்கள்; பொறுப்புள்ள பெரியவராகச் சில நாடகங்களிலே பார்த்திருப்பீர்கள்; தமிழ் கற்ற மூதாட்டியாக ஒரு நாடகத்திலே கண்டிருக்கிறீர்கள். பழந்தமிழ் மன்னர்களை நமது மனக்கண் முன் கொண்டுவந்து நிறுத்தும் பாத்திரங்களை ஏற்று அவர்கள் குழுவினர் நடித்திருக்கிறார்கள். இப்படி அவர்கள் நாடகக் கலையின் இலக்கணத்தை அறிந்தது மட்டுமன்றி, அதிலே மிகுந்த பயிற்சியும் பெற்று, தமது பயிற்சியின்மூலம் பலருக்கும் பயிற்சியளித்து, அதிலே முழுதும் ஈடுபட்டவர் என்பதனாலே நாடகக் கலையினைப்பற்றி அவர் எழுதியுள்ள இந்த நூல் உள்ளபடியே உயிர்வோட்டமுள்ளதாக அமைவது இயல்பாகும்.

இந்த நூலும், இதில் உள்ள கருத்துகளும், ஒவ்வொரு நடிகரிடத்திலும், நாடகக் கலைஞரிடத்திலும் அமையவேண்டுமென்று நான் பெரிதும் விரும்புகிறேன். இந்த நூலை வெளியிடுவதிலே எனக்குத் தனி மதிப்பும் மரியாதையும் ஏற்படுவதற்கு அது ஒரு காரணமாகும்.

### நாடகக் குழுக்களின் நிலை

நூல்களை எழுதி வெளியிடலாம். ஆண்டுக்கொரு முறை மாநாடு நடத்தி நாடகக் கலையை வாழ்த்தலாம். ஆனால், நாடகக் குழுக்கள், நாட்டிலே இன்று எந்த அளவில் இருக்கின்றன? எந்த நாடகக் குழுவாகிலும் இன்று தொடர்ந்து நடத்தப்படுவதற்கேற்ற அளவுக்குப் பொது மக்களுடைய நல்ல ஆதரவு அவைகளுக்குக் கிட்டுகிறதா என்று பார்த்தால், எனக்கு ஒவ்வொரு நேரத்திலே பரிதாப உணர்ச்சி ஏற்படுவதுண்டு. 'சிலர் எப்படிதான் இன்னம் நாடகத்திலே இருக்கிறார்கள்?' என்னும் ஐயப்பாடேகூட ஏற்படும். அவ்வளவு வறுமைச் சூழ்நிலையில் நாடகக் குழுக்கள் இன்று இயங்கி வருகின்றன.

நாடகக் குழுக்கள் நல்ல முறையிலே இயங்காவிட்டால், நாடக நூல் எழுதி எந்தப் பயனையும் காண இயலாது. 'எங்கள் தமிழ் மொழி, நாடகத்திற்கு ஏற்ற மொழி; ஏனென்றால், அது நாட்டு மொழி,' என்று பெருமையோடு பேசுவதாலே எந்தவிதமான பலனும் கிட்டாது. ஆகையால், தமிழகத்தில் நாடகக் குழுக்கள், தமிழகத்தின் அளவை எடுத்துக்கொண்டாலும் சரி—மக்கள் தொகையை எடுத்துக்கொண்டாலும் சரி—கலை ஆர்வத்தை

எடுத்துக்கொண்டாலும் சரி—எவ்வளவுக்கு நாடகக் குழுக்கள் தமிழகத்திலே இருக்கவேண்டுமோ, அவ்வளவில் நூற்றில் ஒரு பங்குகூட இன்று இல்லை.

பத்து மணிக்கு நாடகம் நடத்துவதாக விளம்பரப்படுத்தி, பலரை வரவழைக்கவேண்டுமென்ற எண்ணத்தோடு தலைவரையும் முன்னாலேயே ஏற்பாடு செய்து, தலைவர் ஒன்பதரைக்கெல்லாம் வந்திருந்து, மணி பதினொன்றாகி இன்னும் மக்கள் வரவில்லையென்பதற்காக இரவு பன்னிரண்டு மணிக்குமேல் நாடகத்தைத் தொடங்குகின்ற நாடகக் குழுக்கள் தமிழ் நாட்டிலே இருக்கின்றன. கேலிக்காகச் சொல்லவில்லை; வருத்தத்தோடு சொல்லுகின்றேன். அந்த முறையிலே நாடகக் குழுக்கள் இருக்குமானால், புதிய நாடகங்கள் எங்கிருந்து அரங்கேற்றப்பட இயலும்? புதிய நாடகங்கள் அரங்கேற்றப்பட வழியில்லையென்றால், நாடகக்கலை எப்படி வளரும்? நாடகக்கலை வளராவிட்டால், அதற்கு விழா நடத்துவதால் என்ன பலனை நாம் பெற இயலும்?

### நாடகக் கலைஞரும் திரைப்படக் கலைஞரும்

சினிமாவிலே ஈடுபடுகின்ற கலைஞர்களுக்கும், நாடகத்திலே ஈடுபடுகின்ற கலைஞர்களுக்கும் எவ்வளவு வேறுபாடு என்பது பார்த்தால் தெரியும். சினிமாவிலே ஈடுபடுகின்ற கலைஞர்கள், பாடுவதற்கு ஒருவரை ஏற்பாடு செய்துகொள்ளலாம். பேச வேண்டுவதைப் பக்கத்திலேயிருந்து வாயசைவாலே சொல்லிக் கொடுப்பதற்குச் சிலரை ஏற்பாடு செய்துகொள்ளலாம். சொல்ல வேண்டுவதை மறந்துவிட்டு வேறு சொன்னாலும், பத்து இலட்சத்தைக் கொட்டிவிட்ட முதலாளி, 'இதுவே இருக்கட்டும்; நாளைக்கு ஒரு நாள் ''சூட்டிங்கு'' வேண்டாம்; இதுவே போதும்,' என்று வாயிலிருந்து வந்ததையே வாசகமாக வைத்துக்கொள்வதற்கு வாய்ப்புப் பெறலாம்.

நாடக நடிகர் அப்படியல்லர். விளக்கு ஒளி குறைந்துவிட்டால் அவரேதான் ஏற்றவேண்டும். ஆர்மோனியக்காரருக்குக் கோபம் வந்து, அவர் சரியாக வாசிக்கத் தவறிவிட்டால், அவர் பக்கத்திலே போய், 'அப்பா, ஐயா,' என்று கெஞ்சி, 'கொஞ்சம் வாசி,' என்று கேட்டுக்கொள்ளவேண்டும்; உடனிருக்கின்ற நடிகர்கள் தங்களோடு ஒத்துழையாவிட்டால் அவர்களுக்கு எது விருப்பமோ அதை வாங்கிக்கொடுத்து, அவர்களுடைய நடிப்புத் திறனைப் பயன்படுத்திக்கொள்ளவேண்டும். இவ்வளவுக்கும் பிறகு—நாடகம் முடிந்த பிறகு—கொட்டகையின் கட்டணக்காரர் வருவார். 'காலையில் வா,' என்று சொல்லவேண்டும். மாலைகள் கொடுத்த பூக்காரர் வருவார்; 'நாளை மாலை கட்டாதே,' என்று சொல்ல

வேண்டும். உடன் நடித்த நடிகர், 'நான் திருச்சிராப்பள்ளிக்கு ஒரு நாடகத்திற்குப் போகவேண்டும்; பணம் கொடு,' என்று கேட்பார். அவர்க்குப் பணம் கொடுப்பதற்குப் பதிலாக,' திருச்சிராப்பள்ளிக்குப் போகிற இரயிலிலே உள்ள 'டிக்கெட்டுக் கலெக்டர் எனக்கு மிகவும் வேண்டியவர். நீ ஏறிப்போ; நான் பார்த்துக்கொள்கிறேன்,' என்று சொல்லி அனுப்பவேண்டும். இவ்வளவும் செய்பவர் நாடக நடிகர். ஆனால், நாடகக்கலை அவ ரிடத்திலேதான் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. அவர் இரவிலே பத்து மணியிலேயிருந்து பதினொரு மணிக்குள் இரண்டு நிமிட நேரம், இப்புறத்திலிருந்து அப்புறம் ராஜநடை நடக்கிறார். இந்தத் திரைக்குப்பின் பக்கம் போகிறபொழுதே எவ்வளவு சோர்ந்துபோய் நடக்கிறார் என்பதைப் பார்த்தால்தான், அந்த ராஜன் காலையிலே யிருந்து எதுவும் சாப்பிடாத ராஜன் என்பது நமக்குத் தெரியும்.

### நாடக வளர்ச்சித் திட்டம்

தமிழகத்தில் தயாரிக்கப்படுகின்ற படங்கள் ஒவ்வொரு படம் தயாரிக்கின்றபொழுதும் அதற்கு ஏற்படுகின்ற செலவுத்தொகை யோடு தொகையாக ஒரு பத்தாயிரம் ரூபாயை ஒவ்வொரு படக் குழுவினரும் நாடகக்கலைக்கு என்று ஒதுக்கி முதல் வைக்க வேண்டும். ஒரு வருடத்திலே நூறு படங்கள் அல்லது ஐம்பது படங்கள் அதற்கென்று ஒதுக்கி வைக்கப்பட்டால், எவ்வளவு பணம் அதிலிருந்து திரட்டப்படுகிறதோ, அதற்கு ஈடான பணத் தைத் தமிழக அரசின் சார்பில் நான் தருவதற்கு இசைகின்றேன். அப்படி, நீங்கள் ஐம்பதினாயிரம் ரூபாயை ஒரு வருடத்திலே திரட்டினால், தமிழக அரசின்மூலம் ஐம்பதினாயிரம் ரூபாயை அதனிடத்திலே சேர்த்து நாடகக்கலை வளர்ச்சிக்கு அந்த நிதியை ஒதுக்கலாம். வெறுத்துப்போயிருக்கின்ற நடிகர்கள், புதிய புதிய நாடகங்களைப் போட்டுப்போட்டு வருவாய் காணாமல் வறுமை யிலே தள்ளப்பட்ட நாடகக் குழுக்கள், புதிய நாடகங்களை அரங் கேற்றுபவர்கள் ஆகிய இவர்களுக்கெல்லாம் இந்தத் தொகையி லிருந்து நாம் கொஞ்சம் ஈட்டுத்தொகை கொடுப்போமானால், இவர்கள் புதிய உற்சாகம் பெற்றுப் புதிய புதிய நாடகங்களை நடித்து, புதிய புதிய நாடக நூல்களைக் கொண்டுவந்து, நாடகக் கலையை உயிருள்ளதாக வைத்திருக்க இயலும்.

இதைச் செய்யத் தவறுவோமானால், ஆண்டுக்கு ஒருமுறை நாம் கூடலாம்; அதில் ஒன்றும் அட்டியில்லை. நாடகக்கலையினுடைய நன்மைகளைப் பற்றியெல்லாம் பேசலாம்; அதற்கும் பஞ்சமில்லை. அதைக்கேட்டு மகிழலாம்; அதற்கும் குறைவில்லை. ஆனால், நாடகக்கலை வளருமா என்றால், வளருவது மிகக் கடினம்.

**மேல் நாடுகளில் நாடகக்கலை**

இங்கிலாந்து நாட்டில் ஒருவர் எழுதிய மௌஸ் டிராப் (எலிப் பொறி) என்னும் புத்தகத்தை நான் இப்பொழுது பார்த்தேன். நான்கு வருடங்களாக அந்த நாடகம் தொடர்ந்து ஒரே கொட்டகையில் நடத்தப்பட்டுவருகிறது. பழையவர்களே நடிகர்கள். துணை நடிகர் சிலர் மாறியிருக்கின்றனர். முக்கியப் பாத்திரத்தை ஏற்ற நடிகர்கள் நான்கு வருடங்களுக்கு மேலாக அந்த ஒரே நாடகத்தை—ஒரே கொட்டகையில்—இலண்டன் நகரத்திலே நடத்திக்கொண்டிருக்கின்றார்கள். மற்ற நாடுகளிலேகூடச் சில படக்காட்சிகளுக்கு அந்தக் கதைக்கு விளம்பரம் செய்கின்ற பொழுது, 'இது நாடகமேடையில் ஆறு வருடம் நாடகமாக நடத்தப்பட்ட கதை,' என்பதை இந்தப் படம் ஓடும் என்பதற்கும் உத்தரவாதத்திலே ஒன்று என்று குறிப்பிடுகின்றார்கள்.

**நம் நடிகர்கள்**

நம் நாட்டில் அப்படிப்பட்ட நாடகங்களை நடத்துவதற்கு ஏற்ற நடிகர்கள் ஏராளமாய் இருக்கின்றார்கள். நம் நாட்டு நடிகர்களைப்பற்றி நான் எப்போதுமே மிகுந்த பெருமைப்படுபவன். எவ்வளவோ வசதிக் குறைவிற்கிடையில், அவர்கள் அந்த நடிப்புத்தொழிலை நல்லவிதத்திலே காத்துக்கொண்டுவருகின்றார்கள். அவர்களுக்கு நாடகக் குழுக்களும் கலைந்து போகாமல்—சிதைந்து போகாமல்—இருக்குமானால், நிச்சயமாக அந்தக் கலை வளர்வதற்கு வழி ஏற்படும். இந்தப் பண உதவி செய்வதோடு கூடப் படக் கம்பெனிகளைச் சார்ந்தவர்கள், தாங்கள் எடுக்கின்ற படங்களில் ஏதாவது ஒரு விகிதாசாரம்—நூற்றுக்கு நான்கு அல்லது ஐந்து என்றாகிலும்—நாடக மேடை நடிகர்களை நடிப்புத் துறையிலே அவர்கள் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். ஒரு சிறிய பாத்திரத்தை அவர்களுக்குக் கொடுத்து நடிக்கவைப்பதன் மூலம் அவர்களுடைய நாடகத் தொழிலுக்கும் அவர்களுக்கும் ஒரு புதிய தெம்பு ஏற்படும்.

**முடிவுரை**

இந்த இரண்டு வகையில் அவர்கள் துணைபுரிவார்களானால், படத்தொழிலுக்கும் நாடகத் தொழிலுக்கும் நிச்சயமாக ஒரு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டு, நாடகக்கலை வளரும். அதன் மூலம் நம் நாட்டு மக்களுடைய வாழ்க்கைக்கலை நல்ல முறையிலே விளங்கும். இந்த இரண்டு யோசனைகளையும் அதிகப் பணச் செலவில்லாத யோசனைகள் என்ற முறையிலேதான் நான் வெளியிட்டிருக்கிறேன்; அப்படிப் பணச்செலவாவதானாலும், அதிலே ஒரு

பங்கைத் தமிழக அரசு ஏற்றுக்கொள்ளும் என்னும் உத்தரவாதமும் கொடுத்துச் சொல்லுகின்றேன். இதைச் செய்வோமானால், நாடகக்கலை நசித்துவிடாமல் பாதுகாக்கவும், இயலுமானால் இன்னும் நேர்த்தியானதாக அதைச் செய்வதற்கும் வழி ஏற்படும் என்று நான் உறுதியாக நம்புகிறேன். இந்த அளவோடு என் உரையினை முடித்துக்கொண்டு, நாடகக்கலையினுடைய நல்ல கருத்துகளையெல்லாம் எடுத்து வடிவாக்கி, நம்முடைய நண்பர் சண்முகம் அவர்கள் எழுதியிருக்கின்ற நாடகக்கலை என்னும் நூலை நாடகக்கலைக்காகவே பல ஆண்டுகளாக வாழ்ந்து, நான் சொன்னேனே, அதனாலே நொடித்துப் போனவர்,—அப்படி நொடித்துப் போனவர் என்றாற்கூட அவருக்குக் கோபம் வரும்—'நான் ஒன்றும் நொடித்துப் போகவில்லை; நான் நன்றாகவே இருக்கின்றேன்,' என்று சொல்லுவார்—அப்படிப்பட்ட நம்பிக்கையோடு இருக்கின்ற என்னுடைய பழம்பெரு நண்பர், நாடகக்கலைக்கு நல்ல தொண்டர். அவரே சொல்லியிருக்கின்றபடி, **நாடக விவசாயி** பொன்னுச்சாமி அவர்களிடத்தில் இந்த நாடகக்கலை என்ற நூலினை நான் வெளியீட்டு விழாவின் அறிகுறியாக அளிக்கின்றேன்.

### அருஞ்சொற்பொருள்

சமர்த்தர்கள் - வல்லவர்கள், கோத்துக்கொடாமல் - தொகுத்துக்கொடாமல், தொக்குப்போய் - மறைந்து போய், உயிரூட்டத்தை - ஆக்கத்தை, ஒப்பனைக்கலை - அலங்காரக்கலை, நொடித்துக் கொள்ளாமல் - வறுமையடையாமல், மூதாட்டி - கிழவி, அரங்கேற்றப்படல் - நாடக அரங்கில் முதன்முறையாக நடித்துக்காட்டல், சூட்டிங்கு - படப்பிடிப்பு, ஈட்டுத்தொகை - உதவித்தொகை, அட்டியில்லை - தடையில்லை, உத்தரவாதம் - உறுதி, நசித்துவிடாமல் - அழிந்துவிடாமல்.

### வினாக்கள்

1. நாடகத்தின் பயன்கள் யாவை?
2. 'சங்கரதாஸ் சுவாமிகள் நாடகக்கலைக்கு முதல்வர்.'—விளக்குக.
3. 'நாடகம் தாய்க்கலை' என்பதை எங்ஙனம் அறிஞர் அண்ணா எடுத்துக்கூறுகிறார்?
4. நாடகக்கலை சிறப்புற அறிஞர் அண்ணா வருங்காலத் திட்டத்தை எங்ஙனம் விளக்குகிறார்?
5. அறிஞர் அண்ணா வலியுறுத்தும் நாடகத்தின் கருப்பொருளைக் கூறுக.
6. அவர், நாடகக்கலையின் முந்தைய நாடக நினைவுகள் எவ்வெவற்றைக் கூறுகிறார்?
7. நாடகத்தின் மூலம் நாட்டைத் திருத்தும் வழியை எவ்வாறு அறிஞர் அண்ணா குறிப்பிடுகிறார்?

8. 'நடிப்பிற்கான இலக்கணம்' என்று அறிஞர் அண்ணு எவற்றைக் குறிப்பிடுகிருர்?
9. 'நாடகக்கலே' என்னும் நூலின் சிறப்பை விவரிக்க.
10. நாடகக் குழுக்களின் நிலைமையை ஆராய்க.
11. நாடகக்கலைஞருக்கும், திரைப்படக் கலைஞருக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை எடுத்துக்காட்டுக.
12. நாடக வளர்ச்சித் திட்டம்—குறிப்பு எழுதுக.
13. மேல் நாட்டு நாடகக்கலையைப்பற்றிக் கூறும் செய்திகள் யாவை?
14. அறிஞர் அண்ணு தமது நடிப்புப்பற்றி என்ன சொன்ஞர்?

## 3. பெற்ருேர் கடமை

[திரு. மறைமலையடிகள்]

தாயானவள் பிள்ளைக்குச் செய்யவேண்டிய கடமை மற்ற எல்லாக் கடமைகளிலுஞ் சிறந்ததாய் இருத்தலின், அதைப் பற்றி இங்கு வரைவது பெரிதும் பயன் தருவதாகும். மனைவி கணவனுக்குச் செய்யுங்கடமையிலும், மக்கள் பெற்ருேர்க்குச் செய்யுங்கடமையிலும், உடன்பிறந்தார் உடன்பிறந்தார்க்குச் செய்யுங்கடமையிலும், நண்பர் நண்பர்க்குச் செய்யுங்கடமையிலும், குடிகள் அரசர்க்குச் செய்யுங்கடமையிலும், அரசர் குடிகட்குச் செய்யுங்கடமையிலும், தாயானவள் தன் மக்கட்குச் செய்யுங்கடமையே மிக மேலானதொன்ருய் விளங்குகின்றது. ஏனென்ருல், மனைவியாயும், கணவனுயும், உடன்பிறந்தாராயும், நண்பராயும், குடிகளாயும், அரசராயும் உள்ள எல்லாரும் தாயின் வயிற்றிற்பிறந்தவர்களே யாகையால், அவர்களெல்லாரும் தாயின் உதவியினுலேயே மேலான நிலைமைக்குவர வேண்டியவர்களாயிருக்கின்ருர்கள்.

குழந்தைகளாயிருந்த காலந்தொட்டே, தாயானவள் தன் மக்களை எந்த வகையில் வளர்த்து வருகின்ருளோ, அந்த வகைக் கேற்றபடியே அவர்கள் வளர்ந்து நல்லவராகவாவது, தீயவராக வாவது நடப்பார்கள்; தாயானவள் நல்லறிவும், நல்லியல்பும், நல்ல செய்கையும் உடையளாயிருத்தலொடு தன் மக்களும் தன்னைப்போலவே ஆகல்வேண்டுமென்று அக்கறையோடு அவர்களை வளர்த்து வருவளாயின், அவர்கள் நல்லவர்களாயே விளங்குவார்கள். இவ்வாறன்றித் தாயானவள் தீயவளாயிருப்பின்,

அவளால் வளர்க்கப்பட்ட பிள்ளைகளும் தீயவர்களாகவே நடப்பார்களென்பதை நாம் சொல்லுதலும் வேண்டுமோ? கொழுமையான நல்ல நிலத்தில் முளைத்த பயிரையும், உரமற்ற உவர் நிலத்தில் தோன்றிய புற்பூண்டுகளையும் ஒப்பிட்டுப்பாருங்கள்! நல்ல நிலத்தில் முளைத்த பயிர்கள் எவ்வளவு செழுமையாய் வளர்ந்து, நெல், கேழ்வரகு, சோளம் முதலான பொருள்களைத் தந்து, எல்லார்க்கும் எவ்வளவு மிகுதியாய்ப் பயன்படுகின்றன! உவர் நிலத்தில் தோன்றிய புற்பூண்டுகளோ, வற்றி வறண்டு விலங்கினங்களுக்கும் பயன்படாமற்போகின்றன. இதுபோலவே, நல்ல தாயினிடத்தும் தீய தாயினிடத்தும் தோன்றிய பிள்ளைகளும் இருப்பார்களென்பதைத் தெரிந்துகொள்ளல்வேண்டும்.

'தொட்டிற்பழக்கம் சுடுகாடு மட்டும்' என்னும் பழமொழிப்படி நாம் சிறு பிள்ளைகளாயிருந்தபோது நம்மிடத்தில் உண்டான பழக்கம் நம் அறிவில் வேரூன்றிவிடுதலால், அது நாம் வளருந்தோறும் கூடவே வளர்ந்து, நன்மையையாவது தீமையையாவது தருகின்றது. ஆதலால், பெரியவர்களான பிறகும், எல்லார்க்கும் நல்லவர்களாய்ப் பயன்பட்டு வாழ்வதற்கு நாம் சிறுபொழுதிற் கைக்கொண்ட பழக்கமே முதன்மையானதாயிருக்கின்றது.

நாம் ஏதும் அறியாத சிறு குழவியாயிருந்தபோது நம்மைச் சீராட்டிப் பாராட்டி வந்தவள் நம் அன்னையேயல்லளோ? நாம் பசியால் வருந்தி வாய்திறந்து அழுதபோது நம் அருகே ஓடி வந்து நம்மை எடுத்து முத்தம் வைத்து உள்ளங்கசிந்து பாலூட்டினவள் நம் அன்னையேயன்றி, பிறர் உண்டோ? நாம் சிறிது சிறிதாய் வளர்ந்து வரும்போது நமக்கு வேண்டிய பாலுஞ்சோறும் முதலான பொருள்களை நமக்குச் சுட்டிச்சுட்டிக் காட்டி அவற்றின் பெயர்களை நமக்குக் கற்றுக் கொடுத்து வந்த முதல் ஆசிரியையும் நம் அருமைத் தாயே அல்லளோ? இடையிடையே நாம் நோயால் வருந்திக் கிடந்த காலங்களிலெல்லாம், அதற்குத் தானும் உடன் வருந்திப் பகலென்றும் இரவென்றும் பாராது, நம் அருகிருந்து நம் நோய் தீரும்பொருட்டு வேண்டும் உதவிகளை எல்லாம் கைம்மாறு கருதாது செய்துவந்த அருட்களஞ்சியம் போல்வாளும் நம் அன்னையேயல்லளோ? இங்ஙனமெல்லாம் நம் உயிரோடும் உடம்போடும், நம் நினைவோடும் சொல்லோடும், நம் செயலோடும் உடன் கலந்து உடன் பழகிவரும் தெய்வம் போல்வாள் நம் அன்னையாகவே இருத்தலின், அவளாலேதான் நாம் சீர்திருந்த வேண்டியவர்களாய் இருக்கிறோம்.

இவ்வாறு நம்மை முழுதும் சீர்திருத்த வேண்டிய நிலைமையிலுள்ள நம் அன்னையானவள், தான் தன் மக்களுக்குச் செய்ய

வேண்டிய கடமைகளை முற்றும் அறிந்தவளாய் இருக்கவேண்டு வது முதன்மையன்றோ? அறிவில்லாத தாய், தன் மக்களை எப்படி அறிவுடையராக்கக்கூடும்? விளக்கில்லாத இடத்தில் வெளிச்சம் உண்டாகுமோ? பூவில்லாத இடத்தில் மணம் உண்டாகுமோ? ஆதலால், தாயானவள் மிகுந்த அறிவுடையவளாய் இருந்தால் மட்டுமே, அவள் மக்களும் அறிவுடையவர்களாயிருப்பார்கள்.

இனி, தாய்மார்களுக்கு அறிவுதான் எப்படி வரக்கூடுமென்று எண்ணிப்பார்ப்போமாயின், கற்றோர் சொல்லும் அரிய பொருள் களை அடுத்தடுத்துக் கேட்பதனாலும், அவர் எழுதிய நூல்களை இடைவிடாது கற்று உணர்வதனாலுமே அவர்கள் அறிவுடையவர்க ளாகக்கூடுமென்பது தெளிவாய் விளங்கும்.

கல்வியறிவிலும், உயர்ந்த எண்ணங்களிலுமே எந்நேரமும் பழகின ஒரு தாய்க்கு நல்ல பிள்ளைகளே பிறக்கக்கூடுமல்லாமல், தீய பிள்ளைகள் பிறப்பதற்குச் சிறிதும் இடமில்லை. நாம் எவ்வகை யான நினைவில் ஓயாமற்பழகி வருகிறோமோ, அதற்குத் தக்க படியே நம் உடம்பிலும் செய்கையிலும் பலவகையான அடை யாளங்கள் காணப்படுகின்றன. வெடுவெடுப்பாகப் பேசும் ஒருவர் முகத்தையும் மிகவும் அமைதியாகப் பேசும் மற்றொருவர் முகத் தையும் ஒப்பிட்டுப் பாருங்கள்! சீற்றம் உள்ளவர் முகம் பார்ப்ப வர்க்கு எவ்வளவு அச்சத்தைத் தருகின்றது! அமைதியுள்ளவர் முகமோ, எவ்வளவு கவர்ச்சியைத் தருகின்றது! உயர்ந்த அறிவுடை யோர் செய்கை எல்லார்க்கும் இன்பத்தைத் தருதலும், அறிவில் லாதவர் செய்கை துன்பத்தைத் தருதலும் நாம் வழக்கமாய் அறிந் திருக்கின்றனமே! இப்படியாக, நம்மறிவுக்கும் நினைவுக்கும் ஏற்ற படி நம் உடம்பும் செய்கையும் மாறுபடுவதைக் காணுங்கால், நாம் எவ்வளவு அமைதியும் எவ்வளவு அறிவும் உடையவர்களாய் ஒழுகவேண்டுமென்பது உங்களுக்கு விளங்காமற்போகாது.

நாம் அழகுடையவர்களாயிருக்கவேண்டுமென்றும், நாம் நல்ல பிள்ளைகளைப் பெறல்வேண்டுமென்றும், அளவிறந்த ஆவல் உடைய வர்களாயிருக்கின்றோம். ஆனால், அவ்வாவலின்படியே பெறுவ தற்கு முன்னதாகச் செய்ய வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து வைக்கின்றோமோ? சிறிதும் இல்லையே! பசியெடுத்தபோது நல்ல உணவு உண்ண வேண்டுமென்று விரும்புகிறவர்கள், பசியெடுக்கும் முன்னமே அவ்வுணவைச் சமைத்துக்கொள்ளல்வேண்டும் அன்றோ? மழை பெய்தால், பயிர் செய்து பிழைக்க வழி தேடுபவர்கள், மழை வருவதற்கு முந்தியே நிலத்தைத் திருத்திப் பதப்படுத்த வேண்டாவா? அழகான அறிவும் அழகான தன்மையும் இல்லாத வர்க்கு அழகு எங்கேயிருந்து வந்துவிடும்? 'நல்லவரல்லாதவரும்

அழகுடையராய் இருக்கக் காண்கிறோமே!' என்றால், அவர்க்கு உள்ள வெளி அழகு, முதலிற்பார்ப்பவர்க்குச் சிறிது கவர்ச்சியை உண்டுபண்ணுமேனும், பிறகு அவரொடு கலந்து பழகுவார்க்கு அவரிடத்திலுள்ள தீய தன்மை அருவருப்பை விளைக்குமாதலால், அது சிறிதும் அழகாக மாட்டாது. எட்டிப்பழம் பார்ப்பதற்கு எவ்வளவு அழகாயிருந்தாலும், அதனைச் சிறிது நாவிலிட்டால், அஃது எவ்வளவு அருவருப்பைத் தருகின்றது! ஆகவே, பார்ப்பதற்கும் பழகுவதற்கும் இனிய அறிவும் இனிய இயற்கையும் உடையவர்களே உண்மையான அழகு உடையவர்களென்பதை அறிந்துகொள்ளுங்கள்!

நம் பெண்பாலாருள் எத்தனையோ பெயர் அருவருக்கத்தக்க அறியாமையும் தீய தன்மையும் தீய செய்கையும் உடையராயிருந்தும், இவற்றைத் திருத்திக்கொள்ளச் சிறிதேனும் முயற்சி செய்யாமல், உயர்ந்த ஆடை அணிகலன்களை அணிந்து தம் முடம்பை மினுக்குவதில் மட்டுமே மிகுந்த கருத்து வைத்தவராயிருக்கின்றனர். இதனால், நம்மவர்க்கு ஆடை அணிகலன்கள் வேண்டுமென்பதை நாம் மறுக்கவில்லை. என்றாலும், வெளியேயுள்ள உடம்பை அழகு செய்வது இரண்டாந்தரமாகவும், உள்ளேயுள்ள நம் அறிவையும் நினைவையும் அழகு செய்வது முதல்தரமாகவும் வைத்துப் பழகிக்கொள்ளவேண்டும். ஒரு வீட்டின் முன் வாயிலைக் கூட்டி மெழுகிக் கோலமிட்டுப் பூச்சார்த்தி விளக்கிட்டு அழகுபடுத்துவது போலவே, அவ்வீட்டின் உள்ளேயும் அங்ஙனமே துப்புரவு செய்து வைக்கவேண்டாமா? முன் வாயில் மட்டும் அழகாயிருக்கும்படி ஒப்பனை செய்து வைத்து, உள்ளே சென்று பார்த்தால் குப்பையுங்கூளமும் முடை நாற்றமும் இருளும் மலிந்து கிடக்கவிட்டிருப்பது எவ்வளவு அருவருப்பை உண்டாக்குவதாகும்! இதுபோலவே நாம் நமதுடம்பை எவ்வளவுதான் ஒப்பனை செய்து அழகுபடுத்தினாலும், நமது உள்ளத்தையும் அங்ஙனமே அறிவினாலும் நல்ல நினைவினாலும் அழகுபடுத்தி விளங்கச் செய்யாவிட்டால், அது சிறிதாயினும் பயன்படமாட்டாது; நாம் பெறும் பிள்ளைகளும் உயர்ந்தவர்களாகமாட்டார்கள்.

உலகத்தில் மிகச் சிறந்து விளங்கிய மேன்மக்களைப்பெற்ற தாய்மார்களெல்லாம், அறிவாலும் நாகரிகத்தாலும் சிறப்புற்றிருந்தார்களென்பதைப் பழைய வரலாறுகளில் நாம் படித்தறிந்திருக்கின்றோம். தாய் எத்தன்மையுடையவளாய் இருக்கின்றாளோ, அத்தன்மையுடையவர்களாயே அவள் பெற்ற மக்களும் தோன்றுகிறார்கள்; இதற்குத் 'தாயைப்போல் பிள்ளை, நூலைப்போல் சேலை; தாயைத் தண்ணீர்த் துறையிற்பார்த்தால், பெண்ணை

வீட்டிலா போய்ப் பார்க்கவேண்டும்?' என்னும் பழமொழிகளே சான்றாகும்.

### அருஞ்சொற்பொருள்

கடமை - ஒவ்வொருவருக்கும் உரிய பணி, அக்கறை - ஈடுபாடு. கொழுமை - செழுமை, உவர்நிலம் - உப்பு மண் நிலம், கைம்மாறு - எதிர் உதவி, அருவருப்பு - வெறுப்பு, ஒப்பனை - அழகு செய்தல்.

### வினாக்கள்

1. தாய் தன் மக்கட்குச் செய்யும் கடமையே மேலானது. எதனால்?
2. தாய் தன் மக்களை இளமையில் எவ்வெவ்வாறு போற்றுகிறாள்?
3. 'நினைவுக்குத் தக்கபடியே ஒருவர் உடம்பிலும் செய்கையிலும் மாறுபாடு தோன்றும்,' என்பதனை விளக்குக.
4. 'உண்மையான அழகுடையவர்,' என்று எவரைச் சொல்லலாம்?
5. 'புற அழகினும் ஒருவர் அறிவையும் நினைவையும் அழகு செய்வதே சிறப்பாகும்' என்பதை ஆசிரியர் எவ்வாறு உணர்த்துகிறார்?
6. 'தாயைப்போலவே பிள்ளைகளும் அமைகிறார்கள்,' என்பதை விளக்க வழங்கும் நம் நாட்டுப் பழமொழிகள் யாவை?
7. 'பெற்றோள்' என்பதைக் குறிக்கும் வேறு சொற்கள் யாவை?
8. உங்களுக்குத் தெரிந்த பழமொழிகள் சிலவற்றைச் சொற்றொடர்களில் இடமறிந்து அமைத்தெழுதுக.
9. வாக்கியங்களில் அமைக்க:
   வற்றிவறண்டு, இடையிடையே, வெடுவெடுப்பாக.

## 4. எனது இலங்கைச் செலவு

*(கொழும்பு முதல் யாழ்ப்பாணம் வரை)*

[திரு. வி. கலியாணசுந்தரனார்]

கொழும்பினின்றும் கண்டிக்குப் புறப்பட்டோம். எம்மை வழிகூட்டி அனுப்பப் போந்த அன்பர்களோடு நாங்கள் பேசிக்கொண்டிருந்தமையான், எங்கட்குச் செயற்கை வெம்மை புலனாகாமலிருந்தது. வண்டி புறப்பட்டதும் அவ்வெம்மைக் கொடுமை வருத்தத் தொடங்கிற்று. சிறிது நேரத்துக்குள் இயற்கையன்னை காட்சி

வழங்கினாள். அவ்வழியின் இயற்கை வளத்தை என்னென்று சொல்வேன்! ஸ்ரீநகர், தார்ஜிலிங், ஆல்ப்ஸ் முதலிய இடங்களிலுள்ள இயற்கை வளங்களைப்பற்றிக் கேள்வியுற்றிருக்கிறேன்; நூல்கள் வாயிலாகப் படித்துமிருக்கிறேன்; நேரே கண்டதில்லை.

கண்டிக்குச் செல்லும் வழி நெடுக இயற்கை அன்னையின் திருவோலக்கமன்றி வேறென்ன இருக்கின்றது? எங்கணும் மலைகள் - மலைத்தொடர்கள் - மலைச்சூழல்கள்; எங்கணுஞ் சோலைகள்-சாலைகள் - செடிகள் - கொடிகள் - பைங்கூழ்கள்; எங்கணும் அருவிகள் - ஆறுகள் - நீர் நிலைகள். இவை யாவும் ஒன்றோடொன்று கலந்து அளிக்குங்காட்சியன்றோ கடவுட் காட்சி! நூற்றுக்கணக்கான குற்றாலங்கள் - நூற்றுக்கணக்கான பாபநாசங்கள் ஆண்டுள்ளன. மலைகள் எத்துணை விதமாகக் காட்சி வழங்குகின்றன! சில இடங்களில் மலைகள் படிப்படியாய் இழிந்து இடைவெளியிட்டு இவர்ந்து நிற்குந் தோற்றம், இயற்கை ஊசல்போல விளங்கிற்று. சில இடங்களில் மலைகள், சிங்கம் எழுந்து நின்றுபாய வருந்தோற்றத்தை வழங்கிக்கொண்டு நிற்கின்றன. சில இடங்களில் அவை செய்கரைபோல நேர்மையாய் நிற்கின்றன. பசுமை நிலவாத மலைப்பாங்கரே காணவில்லை. தெங்கும், கமுகும், ரப்பர் மரங்களும் ஒரு பெரும்பசுங்கடல் பொங்கி வருதல்போலக் காணப்படுகின்றன. சில இடங்களில் நான்கு பக்கங்களிலும் மலை சூழ்ந்து நிற்க, அவைகளினின்றும் இழியும் அருவி அவைகளின் அடியில் நீரரண் என ஓடித்திகழ, நடுவண் பச்சைப்பசேலென வான்பயிர் தலையசைத்து நிற்கும் அழகைக்கண்டு கண்டு உவந்தேன்! - பசிய மலைச்சோலைகளைப் பார்க்குந்தோறும் இயற்கை இன்ப வாழ்வு உள்ளத்தில் தோற்றமுறுநிற்கும்.

இப்பொழுது ஐரோப்பியத் தோட்டக்காரர்களும் மற்றவர்களும் அப்பசுங்காடுகளைப் பண்படுத்திப் பொருளீட்டுந்துறை கண்டிருக்கிறார்கள். நம் முன்னோர்கள் அவ்வியற்கை நிலையங்களிடை வாழ்ந்து, இயற்கை வாயிலாக இறைவனைக் காணும் எளிய வாழ்வு நடத்தினார்கள். பசுமை பொங்கும் மலைகளைப் பார்த்துக் கொண்டே கண்டி சேர்ந்தோம். நிலயத்தருகே கண்டித் தமிழ் மக்கள் அன்போடு எம்மை வரவேற்றார்கள். நாங்கள் 'தமிழக நிலையத்'தில் தங்கியிருந்தோம். ஆங்குச் 'சைவம், தமிழ் வரலாறு' என்னும் இரண்டு சொற்பொழிவுகள் நடைபெற்றன. ஆங்குள்ள தமிழர்கள் தமிழ் மனத்தோடு எங்களுடன் உறவாடினார்கள் என்று சுருங்கச்சொல்லி மேலே செல்கிறேன்.

**கண்டி**, கண்டின்புற வேண்டிய இடங்களுள் ஒன்று. **கண்டியை இயற்கைக்** குடில் என்று கூறுவது மிகையாகாது. கண்டியிலுள்ள

விவசாயக் கல்லூரி, தோட்டம் முதலியவற்றைக் கண்டோம். அத் தோட்ட அழகை வருணிக்கப் புகுந்தால், இக்கட்டுரை வருணனையுரையாகவே முடியும். இயற்கையரசியின் உறையுளெல்லாங்கண்டு பின்னர்ப் பௌத்தமடம் - கலாசாலை - கோயில் முதலிய அறநிலையங்களுக்குச் சென்றோம். நான் மடத்தின் பெரிய புத்த குருவைப் பார்த்து உரையாடப்போனேன். அவர்க்குத் தமிழுந்தெரியவில்லை; ஆங்கிலமுந்தெரியவில்லை. அவர் ஆணைப்படி புத்த வித்தியாலயம் சென்று, ஆண்டுள்ள ஓர் ஐரோப்பியர்பால் உரையாடினேன். அவர் பௌத்த நூல்களில் பேராராய்ச்சியுடையவர் என்பது, அவரது அன்பார்ந்த பேச்சால் தெரியவந்தது. சம்பாஷணையால் யாங்கள் ஒருமை முடிவே பெற்றோம்.

புத்த பிட்சுகள் - பொங்கிகள் - சந்நியாசிகள் கூட்டங்கூட்டமாய்த் திரிகிறார்கள். கலாசாலையில் சிறு குழந்தைகள் சீவர ஆடை புனைந்து சந்நியாசக் கோலந்தாங்கியிருப்பது கண்டேன். சந்நியாச வாழ்வு இயற்கைக்கு முரண்பட்டது என்பது எனது அடிப்படையான கொள்கை. அக்கொள்கையுடைய அடியேன் கண்ணுக்கு அச்சந்நியாசக் கூட்டம் எவ்வாறு தோன்றியிருக்குமென்பதைச் சொல்லவேண்டுவதில்லை. நமது நாட்டுப் பண்டாரங்கட்கும் அச் சந்நியாசிகட்கும் வேற்றுமையில்லை. அருள் நெறி ஓம்ப வேண்டிய அவ்வறவோர்கள், விலாப்புடைக்கப் புலால் உண்கிறார்கள். 'பிறர் கொன்றதைத் தின்னலாம்,' என்று அவர்கள் வாதமிடுகிறார்கள். சந்நியாசமும் புலாலுணவும் பௌத்தமதத்தின் பெருமைக்கு இடையூறாய் நிற்கின்றன. இயற்கையின் வாழ்வை வெறுப்பது துறவொழுக்கமாகாது.

கண்டியின் பலதிறக் காட்சி கண்டு, அன்பர்கள்பால் விடை பெற்று, யாழ்ப்பாணம் நோக்கினேம். இடையில் போல்காவலை என்னுமிடத்தில் சுமார் மூன்று மணி நேரம் தங்குதல் நேர்ந்தது. அவ்வூரின் எப்பகுதியிற்சென்றாலும் தென்னைமரச் சோலைகளின் பெருக்கம் கண் பார்வையையும் கடந்து ஒளிர்கிறது. 'தென்னை மரப் பெருக்குடையது' என்னும் பொருளை அவ்வூர்ப் பெயரே தாங்கிநிற்கிறதென்று அங்குள்ளார் கூறினார். அங்கிருந்து யாழ்ப்பாணம் சென்றோம்.

யாழ்ப்பாணத்தின் இயற்கை வளம், நமது தென்னாட்டு இயற்கை வளத்துக்கு அரண் செய்வது. இலங்கையின் மற்றப் பகுதியின் இயற்கை வளம் யாழ்ப்பாணத்திலில்லை. புகையிலைப் பெருக்குக் குறிக்கத்தக்கது. கொழும்பு வழியிலும் கண்டி வழியிலும் தெங்கின் பசுமை கண்ணுக்கு விருந்தளித்தது. யாழ்ப்பாணத்திலோ, அத்தென்னங்கீற்றுகளின் வேலிகள் கண்ணைக்

கவர்ந்து நின்றன. யாழ்ப்பாணத்தில் சொற்பொழிவுகள் பல நிகழ்ந்தன. ஒரே நாள் நான்கிடங்களில் சொற்பொழிவு நிகழ்த்தலும் நேர்ந்தது. பல கல்லூரிகளிலும் சொற்பொழிவுகள் நடைபெற்றன. கல்லூரிகளுள் எனதுள்ளத்தைக் கவர்ந்தது, சர். பொன்னம்பலம் இராமநாதன் மகளிர் கல்லூரி. அக்கல்லூரியைப் பெருஞ்சிதம்பரமாக மனத்தால் தொழுதேன். தமிழும் சைவமும் ஆண்டிருந்து புத்துயிர் பெறும் என்னும் உறுதியும் எனக்குத் தோன்றிற்று.

நாவலர் பெருமான் உண்மையுழைப்பு, யாழ்ப்பாணத்தில் எவ்வாறு பரிணமித்திருக்கிறது என்பது நேரிற்காண்பார்க்கே இனிது விளங்கும். யாழ்ப்பாணக் குடிமக்கள் தமிழர்கள்; வேளாளர்கள்; சைவர்கள். அவர்கள் நமது தமிழ் நாட்டினின்றும் அவண் போந்து குடி புகுந்தவர்கள். அவர்களுடன் போந்த வேறு சிலருமிருக்கின்றனர். தாய்நாட்டின் நினைவு தோன்ற, ஆண்டுள்ள தமிழ் மக்கள் சில இடங்களுக்குத் திருநெல்வேலி, பட்டுக்கோட்டை முதலிய பெயர்களைச் சூட்டியிருக்கிறார்கள். யாழ்ப்பாணத் தமிழ் மக்கள் எங்கள்பால் காட்டிய அன்பு என்றும் மறத்தற்பாலதன்று. தென்னாட்டுத் தமிழ் மக்களுக்கும் தங்கட்கும் இடையறா அன்புத் தொடர்பிருத்தல்வேண்டுமென்று கூறாத அன்பர்களில்லை.

யாழ்ப்பாணத்தில் கிறிஸ்தவர்கட்கும் சைவர்கட்கும் ஒருவழியில் ஒற்றுமையும் மற்றொரு வழியில் ஒற்றுமையின்மையும் வளர்ந்து வருகின்றன. சமயப் போரும் சில இடங்களில் கனன்றுகொண்டிருக்கிறது. சைவ சமயத்தின் சமரசத்தையும் அன்பு நிலையையும் அருள் நெஞ்சங்கொண்டு அறிவுறுத்தினால், ஆண்டுள்ள கிறிஸ்தவர்கள் பாதிரி மதத்தை விடுத்து, உண்மைக் கிறிஸ்துவை வழிபடத்தொடங்குவார்கள். கிறிஸ்துவின் போதனை, சைவ சமயம் அறிவுறுத்தும் அன்புப் போதனையேயாகும். மெய்கண்டாரைப்பற்றியும் அப்பரைப்பற்றியும் யான் குறிப்பிட்ட சில பொருள்கள் கிறிஸ்தவர்கட்குக் கழிபேருவகையூட்டின! உடுவிலிலுள்ள கிறிஸ்தவக் கல்லூரியில் காந்தியடிகள் சமய நிலை என்பதுபற்றிச் சிறிது நேரம் பேசுதல் நேர்ந்தது. அப்பேச்சு, கிறிஸ்தவர்களால் அன்புள்ளத்தோடு செவிமடுக்கப்பட்டது. 'சமரசமும் அன்பும் பெருக, உலகில் சமயப்போர் அழியும்,' என்பது எனது உள்ளக்கிடக்கை.

யாழ்ப்பாண நகர் விடுத்துப் புறப்படும்போது பருத்தித்துறை முதலிய இடங்களிலிருந்து போந்த அன்பர்கள் விருப்பத்துக்கு இணங்க நேராமற்போனது குறித்து எனதுள்ளத்தெழுந்த வருத்

தத்துக்கு ஓர் அளவின்று. யாழ்ப்பாணத் தமிழ் மக்கட்கு எங்கள் வணக்கத்தைச் செலுத்தி, இந்தியா நோக்கினேம்.

இன்னும் இலங்கையில் பார்க்கத்தக்க இடங்கள் பல உண்டு. அவைகளுட் சிறந்தவை, அநுராதபுரம், திருக்கோணமலை, திருக்கேதீச்சரம், கதிர்காமம் என்பவை. மீண்டும் இலங்கை செல்லத் திருவருள் கூட்டுமேல், அவ்விடங்களைக் காணும் பேறு பெறுவேன்!

### அருஞ்சொற்பொருள்

போந்த - வந்த ('புகுந்த' என்பதன் மரூஉ), புலனாகாமல் - தெரியாமல், வாயிலாக - வழியாக, திருவோலக்கம் - கொலுவீற்றிருத்தல், எங்கணும் - எல்லா இடங்களிலும், பைங்கூழ்கள் - பயிர்கள், குற்றாலம், பாபநாசம் - திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள மலைசார்ந்த இயற்கை வளமிக்க ஊர்கள், இவர்ந்து - உயர்ந்து, ஊசல் - ஊஞ்சல், தோற்றம் - காட்சி, செய்கரை - செயற்கைக்கரை, நீரரண் - நீர்ப்பாதுகாப்பு, தோற்றமுறு நிற்கும் - விளங்கும், மிகை - குற்றம், உறையுள் - இருப்பிடம், ஆணை - கட்டளை, சீவர ஆடை - காவியாடை, முரண்பட்டது - மாறுபட்டது, அரண் செய்வது - பாதுகாப்புத் தருவது, பரிணமித்திருக்கிறது - நிலை மாறியிருக்கிறது, கழிபேருவகை - மிகப்பெரிய மகிழ்ச்சி.

### வினாக்கள்

1. மலைக்காட்சியின் வருணனையை எழுதுக.
2. கொழும்பிலிருந்து கண்டிக்குச் செல்லும் வழியில் திரு. வி.க. கண்ட இயற்கைக் காட்சிகள் யாவை?
3. கண்டியில் திரு.வி.க. எங்குத் தங்கினார்?
4. கண்டியில் திரு. வி. க. கண்ட காட்சிகள் யாவை?
5. பௌத்தமடத்தில் நிகழ்ந்தது யாது?
6. கண்டியிலுள்ள பௌத்த மடத்தில் கண்ட சந்நியாசிகளைப் பற்றித் திரு.வி.க.வின் கருத்து யாது?
7. யாழ்ப்பாணத்தின் சிறப்புகளைத் தொகுத்து எழுதுக.
8. தென்னாட்டிற்கும் யாழ்ப்பாணத்திற்கும் உள்ள தொடர்பு யாது?
9. யாழ்ப்பாணத்தில் வாழ்பவர்களைப்பற்றித் திரு.வி.க. கூறுவன யாவை?
10. உலகில் சமயப்போர் அழியத் திரு.வி.க.என்ன கூறியுள்ளார்?
11. இலங்கையில் பார்க்கத்தக்க இடங்கள் யாவை?
12. இலங்கையின் தமிழ் வளர்ச்சியைப்பற்றி எழுதுக.

13. குறிப்பு எழுதுக:

குற்றாலம், பாபநாசம், கண்டி, போல்காவலை.

14. பின்வரும் தொடர்களை வாக்கியங்களில் அமைத்தெழுதுக:

எத்துணையெத்துணை, பச்சைப்பசேலென்று, கழிபெருவகை, உள்ளக்கிடக்கை.

## 5. சி. வை. தாமோதரம் பிள்ளை

[திரு. எஸ். வையாபுரிப்பிள்ளை]

சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் நமது தமிழ் மொழி ஒரு நூதன சக்தியால் இயக்கப்பட்டது. மேலை நாட்டுப் புதிய நாகரிகமும், பயிற்சிப்பண்பும் (culture) நமது நாட்டினரையும் தாக்கத் தொடங்கின. மேலை நாட்டுக் கல்விமுறை நம்மவர்களால் கையாளப்பட்டது. மேலைநாட்டு இலக்கிய நயங்களிலே நம்மவர்களும் ஈடுபட்டு, அவற்றின் நலங்களை நுகர்ந்து, இன்புறத் தொடங்கினர். பெரும்பாலார் அதன் புதுமை மோகத்தில் தம்மைப் பறிகொடுத்துவிட்டனர். 'புதியன கண்டபோது விடுவரோ புதுமை பார்ப்பார்?' என்று கம்பர் கூறியது பொய்ப் படுமா? இவர்கள் அந்நிய மொழிகளைத் தங்கள் தாய்மொழி யாகவே கருதினார்கள்; தங்கள் தாய் மொழியைப் புறக்கணித்தல் செய்தார்கள். ஆனால், சிலர் இவர்களுக்கு விலக்காய் அமைந்து. தாய்மொழியாகிய தமிழையும் அதன் இலக்கியங்களையும் போற்றி வரலாயினர். இச்சிலருள் ஒருவர் ராவ் பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள்.

பிள்ளையவர்கள், 1832ஆம் ஆண்டு யாழ்ப்பாணத்திலே சிறுப்பிட்டியில் சைவ மரபிலே வைரவநாதருக்குப் புத்திரராய்ப் பிறந்தவர்கள். அந்நாட்டிலேயுள்ள கிறிஸ்தவ சங்கம், கல்வி நிலையங்கள் நிறுவிக் கல்வியைப் பரப்பி வந்தது. ஆங்கிலங் கற்க விரும்பினோர்க்கு இச்சங்கத்தைத் தவிர வேறு கதியில்லாதிருந்தது. சங்கத்தினரின் விருப்பத்தை நிறைவேற்றியாவது கல்வி கற்க வேண்டுமென்பது தாமோதரனார்கருத் தோன்றியது. 'பிச்சை புகினுங் கற்கை நன்றே' என்பது, நம் முன்னோர்களது கொள்கை யன்றோ? சில காலம் இவர் கிறிஸ்தவர்களோடு கூடித் தங்கித் தமது கருத்தை முற்றுவித்துக்கொண்டனர்; தாமும் கிறிஸ்தவரைச் சார்பினராய்ச் சில காலம் இருந்தனர். இவ்வனுபவம்" ஒரு

சோதனையாய் முடிந்தது. இதனால், புடமிட்ட பொன்போல இவர் அறிவொளி மிகுந்து, சைவ சமயத்தில் பேரன்பு பூண்டவராய்ப் பின்பு விளங்கினர்.

'சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு,'

என்பது பொய்யா மொழியன்றோ?

ஆறுமுக நாவலர் இவரது சைவ சமயப்பற்றுக்குக் காரணரா யிருந்தனர்.

இவர் ஆங்கிலக் கல்வியில் ஈடுபட்டனர் என்பது உண்மை; ஆனால், தாய்மொழிக் கல்வியை மறந்துவிடவில்லை; சுன்னை முத்துக்குமார கவிராயர் என்ற ஆசிரியரிடம் தமிழ் கற்றுச் சிறந்த புலமை எய்தினர்.

யாழ்ப்பாணத்தில் தாமோதரனார் கல்வி முடிந்தது. இவர் தமிழ்நாட்டிற்கு வந்தனர். அப்பொழுது சென்னைப் பல்கலைக் கழகம் 1857இல் நிறுவப்பட்டது. இக்கழகத்தின் முதல் ஆண்டில் இவர் பி.ஏ. பட்டம் பெற்றனர். பின்னர், இவர் தமிழ் நாட்டி லேயே, உயர்தர அலுவலில் அமர்ந்து இறுதியில் அன்றைய புதுக் கோட்டை அரசில் நீதிபதியாய் விளங்கினர். இவர் மகிழ்ச்சி நிரம்பிய இவ்வாழ்வில் தம்மை மறந்துவிடவில்லை. இவரது தமிழார்வம் இவர் உள்ளத்திலே மங்கா ஒளியாய்த் திகழ்ந்து, ஒரு காலைக்கொருகால் வளர்ந்து, முடிவில் பேரொளிப்பிழம்பாய்ச் சுடர்விட்டு எரிந்தது.

ஒரு நாட்டில் இலக்கிய உணர்ச்சியும் பயிற்சிப்பண்பின் நலமும் பெருகவேண்டுமாயின், அந்நாட்டுப் புராதன இலக்கியங்களாலே தான் அது நன்கு பெருகுவதாகும். புதிய இலக்கியங்களும் புரா தன இலக்கியத்தை அடிப்படையாகக் கொண்டுதான் பிறத்தல் இயலும். தேசியப்பற்றும் இப்பண்டை இலக்கியக் கல்வியினாலும், பயிற்சிப்பண்பினாலும் உண்டாவதேயாம்.

பண்டையிலக்கியங்களும் பேணுவாரற்று அழிந்து வந்தன. ஏட்டுச்சுவடிகள் நீர்வாய்ப்பட்டும், தீவாய்ப்பட்டும், சிதல்வாய்ப் பட்டும் மறைந்த வண்ணமாய் இருந்தன. இந்நிலையைக் கண்டு பிள்ளையவர்களுடைய உள்ளம் கொதித்தது. இவர்கள் கலித் தொகையின் பதிப்புரையிலே,

'ஏடு எடுக்கும்போது ஓரஞ்சொரிகிறது. கட்டு அவிழ்க் கும்போது இதழ் முரிகிறது. ஒற்றை புரட்டும்போது, துண்டு

துண்டாய்ப் பறக்கிறது. இனி எழுத்துகளோ என்னில், வாலும் தலையுமின்றி, நாற்புறமும் பாணக்கலப்பை மறுத்து மறுத்து உழுது கிடக்கின்றன . . .

'பழைய சுவடிகள் யாவுங்கிலமாய் ஒன்றொன்றாய் அழிந்து போகின்றன. புது ஏடுகள் சேர்த்து அவற்றை எழுதி வைப்பாரும் இலர். துரைத்தனத்தாருக்கு அதன்மேல் இலட்சியமில்லை. சரசுவதியைத் தம்பால் வகிக்கப்பெற்ற வித்துவான்களை அவள் மாமி எட்டியும் பார்க்கின்றாளில்லை. திருவுடையீர்! நுங்கருணை இந்நாள் தவறினால், பின்பு தவம் புரிந்தாலும் ஒரு தரம் அழிந்த தமிழ் நூல்களை மீட்டல் அரிது. யானை வாய்ப்பட்ட விளம்பழத்தைப் பின் இலண்டத்துள் எடுத்துமென்பயன்? ஓடன்றோ கிட்டுவது! காலத்தின் வாய்ப்பட்ட ஏடுகளைப் பின் தேடியெடுப்பினும் கம்பையும் நாராசமுந்தான் மீறும்.

'சங்கம் மரீஇய நூல்களுட்சில, இப்போதுதானும் கிடைப்பது சமுசயம் .............. எத்தனையோ திவ்விய மதுர கிரந்தங்கள் காலாந்தரத்தில் ஒன்றன்பின் ஒன்றாய் அழிகின்றன. சீமான்களே! இவ்வாறு இறந்தொழியும் நூல்களில் உங்களுக்குச் சற்றாவது கிருபை பிறக்கவில்லையா! ஆச்சரியம்! ஆச்சரியம்! அயலான் அழியக் காண்கினும் மனந்தளர்கின்றதே! தமிழ் மாது நும் தாயல்லளா? இவள் அழிய, 'நமக்கென்!' என்று வாளா இருக்கின்றீர்களா! தேசாபிமானம், மதாபிமானம், பாஷாபிமானமென்ற இவை இல்லாதார் பெருமையும் பெருமையாமா? இதனைத் தயை கூர்ந்து சிந்திப்பீர்களாக!'

என்று எழுதி அபயமிட்டார்கள்.

இச்சொற்கள் இன்னும் நமது உள்ளத்தைக் கொதித்தெழச் செய்யும் பேராற்றல் வாய்ந்தவை. இவ்வாறு உளங்கொதித்திருந்த பிள்ளையவர்களுக்கு அமைதியுண்டா? இவர் தம் காலம் வரை ஒருவரும் எட்டிப் பாராத இப்பணிக்களரியில் உழைத்து வர முற்பட்டனர்.

ஆறுமுக நாவலர், சைவ சமய நூல்களும், குறளும், பாரதமும் வெளியிடுவதோடு அமைந்துவிட்டார்கள். வித்துவான் தாண்டவராய முதலியார், திவாகரம் முதலிய நூல்களையும், பள்ளி மாணவர்களுக்கு வேண்டும் வசன நூல்களையும் அச்சியற்றுவதில் ஒடுங்கிவிட்டார்கள். மழவை மகாலிங்க ஐயர், தொல்காப்பியம் எழுத்ததிகாரத்தை நச்சினார்க்கினியர் உரையோடு

பதிப்பித்து, வேறு சில நூல்களையும் வெளியிட்டு, அவற்றுடன் நின்றுவிட்டார்கள். களத்தூர் வேதகிரி முதலியார், நாலடி, நைடதம் முதலிய நூல்களை வெளியிட்டு, அவ்வளவில் திருத்தியுற்றார்கள். திருத்தணிகை விசாகப்பெருமாளையர் முதலியோர், குறளுக்குத் தெளிபொருள், பிரபுலிங்கலீலை, சூடாமணி நிகண்டு முதலியவற்றைப் பிரசுரித்து, அவ்வளவில் தங்கள் முயற்சியைச் சுருக்கிக்கொண்டார்கள். திருவேங்கடாசல முதலியார், இராசகோபாலப் பிள்ளை முதலானவர், இராமாயணம் வெளியிடுவதிலும் நாலடி முதலியன பதிப்பித்தலிலும் ஈடுபட்டுநின்றனர். உ. வே. சாமிநாத ஐயரவர்கள், அப்பொழுதுதான் சீவகசிந்தாமணிப் பதிப்பு முயற்சியில் போராடிக்கொண்டிருந்தார்கள். ஆகவே, நம் பிள்ளையவர்கள் தன்னந்தனியராய்ப் பண்டைத்தமிழ்ச் செல்வப் புதையலைத் தமிழ் மக்களுக்கு அகழ்ந்தெடுத்து உதவும் பெருமுயற்சியை மேற்கொண்டார்கள்.

இம்முயற்சியில் நேர்ந்த இடையூறுகள் மிகப்பல. முதலாவதாக, ஏட்டுப்பிரதிகள் கிட்டுவது அரிதாயிருந்தது. பரம்பரை வித்துவான்களின் இல்லந்தோறும் பிரதிகள் தேடுவது அவசியமாயிற்று. பிள்ளையவர்களின் உற்ற நண்பர்கள் அங்கங்கேயிருந்து உதவி புரிந்தார்கள். இந்நண்பர்களுக்கு ஏட்டுப் பிரதிகளை நேரிற்பரிசோதிப்பது பெரும்பாலும் இயலாத காரியமாயிருந்தது. இதனால், ஏடு பெறும் முயற்சி முற்றும் நன்கு நிறைவேற வழியின்றிப் போயிற்று. ஏடுகளுக்கு உரியவர்களும் அவற்றைக் கொடுத்துத் தமிழுலகிற்கு நன்மை புரிவதில் விருப்பமில்லாதிருந்தார்கள். ஆனால், பிள்ளையவர்கள் மனந்தளரவில்லை. மேலும் மேலும் ஊக்கங்கொண்டு தேடிய வண்ணமாயிருந்தார்கள்.

இரண்டாவது, ஏட்டுப் பிரதிகளைப் பரிசோதித்துப் பலபடியாக ஆராய்ந்து வழுவறப் பிரதி செய்வது. அக்காலம், ஏடு பார்த்து வாசித்தல் வழக்காறற்றுப் புதியதொரு கலையாய்த் தோன்றிவிட்ட காலம்! இப்போது அச்சிற்கிட்டும் பல இலக்கியங்கள் பெயர் அறியப்படாமலிருந்த காலம் அது! எட்டுத்தொகையில் அடங்கியுள்ள நூல்கள் இன்ன என்பதை அறியாக் காலம்! 'சிலப்பதிகாரமா அல்லது சிறப்பதிகாரமா?' என மயங்கிக் கொண்டிருந்த காலம்! ஆகவே, தக்க பாண்டித்தியம் இருந்தாலன்றி, நூல்களைப் பதிப்பிடுதல் இயலாததாம். அவ்வகைப் பாண்டித்தியமுள்ள உதவியாளர்கள் பிள்ளையவர்களுக்குக் கிட்டுவது அருமையாயிருந்தது. அவர்களே ஏடு பார்த்துப் பிரதிசெய்து பொருள் ஆராய வேண்டியதாயிற்று; தமக்கு விளங்காத இடங்களைக் குறித்துக் கடிதம் வாயிலாகப் பல வித்துவான்களுக்கும் எழுதிய வண்ணமாயிருந்தார்கள். ஆனால், இக்கடிதப் போக்குவரத்தினால் விளங்

கிய இடம் பெரும்பாலும் இல்லையென்றே சொல்லலாம். பிள்ளையவர்களுடைய அல்லற்பாடுகளையுணர்ந்தார்தாமும் மிகு சிலரேயாவர். இவர்கள், 'எனக்கு ஸ்ரீமத் சாமிநாதையரும் அவருக்கு நானுமே சாட்சி,' என்று ஓரிடத்து எழுதியிருக்கிறார்கள்.

மூன்றாவது, நூல்களைப் பதிப்பிடுதலின் செலவு. சிற்சில பெரியார்கள் இவ்விஷயத்தில் உதவினார்கள். எனினும், இவர் பெரும்பாலும் தமது கைப்பொருளையே செலவிடும்படி நேர்ந்தது. இக்காலத்திற்போன்று தமிழ் மக்கள் நூல்கள் வாங்குதல் முற்காலத்தில் இல்லை. மிகவும் சொற்பப் பிரதிகள் வெளியிடப்படினும், அவைதாமும் பதிப்பாசிரியரிடமே தங்கிச் செல்லரிப்புண்டு அழிதல் வழக்கமாயிருந்தது. அன்றியும், தமிழ் நூல்களிற்பற்றுள்ள புத்தகப் பிரசுராலயங்களும் அக்காலத்தில் இல்லையென்றே சொல்ல வேண்டும்.

நான்காவதாக, எத்துணையோ சிரமமெடுத்து நூல்களை வெளியிட்டபோதினும், அதற்குக் கைம்மாறாகக் கிட்டியது வசவுரைதான். ஆங்கிலங் கற்ற தமிழ் விற்பன்னர்கள், உதாசீனமாயிருந்தார்கள். தமிழ் கற்ற பண்டிதர்களுட்சிலர், பொறாமை மிக்குப் பகை காட்டினர். அறிஞர் ஒருசிலர், தமிழ் நூல்களை வெளியிடுவதற்குத் தமக்குத்தான் தனியுரிமையுண்டென்று கருதினர். அவர்களாவது நூல்களைப் பதிப்பிட முன் வந்தார்களா? அதுவும் இல்லை. முன் வந்தார்களாயின், தமிழ் நூல்கள் அழியாது பாதுகாக்கப்பட்டிருக்குமே! அவர்கள் செய்ததெல்லாம் குறைகூறிக் கொண்டிருந்ததொன்றேயாம்.

பிழைகளை எழுதி அனுப்பினால், எழுதினோர் பெயர்களோடு அவை வெளியிடப்படுமென்றும், 50 பிழைகள் காட்டுவோர்க்கு ஒரு புத்தகம் இனாமாக அளிக்கப்படும் என்றும், பிள்ளையவர்கள் பத்திரிகைகளில் வெளியிட்டிருந்தார்கள். யாரும் எழுதியனுப்பியதாகத் தெரியவில்லை. பிறரைக் குறைகூறிக்கொண்டிருப்பதே, பாண்டித்தியத்தின் முக்கிய இலட்சணமென்ற கொள்கையுடையாரால் தமிழில் இலக்கியச் செல்வம் எந்நாளேனும் பெருகுவதாகுமா? அக்காலத்திற்பலராலும் விரும்பிக் கற்கப்பட்டு வந்த 'திராவிடப்பிரகாசிகை' என்னும் நூலில் பிள்ளையவர்களைக் குறித்து எழுதியிருப்பன தமிழ்ப் பண்டிதர் சிலரது மனப்போக்கை நன்கு தெரிவிக்கின்றன.

ஆனால், பிள்ளையவர்கள் இந்தக் கண்டனவுரை, வசவுரை முதலிய இடையூறுகளையெல்லாம் பொருட்படுத்தியவர்களே அல்லர்; தம் அறிவொழுக்கங்களுக்கேற்ப, சிறந்த நற்குணமும் உடைய

வர்கள்; அடக்கம் நிரம்பியவர்கள்; எல்லாம் அறிந்த பெரும் புலவர் எனத் தம்மைக் கூறிக்கொள்ளவில்லை; தமக்குத் தெரியாத பொருள்களைப் பிறரிடங் கேட்டுணர்வதில் சிறிதும் கூச்சமற்ற வர்கள். அவ்வாறு கேட்பது, தமக்குச் சிறுமையாமென்று கருதி யவர்களுமல்லர்; தமிழன்னைக்குப் புரியும் திருத்தொண்டில் மற்ற வித்துவான்களும் உழைத்து வரவேண்டுமென்ற கொள்கையையே உடையவர்கள். ஒருசிலர், தம்மைத் தவிரத் தமிழ் நூல்களைப் பதிப்பிடும் பணியில் இறங்கிய பிறருக்கெல்லாம் நரகதண்டனை விதித்துச் சபித்துவந்துள்ளனர்! பிள்ளையவர்கள் இவ்வினத்தைச் சார்ந்தவர்களல்லர். உண்மையான அன்போடு உண்மையான தமிழ்த்தொண்டு புரிதலே பிள்ளையவர்களது வாழ்க்கையின் பெரு நோக்கமாயிருந்தது.

இவ்வகையான உண்மைத்தொண்டு பயனற்றுப் போகுமா? பிள்ளையவர்கள் வெற்றியெய்தியமை தமிழ்நாடு நன்கறிந்ததே. தொல்காப்பியம், கலித்தொகை, சூளாமணி என்பன, இவர்கள் தந்த தனிப்பெருஞ்செல்வங்களுட்சிறந்தன. தமிழன்னையின் அருங் கலமாய்த் திகழும் இந்நூல்கள் உள்ளவரை இவர்கள் புகழும் நின்று நிலவுவதாகும்!

உரைநடையெழுதுவதில் இவர்கள் எத்தனை ஆற்றல் படைத் தவர்களென்பது மேலே தந்துள்ள எடுத்துக்காட்டுகளால் விளங் கும். அழகிய செய்யுள்கள் இயற்ற வல்ல கவித்துவச்சத்தி இவர் களிடத்தில் சிறந்து விளங்கிற்று. மாயூரம் வேதநாயகம் பிள்ளையவர்கள்,

> 'நீடிய சீர்பெறு தாமோ தரமன்ன! நீள்புவியில்
> வாடிய கூழ்கள் மழைமுகங் கண்டென மாண்புறநீ
> பாடிய செய்யுளைப் பார்த்தின்ப வாரி படிந்தனன்யான்!
> கோடிப் புலவர்கள் கூடினும் நின்புகழ் கூறரிதே!'

என்று பாடியிருக்கிறார்கள். இது சிறிதும் முகத்துதியன்று; உண்மையேயாகும்.

'உரைநடையாளர், கவிஞர்' என்னும் இரண்டு நிலையிலும் பிள்ளையவர்கள் சிறந்த இடத்தைப் பெறத்தக்கவர்கள். ஆனால், இவ்விரண்டு வகையிலும் இவரது ஆற்றல் மேன்மேலும் விளங்கு வதைக் காணும் பேறு நமக்குக் கிட்டவில்லை. உதயதாரகை என்ற பத்திரிகைக்கு இவர்கள் ஆசிரியராயிருந்ததும், சைவ சமயம் பற்றிப் பல வசனநூல்களை எழுதியதும் இங்கே குறிப்பிடத்தக்கன. ஆனால், சிறந்த பதிப்பாசிரியர் என்ற நிலையில்தான் இன்று இவர் களைப் போற்றுகிறோம்.

## அருஞ்சொற்பொருள்

நூதன - புதிய, அந்நிய மொழி - வேற்றுமொழி, கதி - வழி, புடமிட்ட பொன் - தீயிலிட்டுக் காய்ச்சித் தூய்மை செய்த பொன், பூண்டவராய் - மேற்கொண்டவராய், சுடரும் - ஒளிவிடும், நோற்கிற்பவர்க்கு - தவம் செய்ய வல்லார்க்கு, மங்கா - மறையாத, பிழம்பு - தொகுதி, புராதன - பழைமையான, பேணுவாரற்று - காப்பாற்றுவாரில்லாமல், சிதல் - கறையான், சொரிகிறது - கொட்டுகிறது, முரிகிறது - சிதைகிறது, ஒற்றை புரட்டுதல் - ஏடுகளின் இதழ்களை ஒவ்வொன்றாகப் புரட்டுதல், பாணக்கலப்பை - இராமபாணமென வழங்கும் பூச்சியாகிய கலப்பை, கிலமாதல் - பழுதுபடுதல், மீட்டல் - திரும்பப் பெறுதல், மாமி - கலைமகளுக்கு மாமியாகிய இலக்குமி (செல்வம்); (சரசுவதியின் நாயகனான பிரமன், திருமாலின் மகன் ஆதலால், திருமகள் மாமியாயினள்). இலண்டம் - யானை கழிக்கும் மலம், கம்பை - ஏட்டின் இரு பக்கமும் காப்பாக இணைக்கப்படும் பலகை, நாராசம் - ஏடுகளில் துளையிட்டு அவற்றை ஒன்றாகப் பிணைக்கும் சிறு குச்சி, சமுசயம் - சந்தேகம், மதுரகிரந்தங்கள் - இனிய நூல்கள், காலாந்தரத்தில் - காலப்போக்கில், அயலான் - பிறன், வாளாசும்மா, அபிமானம் - பற்று, அபயமிட்டார்கள் - அடைக்கலம் தரும்படி கூவி அழைத்தார்கள், பணிக்களரி - வேலை செய்யும் இடம், வழுவற - பிழை நீங்க, பாண்டித்தியம் - புலமை, அல்லற்பாடு - துன்பப்படுதல், சொற்பம் - சிறிது, கைம்மாறு - பதிலுதவி (எதிர் உதவி), திராவிடப்பிரகாசிகை - சபாபதி நாவலரால் எழுதப்பட்ட நூல்; இது தமிழ் நூல் வரலாறுகளை விளக்குவது. கண்டனவுரை - மறுப்புரை, அருங்கலம் - அணிகள், கவித்துவசத்தி - கவி பாடும் ஆற்றல், கூழ்கள் - பயிர்கள்.

## வினாக்கள்

1. சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் நாட்டுநிலைமை மொழிபற்றிய அளவில் எவ்வாறிருந்தது?
2. தாமோதரனார் இளமையில் தாய்மொழிக் கல்வியையும் ஆங்கிலக்கல்வியையும் எவ்வாறு பெற்றனர்?
3. தமிழ் நாட்டிற்கு வந்தபின் தாமோதரனார் பெற்ற கல்வியும் செய்துவந்த அலுவலும் யாவை?
4. பண்டை இலக்கியச் சுவடிகளைப்பற்றித் தாமோதரனார் கூறுவது யாது?
5. தாமோதரனார் காலத்தில் பழஞ்சுவடிகளைப் பதிப்பித்தவர் யார் யார்? அவர்கள் எவ்வெந்நூல்களைப் பதிப்பித்தார்கள்?
6. பதிப்புத்துறையில் தாமோதரனார் செய்த தொண்டுகளை விளக்குக.
7. பிள்ளையவர்களின் பெருங்குணங்கள் யாவை?
8. தாமோதரனார் பதிப்பித்துதவிய நூல்கள் யாவை?

9. செய்யுளியற்றுவதிலும் உரை நடை எழுதுவதிலும் தாமோதரனாரின் தனித்திறமையை விளக்குக.

10. குறிப்பு எழுதுக:
எட்டுத்தொகை, திராவிடப்பிரகாசிகை, மாயூரம் வேதநாயகம் பிள்ளை, உதயதாரகை.

11. வாக்கியங்களில் அமைக்க:
பறிகொடுத்துவிட்டனர், புடமிட்ட பொன் போல, ஒருகாலைக்கொருகால், துண்டுதுண்டாய், மறுத்து மறுத்து, தன்னந்தனியராய்.

## 6. சத்தியமூர்த்தி

[திரு. கருப்பையா]

'பாரத நாடு பார்க்கெலாம் திலகம்;
நீரதன் புதல்வர் இந்நினை வகற்றுதீர்,'

என்று பாடினார் மகாகவி பாரதியார். பண்டைக்காலந்தொட்டே பார்க்கெலாந் திலகமாக விளங்கும் நமது பாரத மணித்திருநாடு இடையில் அந்நியர் ஆட்சியில் தன்னுரிமை இழந்து நின்றபோது தாய்த்திருநாட்டின் அடிமைத்தளையைத் தகர்த்தெறியத் தியாகத் தலைவர்கள் கிளர்ந்து எழுந்தார்கள். பெம்மான் காந்தியடிகளின் சீரிய தலைமையின்கீழ் நடந்த விடுதலைப் பெரும்போராட்டத்தில் தங்களை அர்ப்பணித்துக்கொண்ட தியாக சீலர்கள் வரிசையைச் சேர்ந்தவர் தீரர் சத்தியமூர்த்தி. அவரது வாழ்க்கை வரலாறு மக்கள் உள்ளங்களில் நாட்டுப்பற்றையும், தியாக உணர்வையும், ஒருமை மனப்பான்மையையும் ஊட்டும்.

சத்தியமூர்த்தி நாடாண்ட அந்நியரைத் தமது நாவன்மையால் நடுங்க வைத்தவர்; உலகின் மிகச் சிறந்த பேச்சாளர்கள் வரிசையில் இடம்பெற்றவர்; சொந்த இன்ப துன்பங்களைத் துறந்து தியாகி என்ற சொல்லுக்கு இலக்கணமாகத் திகழ்ந்தவர். சிறந்த செயல்திறன் பெற்று விளங்கியவர்; அச்சம் என்பதை அறியாத தலைவராக வாழ்ந்தவர். உள்ளாட்சித்துறைப் பணிகளுக்கு அடிப் படை அமைத்தவர். நாடகம், இசை, நடனம் ஆகியவற்றில் நாட்டம் மிகுந்த கலைஞர்; கல்வித்துறையில் சீர்திருத்தத்தைத் தொடங்கிவைத்த செம்மல்; சட்டமன்ற உறுப்பினர் பதவிக்குப் பெருமை சேர்த்த பெருமகன்; நாட்டுப்பற்றையே தமது உயிர் மூச்சாகக்கொண்டு வாழ்ந்த தலைவர்.

புதுக்கோட்டை மாவட்டத்தில் திருமயம் என்ற ஊரில் 1887 ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 19ஆம் தேதி சத்தியமூர்த்தி பிறந்தார். தந்தையாரின் பெயர் சுந்தர சாஸ்திரி. அவர் வழக்குரைஞர் தொழில் நடத்தியவர். சுந்தர சாஸ்திரியின் மனைவியாரின் பெயர் சுப்புலட்சுமி அம்மாள். சத்தியமூர்த்திக்கு எட்டு அல்லது ஒன்பது வயது இருந்தபோது சுந்தரசாஸ்திரி இறந்துவிட்டார். தாயாரின் அரவணைப்பில் சத்தியமூர்த்தி புதுக்கோட்டை அரசர் கல்லூரியிலும் சென்னைக் கிறித்தவக் கல்லூரியிலும் சட்டக் கல்லூரியிலும் படித்துப் பட்டங்களைப் பெற்றார்.

சத்தியமூர்த்தி இளம் பருவத்திலேயே அரசியலால் ஈர்க்கப்பட்டார். அவர் பி.ஏ. வகுப்பில் படித்துக்கொண்டிருந்தபோது வங்காளப் பிரிவினையை எதிர்த்து இந்தியா முழுதும் கிளர்ச்சி நடந்தது. அதில் பங்கு கொண்ட தேச பக்தர்களை அந்நியர் ஆட்சி அடக்கு முறையை வீசிக் கொடுமைப்படுத்தியது. மாணவர்கள் அதனை எதிர்த்துக் குரல் கொடுத்தனர். சென்னைக் கல்லூரி மாணவர்கள் சத்தியமூர்த்தி தலைமையில் போராட்டம் நடத்தினார்கள். சத்தியமூர்த்தியின் உணர்ச்சிமிக்க பேச்சுகள் மாணவர்களிடையே நாட்டுப்பற்றுக் கனலை மூட்டியது.

சத்தியமூர்த்தி படித்துப் பட்டம் பெற்ற பின்னர்ச் சென்னை உயர்நீதிமன்றத்தில் ஒரு வழக்குரைஞராகப் பதிவு செய்துகொண்டார். எனினும், அவர் வழக்குரைஞர் தொழிலை நடத்தவில்லை. நாட்டுப்பற்றும் நாட்டின் விடுதலையைப்பற்றிய சிந்தனையும் அவரது வாழ்க்கையை நிர்ணயித்துவிட்டன.

> 'சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான் அவனை
> இகல்வெல்லல் யார்க்கும் அரிது,'

என்றார் திருவள்ளுவர். சத்தியமூர்த்தியின் சொல்வன்மை 1918 ஆம் ஆண்டில் காஞ்சிபுரத்தில் நடந்த காங்கிரசுக் கட்சி மாகாண மாநாட்டில் வெளிப்பட்டது. அம்மாநாட்டில் அப்போது பெருந்தலைவராக விளங்கிய அன்னி பெசண்டு அம்மையார் கலந்துகொண்டார். 'முதல் உலகப்போரில் ஈடுபட்ட ஆங்கில அரசினர் தொல்லைகளுக்கு ஆளாகி உள்ளனர். இந்தியர்கள் அவர்களுடன் எந்தவிதமான பேரமும் பேசாமல் அவர்களுக்கு உதவவேண்டும்,' என்று வற்புறுத்திய ஒரு தீர்மானத்தை அன்னி பெசண்டு அம்மையார் கொண்டுவந்தார். சத்தியமூர்த்தி அந்தத் தீர்மானத்தை எதிர்த்து ஒரு திருத்தத்தை முன்மொழிந்து பேசினார். அந்தப் பேச்சில் கருத்துத்தெளிவும் கவர்ச்சியும் வாதத் திறமையும் இருந்தன. பின்னர், அன்னி பெசண்டு அம்மையாரின் தீர்மானம் தோற்றது. சத்தியமூர்த்தியின் திருத்தத் தீர்மானம் பெரும் வெற்றி

பெற்றது. சத்தியமூர்த்தியின் பேச்சுத் திறமையை அனைவரும் அறிந்தனர்.

அதன் பிறகு, சத்தியமூர்த்தி விடுதலை இயக்கக் கூட்டங்களில் கலந்துகொண்டு பேசினார். அவருடைய அரிய சொற்பொழிவைக் கேட்க மக்கள் பல்லாயிரக்கணக்கில் திரண்டார்கள். சத்திய மூர்த்தி தமிழ், வடமொழி, ஆங்கிலம் ஆகிய மூன்றிலும் சிறந்த பேச்சாளராக விளங்கினார். அவர் அரசியல் துறை மட்டுமன்றி இலக்கியம், கலை, சமயம் போன்ற பிற துறைகளிலும் அழகாகப் பேசும் ஆற்றல் உடையவராக இருந்தார். உணர்ச்சியைத் தூண் டும் விதத்திலும் சிரிப்பூட்டும் வகையிலும் சிந்தனையைக் கிளறும் வண்ணமும் எதிரிகளைத் திகைக்கவைக்கும் முறையிலும் பேசு வதில் அவர் நிகரற்று விளங்கினார். தமிழ்நாட்டில் விடுதலை இயக்கத்தின் கொள்கைகள் பெரும் அளவில் பட்டிதொட்டிகளி லெல்லாம்கூடப் பரவியதற்கு சத்தியமூர்த்தி முதல் காரணம் ஆவார்.

1919ஆம் ஆண்டில் 'பஞ்சாப் படுகொலை'பற்றி விசாரணை நடத்த இங்கிலாந்தில் ஒரு குழுவை ஆங்கில அரசு நியமித்தது. அந்தக் குழுவிடம் சாட்சி சொல்லக் காங்கிரசுக் கட்சி ஒரு குழுவை இங்கிலாந்துக்கு அனுப்பியது. அக்குழுவுக்குச் சத்திய மூர்த்தி தலைவர். அப்போது அவருக்கு வயது முப்பத்திரண்டு தான். அந்த வயதில் அவர் இங்கிலாந்து சென்று பல கூட்டங் களில் சொற்பொழிவுகளை நிகழ்த்தினார். 'சிங்கத்தின் குகைக் குள்ளே சென்று அதன் பிடரியை உலுக்குதல்,' என்ற பழமொழியை நினைவுபடுத்துகிறது சத்தியமூர்த்தியின் ஆற்றல். அவர் பேசிய அழகிய ஆங்கிலத்தைக் கேட்டு ஆங்கிலேயர்களே வியந் தார்கள். ஆங்கில அரசின் அடக்குமுறைக் கொடுமைகளை அறிந் தார்கள். பாராளுமன்ற உறுப்பினர்கள் சத்தியமூர்த்தியைப் பாராட்டிப் பதக்கம் இணைத்த ஒரு தங்கச் சங்கிலியை அவருக்குப் பரிசாக அளித்துப் பெருமை செய்தார்கள். ஆம், ஆங்கிலத்தைத் தாய்மொழியாகக் கொண்டவர்களே தமிழர் சத்தியமூர்த்தியின் ஆங்கிலப் பேச்சைப் பாராட்டினர்.

விடுதலை இயக்கத்தில், தேர்தலில் போட்டியிட்டுச் சட்டமன்றங் களில் நுழைந்து மக்களுக்குப் பணியாற்றவேண்டும் என்று ஒரு பிரிவினரும், தேர்தலில் போட்டியிடவேண்டாம் என்று மற்றொரு பிரிவினரும் கருதியதின் விளைவாக மாறுதல் வேண்டாதோர் கட்சி, சுயராச்சியக் கட்சி என இரு பிரிவுகள் ஏற்பட்டன. சுயராச்சியக் கட்சியின் நிலையை ஆதரித்துச் சத்தியமூர்த்தி பிர சாரம் செய்தார். தமிழ் நாட்டில் தமிழிலும் பிற பகுதிகளில் ஆங்கிலத்திலும் அவர் பேசினார்.

சட்டமன்றத் தேர்தல் வந்தது. சுயராச்சியக் கட்சியின் சார்பில் சத்தியமூர்த்தியும்போட்டியிட்டு.வெற்றிபெற்றுச்சட்டமன்றஉறுப்பினர் ஆனார். சுமார் ஆறு ஆண்டுக்காலம் அவர் சட்டமன்ற உறுப்பினராக இருந்தார். அப்போது ஆங்கில அரசுக்கு ஆதரவான நீதிக் கட்சி சட்டமன்றத்தில் பெரும்பான்மைக் கட்சி. அது மந்திரி சபையை அமைத்திருந்தது. சுயராச்சியக் கட்சி எதிர்க் கட்சியாக இருந்தது. சத்தியமூர்த்தி தமது நாவன்மையால் ஆளுங் கட்சியைப் பலமுறை திணறடித்தார். வினாக்களை எழுப்புவதிலும் எதிரிகளை வேகமாக மடக்குவதிலும் அவரது ஆற்றல் ஈடு இணையற்றதாக விளங்கியது.

அந்தச் சமயம், பாரதியாரின் பாடல்கள் புரட்சியை உண்டாக்கும் என்று கருதி அரசினர் அவருடைய நூல்களைப் பறிமுதல் செய்தார்கள். சத்தியமூர்த்தி அந்தச் செயலை எதிர்த்துச் சட்ட மன்றத்தில் குரல் எழுப்பினார். 'பாரதியாரின் பாடல்கள் அடங்கிய புத்தகங்களை நீங்கள் கைப்பற்றலாம். ஆனால், அவருடைய பாடல்களை மக்களின் உள்ளங்களிலிருந்து உ ங் க ள ா ல் நீக்க இயலாது. தமிழ் உள்ளவரை, தமிழன் உள்ளவரையில் பாரதியாரின் பாடல்கள் நிலைத்துநிற்கும்,' என்று சத்தியமூர்த்தி முழங்கினார்.

டில்லி மத்தியச் சட்டமன்றத்திற்குத் தேர்தல் வந்தபோதும் சத்தியமூர்த்தி ஒரு வேட்பாளராக நின்றார். அவரை எதிர்த்துப் போட்டியிட்டவர் சர் ஏ. இராமசாமி முதலியார். ஆங்கிலம் பேசுவதில் வல்லமையும், மிகுந்த செல்வாக்கும் உடைய அவரைச் சத்தியமூர்த்தி தோற்கடித்தார். மத்தியச் சட்டமன்றத்தில் சத்தியமூர்த்தியின் புகழ் மேலும் பரவியது. துணைக் கேள்விகளை எழுப்பி ஆளுங்கட்சியினரைத் திடுக்கிடவைப்பதில் அவருக்கு இருந்த ஆற்றலைப் பாராட்டாதவர் இலர்.

'காங்கிரஸ் சார்பில் சத்தியமூர்த்தி ஒருவர் மட்டும் சட்ட மன்றத்திற்குப் போனால் போதும்,' என்று காந்தியடிகளே ஒரு முறை வியந்து பாராட்டியிருக்கிறார்.

மீண்டும் சென்னைச் சட்டமன்றத் தேர்தல் வந்தபோது பட்டதாரிகள் தொகுதியில் போட்டியிட்ட சத்தியமூர்த்தி, இராஜாஜிக்காகத் தமது தொகுதியை விட்டுக்கொடுத்தார். எனினும் தேர்தல் வேலைகளில் முழு மனத்துடன் ஈடுபட்டுக் காங்கிரசுக் கட்சிப் பெரும்பான்மைப் பலத்துடன் சட்டமன்றத்திற்குள் நுழையுமாறு செய்தார்.

சென்னை மாநகராட்சித் தேர்தல்களில் சத்தியமூர்த்தி ஆர்வம் காட்டினார். அவரே தேர்தலில் நின்று வெற்றி பெற்றுப் பல ஆண்டுகள் மாநகராட்சி உறுப்பினராக இருந்தார். 1939ஆம் ஆண்டு அவர் சென்னை மாநகராட்சி மேயராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். அவர் மேயர் பதவி வகித்த ஓராண்டுக் காலத்தில் பல அரிய பணிகளைச் செய்தார். சென்னை நகரில் சாலைகளை அகல மாக அமைக்கவும் பூங்காக்களை நிறுவவும் கடற்கரைப் பகுதி களை எழில் மிக்கவையாக ஆக்கவும் அவர் திட்டங்களைத் தீட்டிச் செயற்படுத்தினார். தெருக்களைத் தூய்மையாக வைத்துக்கொள்வ தற்காக ஓர் இயக்கத்தையே அவர் நடத்தினார். தெருக்களை அசுத்தப்படுத்துபவர்களுக்குத் தண்டனை தரவேண்டும் என்ற திட்டத்தைக் கொணர்ந்தவர் அவரே. சென்னை மாநகரத்திற்குக் குடிநீர்த் தட்டுப்பாடு இல்லாமல் கிடைக்கச் செய்வதற்காகச் சென்னைக்கு அருகில் இருக்கும் பூண்டியில் ஓடும் குசஸ்தலை ஆற்றில் அணை கட்ட அவர் அரியதொரு திட்டம் தீட்டினார்; அரசாங்க உதவியைப் பெற்றார். திட்டம் செயற்பட்டது. நீர்த்தேக்கம் உருவாயிற்று. மக்கள் சத்தியமூர்த்தியை வாழ்த்தினார்கள். பூண்டி யில் உள்ள நீர்த்தேக்கத்திற்குச் 'சத்தியமூர்த்தி சாகரம்' என்று பெயரிடப்பட்டது.

சத்தியமூர்த்தி மொழிபெயர்ப்பதில் வல்லவர். காந்தியடிகள், நேருஜி, சித்தரஞ்சன் தாஸ் போன்ற தலைவர்கள் தமிழ்நாட்டுக்கு வந்தால் அவர்களது சொற்பொழிவுகளைச் சத்தியமூர்த்திதாம் மொழிபெயர்ப்பார். மூலப்பேச்சின் கருத்தைச் சிதைக்காமல் மொழிபெயர்ப்பது எளிதன்று. ஆனால், சத்தியமூர்த்தி அக்கலை யில் தேர்ந்தவர்.

ஒருமுறை சித்தரஞ்சன் தாஸ் மதுரைக்கு வந்தார். பெரும் வழக்குரைஞரும் தமிழ்ப் புலவருமான சோமசுந்தர பாரதியார் சித்தரஞ்சனரின் பேச்சை மொழிபெயர்த்தார். சித்தரஞ்சனர் வேகமாகப் பேசினார். பாரதியாரால் அத்துணை வேகமாக மொழி பெயர்க்க இயலவில்லை. அதனை உணர்ந்த சித்தரஞ்சன் தாஸ் சோமசுந்தர பாரதியாரைப் பார்த்து சத்தியமூர்த்தியை அழைக் கத் தாம் விரும்புவதாக மிகவும் மென்மையுடன் கூறினார். பாரதி யார் அதற்கு ஒப்புக்கொண்டார். பின்னர், சத்தியமூர்த்தி மிக அழகாக மொழிபெயர்த்துப் பாரதியார் உட்பட அனைவரின் பாராட்டையும் பெற்றார்.

சத்தியமூர்த்தி சிறந்த கலைஞராகவும் திகழ்ந்தார். அவர் பல தமிழ், வடமொழி, ஆங்கில நாடகங்களில் நடித்திருக்கிறார். பம்மல் சம்பந்த முதலியாரின் சுகுண விலாச சபையில் நடிகராக

வும் நாடகங்களைப் பயிற்றுவிக்கும் இயக்குநராகவும் அவர் பணி யாற்றினர். 'மனோகரா' நாடகத்தில் சத்தியமூர்த்தி பலமுறை மனோகரனாக நடித்திருக்கிறார். 'சாகுந்தலம், மிருச்சகடிகம், மாளவிகாக்கினி மித்திரம், வசந்தசேனை' போன்ற வடமொழி நாடகங்களில் அவர் நகைச்சுவை நடிகராக நடித்துள்ளார்.

சத்தியமூர்த்தி தமிழிசை இயக்கத்தில் ஈடுபாடு கொண்டிருந்தார். தமிழ்ப்பாடல்களை நிறையப் பாடவேண்டும் என்று அவர் வற்புறுத்துவார். இசை, நாடகம் ஆகியவற்றின் முன்னேற்றத்திற்காக அவர் பெரிதும் பாடுபட்டார். 'சென்னை மியூசிக் அகாடமி' எனப்படும் இசை மாமன்றத்தின் துணைத் தலைவராக அவர் பணியாற்றினர்.

தமிழ்நாட்டில் காங்கிரசுக் கட்சியினர் ஆண்டுதோறும் கண்காட்சி நடத்திவந்தனர். அதில் கலைப் பகுதியை நடத்தும் பொறுப்பு சத்தியமூர்த்தியிடம் ஒப்படைக்கப்பட்டது. நாடகம், நடனம், இசை ஆகிய அனைத்தும் சத்தியமூர்த்தியின் பொறுப்பில் கண்காட்சியில் இடம்பெற்றன. 1935ஆம் ஆண்டு காங்கிரஸ் மகாசபையின் பொன்விழா நடந்தது. அதனையொட்டிய கலைவிழாவைச் சத்தியமூர்த்தி மிகவும் சிறப்பாக நடத்தினர். அவர் தென்னிந்தியத் திரைப்பட வர்த்தகக் கழகத்திற்குத் தலைவராக இருந்தும் பணியாற்றினர்.

சத்தியமூர்த்தி விடுதலைப் போராட்டத்தின்போது பலமுறை சிறைசென்றார். உப்புக்கு ஆங்கில அரசு வரி விதித்தபோது காந்தியடிகள் அதனை எதிர்த்து, 'உப்புச் சத்தியாக்கிரகம்' நடத்தினர். தமிழ்நாட்டில் சத்தியமூர்த்தி அப்போராட்டத்தில் தீவிரமாக ஈடுபட்டுச் சிறை சென்றார். தண்டனைக்காலம் முடிந்து விடுதலையானதும் அவர் மீண்டும் சிறையில் அடைக்கப்பட்டார்.

காந்தியடிகள் தனிநபர் சத்தியாக்கிரகம் நடத்தியபோதும் சத்தியமூர்த்தி அதில் கலந்துகொண்டு சிறை புகுந்தார். இறுதியாக, 1942ஆம் ஆண்டில் 'வெள்ளையனே வெளியேறு' இயக்கத்தின்போது சத்தியமூர்த்தி கைது செய்யப்பட்டார். தொடக்கத்தில் வேலூர்ச் சிறையிலும், பின்னர் வடக்கே அமராவதிச் சிறையிலும் அவர் வைக்கப்பட்டார். அமராவதியில் வெயிலின் கொடுமையின் விளைவாக அவரது உடல்நிலை மிகவும் மோசமடைந்தது. ஆங்கில அரசு அவரை விடுதலை செய்தது. எனினும் அவரது உடல்நிலை தேறவில்லை.

சென்னைப் பல்கலைக் கழகத்தின் 'செனட்,' 'சிண்டிகேட்' ஆகியவற்றில் சத்தியமூர்த்தி உறுப்பினராக இருந்து பணியாற்றினர்.

பல்கலைக் கழகம் அவரை நன்றாகப் பயன்படுத்திக் கொண்டது. இசைக்கலைக்காகப் பாடத் திட்டங்களை வகுக்கும் குழுவில் அவர் உறுப்பினரானார். கல்லூரிகளின் நிருவாக முறையில் சில சீர்திருத் தங்கள் செய்ய அமைக்கப்பட்ட குழுவிலும் சத்தியமூர்த்தி இடம் பெற்றார். விளையாட்டு, நூலகம் ஆகியவற்றினை நிருவகிப்பதில் காணப்பட்ட குறைகளைக் கண்டறியும் பொறுப்பு அவரிடம் தரப் பட்டது. அவர் கல்லூரிகளைச் சென்று பார்வையிட்டு நிருவாகம் சீர் பெறச் சில அருமையான அறிவுரைகளை வழங்கினார். அப்போது சென்னைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராக இருந்த டாக்டர் ஏ. இலட்சுமணசுவாமி முதலியார் பல்கலைக் கழக நிருவாகத்திற்குச் சத்தியமூர்த்தி அளித்த ஆலோசனைகளைப் பெரிதும் போற்றினார்.

காந்தியடிகளுக்கு நேருஜி வாரிசாகத் திகழ்ந்தார். அதுபோல சத்தியமூர்த்திக்குக் காமராஜ் வாரிசாக விளங்கினார். தேசியப் பெருந்தலைவர் காமராஜ் உழைப்பால் உயர்ந்தவர்; ஏழைகளுக்கு இரங்கியவர்; எளியவர் துயர் துடைத்தவர்; அரசியல் மேதையாகத் திகழ்ந்தவர்; தியாகத் திருவுருவமாக விளங்கியவர். சத்தியமூர்த்தி யின் உள்ளத்தில் காமராஜும் காமராஜின் உள்ளத்தில் சத்திய மூர்த்தியும் நிலையான இடம்பெற்றனர். சத்தியமூர்த்திக்குச் சீடராக, உற்ற துணைவராக, நண்பராக, சகோதரராக விளங்கி யவர் காமராஜ். வெள்ளைமனம் கொண்ட சத்தியமூர்த்தி அரசியல் சூழ்ச்சிகள்பற்றி அறியாதவர்; அதுபோன்ற சந்தர்ப்பங்களில் காமராஜ் அவருக்கு உறுதுணையாக நின்றார்.

சத்தியமூர்த்தி நூல்களைப் படிப்பதில் பேரார்வம் கொண்டவர். ஏராளமான இலக்கியங்களை அவர் படித்திருந்தார். அவர் சிறந்த கலை உள்ளம் படைத்தவர். 'இசை, நாடகம், நூல்கள், மலர்கள், இயற்கை வளம், குழந்தைகள் முதலியவற்றில் நான் ஈடுபடு வதுபோல் பிறரும் ஈடுபட்டால் கவலையின்றி வாழலாம்,' என்று அவரே ஒருமுறை கூறினார். மக்கள் அனைவரும் துன்பமில்லாமல் மகிழ்ச்சியாக வாழவேண்டும் என்று அவர் விரும்பியவர்.

பெருந்தன்மை, எளிமை, உள்ளத்தில் கரவின்மை, அஞ்சாமை, நினைவாற்றல் முதலிய பண்புகள் நிரம்பிய சத்தியமூர்த்தி ஒரு சிறந்த இலட்சியவாதியாக வாழ்ந்தார். நாடு விடுதலை பெற வேண்டும் என்பதே அந்த இலட்சியம்.

தவற்றைச் சுட்டிக்காட்டவும் அநீதியை எதிர்க்கவும் அவர் அஞ்சியவர் அல்லர். வாய்ச்சொல்லில் மட்டும் வீரராக இல்லா மல் சொன்னதைச் செயற்படுத்தும் கொள்கை கொண்டிருந்தவர் அவர்.

அவருடைய குடும்பமே நாட்டுப்பற்று மிகுந்த குடும்பம். அவருடைய அருமை மகள் இலட்சுமிக்கு அப்போது வயது ஐந்து. விஞ்ஞானப் பெருந்தகை பெ. நா. அப்புசாமியும் மற்றும் சிலரும் சத்தியமூர்த்திக்கு ஒரு விருந்துவைத்தார்கள். அந்த விருந்துக்கு இலட்சுமியும் சென்றிருந்தாள். அங்கிருந்த சோபாக்களில் விலை யுயர்ந்த வெளிநாட்டுத் துணிகள் விரிக்கப்பட்டிருந்தன. அந்நிய நாட்டுத் துணி போடப்பட்டிருந்ததால் அதில் உட்காருவதற்கு இலட்சுமி மறுத்துவிட்டாளாம். சின்னஞ்சிறு வயதில் அத்தகு தேசபக்தியைத் தமது குடும்பத்தினருக்குச் சத்தியமூர்த்தி ஊட்டி யிருந்தார்.

சத்தியமூர்த்தி போன்ற பெரும் தியாகசீலர்களின் தொண்டும் தியாகமுமே இந்தியாவிற்கு விடுதலை பெற்றுத் தந்தன. தாய்த் திருநாட்டின் விடுதலையை அவர் காணவில்லை. மிகுதியான உழைப் பாலும், சிறைவாழ்க்கையாலும் அவரது உடல் நலம் கெட்டது. 1943ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் 28ஆம் தேதி அவர் அமர ரானார்.

சொல்லின் செல்வர், தியாகத்திருவுருவம், கலைக்காவலர், கருணைக்கடல், விடுதலை இயக்கத் தலைவர், சிறந்த செயல்வீரர், ஏழை எளியவர்களுக்காக உழைத்த செம்மல் சத்தியமூர்த்தி இன்று நம்மிடையே இல்லை. அவரைப்போன்றவர்கள் பெற்றுத் தந்த சுதந்தரத்தை நாம் இன்று அனுபவிக்கின்றோம். எவ்வளவு அறப்போர்கள், எவ்வளவு தியாகங்கள், எவ்வளவு வியத்தகு செயல் கள்! இவை அனைத்தின் விளைவாக அல்லவா விடுதலை கிடைத்தது! பெற்ற சுதந்தரத்தைப் பேணிக் காப்பதும் வறுமை நீங்கி வளம் நிறைந்த பாரதத்தை உருவாக்கும் பணியில் பங்கு கொள்வதும் நம் கடமையாகும்.

அமரர் சத்தியமூர்த்திக்கு நாம் செய்யும் கைம்மாறும் அதுவே ஆகும்.

### அருஞ்சொற்பொருள்

பார் - உலகம், நாவன்மை - பேச்சுத்திறமை, அரவணைப்பு - ஆதரவு, கனல் - நெருப்பு, சொலல்வல்லன் - தான் நினைத்த காரி யங்களைப் பிறர் ஏற்கச் செ ல்லுவதில் வல்லவன், இகல் - பகை, ஆற்றல் - திறமை, நிகரற்ற - இணையில்லாமல், எழில் - அழகு, தட்டுப்பாடு - பற்றுக்குறை, பொன்விழா - ஐம்பது ஆண்டு நிறை வைக் குறிக்கும் விழா, சத்தியாக்கிரகம் - உண்மை நெறியை அடிப்படையாகக்கொண்டு நடத்தும் இயக்கம், வாரிசு - வழித் தோன்றல், பேரார்வம் - பெருவிருப்பம், கரவு - வஞ்சகம், கடமை - ஒவ்வொருவருக்கும் உரியன, கைம்மாறு - எதிர் உதவி, சாகரம் - கடல்.

### வினாக்கள்

1. இந்தியாவின் பெருமையைப் பாரதியார் எவ்வாறு விளக்குகின்றார்?
2. சத்தியமூர்த்தியின் பல்வேறு சிறப்புகள் யாவை?
3. சத்தியமூர்த்தியின் சொல்வன்மை எப்போது எவ்வாறு வெளிப்பட்டது?
4. 'சிங்கத்தின் குகைக்குள்ளே சென்று அதன் பிடரியை உலுக்குதல்,' என்னும் பழமொழியை நினைவுபடுத்தும் நிகழ்ச்சி எது?
5. சட்டமன்றத்தில் சத்தியமூர்த்தியின் பணியை விளக்குக.
6. சென்னை மாநகராட்சியின் மேயர் என்ற வகையில் சத்தியமூர்த்தி ஆற்றிய பணிகள் யாவை?
7. பூண்டி நீர்த்தேக்கம்—குறிப்பு எழுதுக.
8. சத்தியமூர்த்தியின் மொழிபெயர்ப்புத் திறனை விளக்கிய நிகழ்ச்சி எது?
9. சத்தியமூர்த்தி சிறந்த கலைஞர் என்பதை ஆசிரியர் எவ்வாறு உணர்த்துகிறார்?
10. சத்தியமூர்த்தியின் தியாகம் ஈடு இணையற்றது—விளக்குக
11. கல்வித் துறையில் சத்தியமூர்த்தி ஆற்றிய பணிகள் யாவை?
12. சத்தியமூர்த்தியின் வாரிசாகத் திகழ்ந்தவர் என்று எவரை, ஏன் கூறுகின்றோம்?
13. சத்தியமூர்த்தியின் மகளின் நாட்டுப்பற்றை எடுத்துக் காட்டிய நிகழ்ச்சி எது?
14. சத்தியமூர்த்தியின் குணநலன்களை விளக்குக.
15. சத்தியமூர்த்திக்கு நாம் செய்யக்கூடிய கைம்மாறு என்ன?

## 7. அறிஞர் பெர்னார்ட் ஷாவின் வியத்தகு வாழ்வு

[டாக்டர் மு. வரதராசனார்]

இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் ஆங்கில மொழி வாயிலாக உலக மக்களுக்கு அறிவை வாரி வழங்கிப் புகழ் பெற்ற அறிஞர்களுள் தலைசிறந்தவர் இருவர்: ஒருவர், ஜார்ஜ் பெர்னார்ட் ஷா; மற்றொருவர், எச். ஜி. வெல்ஸ். இவர்களுள் அறிஞர் ஷா மூத்தவர்; அறிஞர் வெல்ஸ் இளையவர். 'பெர்னார்ட் ஷாவைப் போல எழுத்தாளராய் விளங்கவேண்டும் என்று இளமையில் ஆவல் கொண்டேன்,' என்றும், 'ஷாவின் மூளையைப்போல என் மூளை ஆற்றல் மிக்கது அன்று,' என்றும் எச்.ஜி. வெல்ஸ் தம்

வரலாற்றில் எழுதியுள்ளார். இவ்வாறு வெல்ஸின் மதிப்பையுப பெற்று விளங்கிய ஷா, தொண்ணூற்று நான்காம் வயது வரையில் தம் சிற்றூரில் உடல் நடத்தோடும் அறவுத்தெளிவோடும் வாழ்ந்து வந்தார்; உலகம் சீர்படும் என்று நம்பி இறுதிவரையில் வழி காட்டி வந்தார். அறிஞர் வெல்ஸ், வயதில் இளையவராயினும், நோய்வாய்ப்பட்டு வருந்தி, இலண்டனில் படுக்கையாய்க் கிடந்து, போர்த்தொல்லைகளைக் கண்டு பெருமூச்சு விட்டு, எதிர்கால உலக அமைதியில் நம்பிக்கை குறைந்தவராய்த் தம் எழுபத்தொன்ப தாம் வயதில் உயிர்நீத்தார்.

இரஸ்கின் எனும் ஆங்கில நாட்டு அறிஞரும் நெடுங்காலம் வாழ்ந்தவர்; ஆனால், தம் முதுமையில் உடல் கெட்டு, உள்ளம் உடைந்து, உலகத்திற்காகப் பெருந்துன்பம் உற்று, பித்தர்போல மரணத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். கார்லைல் என்னும் அறிஞரும் தம் இறுதி நாள்களில் நம்பிக்கை குலைந்து பெருந்துயரமே வடிவாய், காண்பவர் கவலைப்படத்தக்கவராய், அல்லல் உழந்தார். இன்னும் அறிஞர் பலர் முதுமையில் இவ் வாறே வருந்தியிருக்கின்றனர். ஆனால், பெர்னார்ட் ஷா, தம் தொண்ணூற்று நான்காம் வயதிலும் தெளிவு குன்றாமல், நாள் தவறாமல் படித்து வந்தார்; உணவு உண்ணச் சென்றபோதும் புத்தகமும் கையுமாய்ச் சென்றார்; நாடகம் எழுதினார்; கடிதங் களுக்குத் தம் கையாலேயே பதில் எழுதினார்; அவற்றைத் தாமே தபால் நிலையத்திற்குக் கொண்டு சென்றார்; தாம் கண்ட வழிகளின் படி உடலை ஓம்பினார்; நாள்தோறும் உடல்நலத்திற்கு உரிய எளிய பயிற்சிகள் செய்தார்; உலகநிலையில் உள்ள சிக்கலைக் குறித்து யாராவது அணுகிக் கேட்டால், அறிவுடையோர் வியக்கத்தக்க முறையில் திட்பமும் நுட்பமும் சுவையும் மிக்க வகையில் விடை கூறினார்; தாம் எழுதிவந்த கொள்கைகளை இறுதிவரையில் விடாமல் நிலைநாட்டி விளக்கிவந்தார்; உரிய கடமைகளை யந்திரம்போலத் தவறாமல் திருத்தமாய்ச் செய்து முடித்தார்; கவலை இல்லாமல் மகிழ்ச்சியோடும் புன்முறுவலோடும் விளங்கி னார்; தள்ளாத வயதிலும் அறிவாற்றல் ஒரு சிறிதும் தளராத வராய் வாழ்ந்துவந்தார். இதற்குக் காரணம் என்ன?

மனிதனுடைய அறிவும் ஆற்றலும் எல்லாம் உடம்பில் உள்ளவை. உடல் நலம் உள்ள வரையில்தான் எவ்வளவு சிறந்த அறிவும் ஆற்றலும் வாழ இயலும். மிகவும் தூய்மையான பசுவின் பாலாய் இருந்தாலும், வைக்கும் கலம் நன்றாய் இருந்தால்தான் கெடாமல் இருக்கும். கலம் தூய்மையற்றதானால், எவ்வளவு சிறந்த பசுவின் பாலும் கெடுவது இயல்பே. அதுபோலவே,

எவ்வளவு உயர்ந்த அறிவாற்றல் இருந்தாலும், உடல் கெட்டால், அந்த உடலோடு சேர்ந்து படிப்படியாக அறிவாற்றலும் அழிய வேண்டுவதுதான்.

அறிஞர் ஷா, உடல் ஓம்புவதில் வல்லவர். இக்காலத்து மருத்துவ முறையும் அவரிடமிருந்து தப்பவில்லை. தம் நாடகத்தில் (Doctor's Dilemma) அவர் மருத்துவர்களின் குறைகளை அம்பலப்படுத்தியுள்ளார்; 'என் பாட்டிக்குத் தெரிந்த பத்திய முறைகளும் இவர்களுக்குத் தெரியவில்லை,' என்றும், 'பச்சிலை மருத்துவனுடைய பழங்கால முறையைவிட இவர்களுடைய விஞ்ஞான முறை முற்போக்கு அடையவில்லை,' என்றும் வழக்கமான போக்கில் எழுதியுள்ளார்; தம் அனுபவத்தால் ஆராய்ந்து, உண்ணும் உணவிலும், பயிலும் பயிற்சியிலும் நல்ல முறைகளைக் கண்டு, தவருமல் கையாண்டுவந்தார்; முதுமையிலும் நாள் தவருமல் நீரில் வைத்துக் கழுவிக் கண்ணைக் காத்துவந்தார்; அதனுல், மங்காத பார்வையும் பெற்றிருந்தார். இவ்வாறு ஒவ்வொரு சிறு பழக்கத்தையும் ஆராய்ந்து, நன்மையைக் கடைப்பிடித்து உடலோம்பியதால், வாழ்நாளில் வளர்ந்த அறிவும் ஆற்றலும் முதுமையிலும் கெடாமல் இருந்துவந்தன. தொண்ணூற்று நான்காம் வயதில் நடப்பதே அருமை. ஆனுல், ஷா, நாள் தவருமல் நடப்பதை உடற்பயிற்சியாகக் கொண்டிருந்தார்; அதனுல் தான் தம் உடம்பில் வீண் சதை இல்லாமல் இயற்கையான நல்ல அமைப்பு இருந்ததாக நம்பினுர்.

தம் தொண்ணூருவது வயதில் இலண்டனில் இருந்த வீட்டில தடுமாறி விழுந்து கால் அடிபட்டுக் கிடந்து, தமக்காக நடைபெற்ற ஒரு சிறப்புக் கூட்டத்திற்குப் போக இயலாமை நேர்ந்த போது அவருடைய பேச்சை ஒலிப்பதிவு செய்து கேட்கவைத்தார்கள். அவர், 'என்னைப்போல ஒருவர் தள்ளாமை உற்றபோது ஏற்படும் ஒரு குறை என்ன என்ருல், தலை தடுமாறுவதற்கு முன்னே கால் தடுமாறுகின்றது. அதனுல், அடிக்கடி கால் தடுக்கி விழ நேர்கிறது. நான் வாரந்தோறும் மிக ஒழுங்காக மூன்று முறை தடுக்கி விழுகிறேன்,' என்று அந்தப் பேச்சில் குறிப்பிட்டார் கால்கள் தடுமாறும் நிலை வந்தும், அறிவு தடுமாருமல், தெளிவாக உணர்ந்து சுவைபடப் பேசும் திறமை ஷாவிடம் விளங்கியிருந்தது. முதுமையால் கைகால்கள் வலிமை இழந்தனவே அல்லாமல், நாடி நரம்புகள் சீர்கெட வில்லை. இத்தகைய தூய உடம்பாய் இருந்ததால், பாடுபட்டு வளர்த்த அறிவாற்றல் கெடாமல் காத்துக்கொள்ள இயன்றது; கவலைக்கு இடங்கொடாமல் முதுமையிலும் மகிழ்ச்சியாய் வாழ இயன்றது.

மற்ருெரு காரணமும் காணவேண்டும்: மனிதனுக்கு அறிவு பரந்து விரிய விரிய, படபடப்பான உணர்ச்சி குறையும்; அமைதி யான ஆற்றல் மிகுதியாகும். அதுவே, பரந்த அறிவுக்கு அறிகுறி.

அறிஞர் ஷாவின் எழுத்துகளைக் கூர்ந்து கற்ருல், வேகமான உணர்ச்சிக்கு இடம் இல்லாமையும் நல்லுணர்வும் தெளிந்த அறிவுமே எங்கும் கமழ்வது காணலாம்.

ஜெர்மனியின் குண்டுகள் இலண்டன் மாநகரைத் துளைத்துக் கொண்டிருந்த காலத்திலும் இலண்டன் தெருக்களில் தனியே திரியும் அஞ்சாமை அவருக்கு இயல்பாய் இருந்தது. ஓர் இரவில் அவர் இருந்த இடத்திற்கு அண்மையில் குண்டு விழுந்து வெடித்த தாம்; அதையும் கண்டாராம்; தம் உயிர் வாழ்வைப்பற்றிச் கவலை கொள்ளவில்லையாம். இளமையில் வறுமையின் நெருக்கடி யில் சிக்குண்டிருந்தபோதும் தம் வாழ்வைப்பற்றிப் பெரிய கவலை கொள்ளவில்லை. அனுபவம் முதிர்ந்த பின்னும், உலக நிகழ்ச்சி களைக் கண்டு மனமுடைந்து தலையை உடைத்துக்கொள்ளவில்லை.

நல்ல உடல், சிறந்த அறிவு, தெளிந்த நம்பிக்கை ஆகிய இம் மூன்றும் ஷாவின்முதுமையில் கண்டு வியக்கத்தக்கவைகளாய் இருந் தன. இவற்ருேடு மற்ருெரு சிறந்த பண்பும் அவரிடம் இருந்தது. வாழ்வைக் குறித்து ஒரு சிறிதும் கவலைப்படாமலும் அஞ்சாமலும் அவர் வாழ்ந்துவந்தார். எல்லா உயிரும் சேர்ந்ததே உயிராற்றல் என்னும் அந்தப் பெருஞ்சத்தி என்று அவர் நம்பியதால், அச்சத்தி ஒரே உடம்பில் நெடுங்காலம் கிடந்து முதுமையில் பயனற்றிருப் பதைவிட அந்த உடம்பை விட்டு மற்ருெரு புதிய உடம்பில் அடுத்தடுத்து வாழ்வு பெறுதல் நல்லதென்று அவர் கருதினுர்; ஆயினும், திரும்பவும் மெதுசெலாவுக்கு (Back to Methuselah) என்னும் நாடகத்தில் மனிதனுக்கு இப்போது உள்ள ஆயுள் போதாது என்றும், மனிதன் சாகும்போது குழந்தைபோலப் போதிய அறிவு பெருத நிலையில் இருந்தே சாகிருன் என்றும், அதனுல், அரசியல் முதலியவற்றில் போதிய முன்னேற்றம் அடை யாமல் இடர்ப்படுகிருன் என்றும் குறித்தார்; முந்நூறு ஆண்டுகள் வாழும் மக்கள், எதிர்காலத்தில் இருப்பார்கள் என்றும், 'ஆயிரக் கணக்கான ஆண்டுகள் வாழும் வாழ்வும் கிட்டும் என்றும் அந்த நாடகத்தில் புலப்படுத்தினுர். ஆனுல், அவர் தம் ஆயுளைப்பற்றிச் சிறிதும் கவலை கொள்ளவில்லை. வெளியூருக்குச் சென்று மேற் கொண்ட வேலையை முடித்தவர் அடுத்த வண்டியை எதிர்பார்த் திருப்பதுபோல அவர் கவலையற்றவராய் இருந்தார்.

வாழ்வைப் பற்றிக் கவலை கொள்ளாததுபோலவே தம் நூல்கள் நெடுங்காலம் நிலைபெறவேண்டும் என்பதுபற்றியும் அவர் கவலை

கொள்ளவில்லை; அதற்கு மாருக, இளமையில் எழுதிய நூல்கள் இன்னும் பயன்படக்கூடிய முறையில் உலகம் திருந்தாமல் இருக்கின்றதே என்றுதான் கவலைகொண்டார். 'என் வயதில் என்னுல் செய்ய முடிந்த அளவும் செய்துகொண்டிருக்கின்றேன். என் ஆற்றலும் குறைந்துவருகின்றது. நான் சீர்திருத்தத் துறையில் அளவு கடந்து செல்வதைக் கண்டவர்கள் என் ஆற்றல் குறைவதைக் கண்டு மகிழ்ச்சியும் கொள்ளலாம். ஆனுல், நான் நம்பிக்கையோடு எதிர்பார்ப்பது வேறு; இனி வரும் இளைஞர்கள் இன்னும் பொருத்தமானவைகளையும் சிறப்பானவைகளையும் எழுதி விரைவில் என் நூல்களைப் பின்னுக்குத் தள்ளுவார்கள் என நம்புகிறேன்,' என்று 'திரும்பவும் மெதுசெலாவுக்கு' என்னும் நாடகத்தின் முகவுரையிலும், 'இந்த நாடகம் ஒரு சிறிதும் நடிக்க இயலாதவாறும், நடித்தாலும் பொருள் விளங்க இயலாதவாறும் உலகம் திருந்தியமையும் நல்ல காலம் வரவேண்டும் என்று மனமார விரும்புகின்றேன்,' என்று மனைவியிழந்தவரின் வீடுகள் (Widowers Houses) என்னும் நாடகத்தின் முகவுரையிலும் எழுதியுள்ளார். தாம் இறந்த பிறகும் தம் நூல்களால் புகழ் நிலைக்கவேண்டும் என்ற ஆசை அவரிடம் அறவே இல்லை.

ஷா, இளமையிலும் இன்பத்தைத் தேடி அலைந்ததில்லை; முதுமையிலும் இன்பத்தை நாடியது இல்லை. 'இன்பமாய் இருக்கின்ருேமா இல்லையா என்று எண்ணிப்பார்க்க ஓய்வு கிடைப்பதுதான் துன்பம். அதற்கு மருந்து, ஓய்வற்ற உழைப்புதான். ஆகவே உழைப்பால் களைப்பு அடைகின்றவர்களே இன்பம் அடைகின்றவர்கள். உழைப்புக் குறைந்தவர்களுக்கு ஓய்வு நாள் (விடுமுறை நாள்) துன்பமாகத் தோன்றும். நரகத்தை விளக்கிக் கூறவேண்டுமானுல், அது எந்நாளும் விடுமுறை நாளாய் இருக்கும் ஓய்வு என்று கூறலாம்,' என்பது அவர் கருத்து. தம் தொண்ணூருப் பிறந்த நாளன்று விடுத்த செய்தியிலும், 'என் வாழ்க்கையில் நான் உற்றவைகளை எல்லாம் நீங்கள் அறிவீர்களானுல் அத்தகைய வாழ்க்கை உங்களுக்கு நேராமல் கடவுள் காப்பாற்ற வேண்டும் என்று வேண்டிக்கொள்வீர்கள். ஆனுல், இன்ப வாழ்க்கை வாழ்வது ஒரு கலை. நீங்கள் விரும்புவதை ஓயாமல் செய்து உழைத்துக் கொண்டு, இன்பமா இல்லையா என்று எண்ணிப்பார்க்க நேரம் இல்லாமல் வாழ்வதே இன்ப வாழ்க்கைக்கு வழியாகும். என் வாழ்நாள் முழுவதும் நான் அப்படியே இருந்துவருகிறேன்.' என்று அறிவித்தார்.

1943ஆம் ஆண்டில் மனைவி இறந்தது முதல் ஷா தனியாக வாழ்ந்து வந்தார்; இலண்டனிலிருந்து முப்பது மைல் தொலைவில் உள்ள அயாட் செயின்ட் லாரென்ஸ் என்னும் சிறு கிரா

மத்தில் உள்ள வீட்டில் தனியாய், உற்றார் உறவினர் இல்லாமல் வாழ்ந்துவந்தார்; கவலை இல்லாமல் தம் வாழ்வைத் தாமே கவனித்துக்கொண்டார். அவருடைய அடுத்த வீட்டார் நெருங்கிப் பழகினர். அவர் மாலை நேரங்களில் அவர்களுடன் கலந்து பேசி மகிழ்ந்தார். ஆனால், அவர்களும் மிகுதியாக ஈடுபட்டு உதவி செய்ய ஷா இடந்தரவில்லை. அவருடைய செயலாளராகிய அம்மையார், இலண்டனில் இருந்தார். எழுதவேண்டிய கடிதங்களை ஷா தம் கையாலேயே எழுதித் தாமே தபால் நிலையத்திற்குக்கொண்டு போய்ப் போட்டுவந்தார்; விரிவாக எழுதவேண்டிய கட்டுரை, அறிக்கை, நாடகம் முதலியவற்றை மட்டும் சுருக்கெழுத்தால் எழுதி, இலண்டனில் இருந்த செயலாளர்க்கு அனுப்பினார்; அவற்றை அந்த் அம்மையார் 'டைப்' அடித்து அனுப்பியபின் ஒருமுறை பார்வையிட்டு அச்சுக்கு அனுப்பினார். முப்பது ஆண்டுகளாக அவ்வம்மையார் ஷாவின் செயலாளராய் இருந்து, இவ்வாறு அவரிடம் தொழில் செய்து வந்தவர். ஆனால், ஒரு கடிதமாவது ஒரு நாடகமாவது நேரில் இருந்து சொல்லக்கேட்டு எழுதும் வாய்ப்பு எப்போதும் இருந்ததில்லையாம். இவ்வளவு ஒழுங்காகத் தம் வாழ்க்கையை அமைத்துக்கொண்டு அந்தச் சிறு கிராமத்தில் முதுமையில் ஷா தனியே கவலையில்லாமல் வாழ்ந்துவந்தார் உலகமெல்லாம் போற்றுமாறு நாடகங்கள் பல எழுதி அறிவுலகத்தைக் கலக்கிவந்த அந்த அறிஞர் வாழ்ந்த அந்தச் சிற்றூரில் ஒரு சினிமாக்கொட்டகையும் இல்லை. வாழ்ந்த வீட்டையும் ஈட்டிய செல்வத்தையும் ஆங்கிலமொழியின் ஆக்கத்திற்காக எழுதிவைத்துவிட்டு, மனைவி மக்கள் உறவினர் முதலான எவர் துணையும் இல்லாமல் அங்கு அமைதியாய் அவர் வாழ்ந்து தொண்டாற்றி வந்தது உலகம் கண்ட வியக்கத்தக்க வாழ்க்கைகளுள் ஒன்று ஆகும்.

### அருஞ்சொற்பொருள்

கலம் - பாத்திரம், தள்ளாமை - ஆற்றலின்மை, அறிகுறி அடையாளம், ஆயுள் - வாழ்நாள்.

### வினாக்கள்

1. அறிஞர் பெர்னார்ட் ஷாவைக் குறித்து எச். ஜி. வெலஸ் தம் வரலாற்றில் குறித்துள்ள செய்தி யாது?
2. முதுமையில் துயரமுற்ற ஆங்கிலநாட்டு அறிஞர் யாவர்?
3. முதுமையிலும் தளராது பெர்னார்ட் ஷா எத்தகைய ஒழுங்கு முறையில் வாழ்ந்து வந்தார்?
4. 'உடல் நலக்குறைவு அறிவு நலத்தை அழிக்கும்.' என்பதனை எடுத்துக்காட்டுத் தந்து விளக்குக.

5. அறிஞர் ஷா தம் உடல் நலத்தை எவ்வாறு ஓம்பி வந்தார்?
6. முதுமையிலும் ஷா மகிழ்ச்சியுடன் வாழ்ந்ததற்குக் காரணங்கள் யாவை?
7. ஷாவின் அஞ்சாமையை அறிவுறுத்தும் நிகழ்ச்சிகளை எழுதுக.
8. ஷாவிடம் அமைந்திருந்த வியக்கத்தக்க பண்புகள் யாவை?
9. ஷாவின் கவலையற்ற வாழ்வுக்கு எடுத்துக்காட்டுத் தருக.
10. உழைப்பின் இன்றியமையாமை குறித்து ஷா அறிவுறுத்துவது யாது?
11. 'அயாட் செயின்ட் லாரென்ஸ்' கிராமத்தில் இறுதி நாளிலே பெர்னர்ட் ஷா வாழ்ந்த முறையை விவரிக்க.
12. இவற்றை அமைத்து வாக்கியங்கள் எழுதுக:
தலைசிறந்தவர், திட்பமும் நுட்பமும், உறுதுணை, வியக்கத்தக்க வாழ்க்கை, வாரி வழங்கி, நிலை நாட்டி, அறிவும் ஆற்றலும், எழுச்சியும் வீழ்ச்சியும்.

## 8. கருணாகரத்தொண்டைமான்

[திரு. மு. இராகவையங்கார்]

கருணாகரத்தொண்டைமானைப்பற்றி முதன்முதலாக நமக்குத் தெரிவித்தவர், சயங்கொண்டார் என்ற புலவர் பெருமானாராவர். யாவரும் அருமை பாராட்டும்படி இவர் இயற்றிய கலிங்கத்துப் பரணி எனும் நூலால், இத்தலைவனது வரலாறுகளுள் சிறந்தவை சில நமக்குத் தெரியவருகின்றன. இவற்றுடன் சாசனங்களினின்று புதியனவாக யான் கண்ட செய்திகளையும் தொகுத்து இப்போது கூறுகின்றேன்.

சோழ ஏகாதிபத்தியத்தை உயர்நிலையில் நிறுவிய அரசர்களுள்ளே, முதற்குலோத்துங்கன் எனப்பட்ட அபயன் என்பானும் ஒருவன் என்பது சரித்திர நூலார் நன்கறிவர். நாற்பத்தெட்டு ஆண்டுகள் (கி.பி. 1070–1118) ஆட்சி புரிந்த இவ்வேந்தன் அடைந்த பெரும்புகழுக்குச் சிறந்த காரணராயிருந்தவர்கள் இவன்கீழமர்ந்த தானைத்தலைவர்களே யாவார்கள். இத்தலைவர்களுளெல்லாம் முதன்மை பெற்றவன், கருணாகரன் என்ற சிற்றரசன். கலிங்கப்போரை நேரிற் சென்று நடத்தித் தன்னரசனை அபயனுக்கு வாகை மாலை சூட்டியவன் இத்தலைவனே. அதனால், ஏவுதற்கருத்தனை அபயனுடன், இயற்றுதற்

கருத்தனுகிய இக்கருணுகரனையும் சயங்கொண்டார் தம் பரணியிலே பின்வருமாறு பெரிதுஞ் சிறப்பித்துப் பாடினர்:

'தண்ணார் மலர்சேர் திரள்தோள் அபயன்
தானே வியசே னைதனக் கடையக்
கண்ணு கியசோ ழனசக் கரமாங்
கருணு கரன்வா ரணமேற் கொளவே.

'காட்டிய வேழ அணிவாரிக்
கலிங்கப் பரணிநங் காவலனைச்
சூட்டிய தோன்றலைப் பாடீரே,
தொண்டையர் வேந்தனைப் பாடீரே!'

இக்கருணுகரன், வண்டை என்ற ஊரின் தலைவனென்பதும். பல்லவ வமிசத்தவனுய்த் தொண்டைமான் என்ற சிறப்புப் பெயர் பெற்றவன் என்பதும், அபயனுக்குச் சேனுதிபத்தியத்துடன் மந்திரத்தலைவனுயும் விளங்கியவன் என்பதும்,

'வண்டை வளம்பதி பாடீரே...
பல்லவர் தோன்றலைப் பாடீரே!'

'வண்டைமன்,
தொண்டை மான்முதல் மந்திர பாலகர்
சூழ்ந்து தன்கழல் சூடி யிருக்கவே,'

என வரும் பரணித்தொடர்களால் அறியலாம். தொண்டை மண்டல சதகநூலார், இவனைத் தொண்டை நாட்டினனெனப் பாடுவர்.

மத்தியகாலத்துச் சோழர் நாளிலே, பல்லவ வேந்தர் தம் பழைய பெருவலி குன்றி, அச்சோழரின்கீழ் அமைச்சராயும் படைத் தலைவராயும் அதிகாரிகளாயும் அமர்ந்தனர்; அதனுடன், தொண்டை நாட்டிலும் சோணுட்டிலும் சிறியவும் பெரியவுமான ஊர்களுக்குத் தலைவராயும் விளங்கினர். அவ்வாறமர்ந்த பல்லவ வமிசத்தவருள் இக்கருணுகரனும் ஒருவன். இவன் முன்னோர் தொண்டை நாடாண்டமைபற்றி, அவர் நாடு ஊர்களையும் செய்திகளையும் புலவர்கள் இவனுக்கும் உரியனவாகச் சிறப்பிப்பாராயினும், உண்மையில் இவன் சோணுட்டவனே. இவனூராகிய வண்டை என்பது இதுவரை கருதப்பட்டது போலத் தொண்டை நாட்டிலுள்ள வண்டலூரன்று; சோழநாட்டில் திருநறையூர்ப் பகுதியிலுள்ள வண்டாழஞ்சேரி என்னும் ஊராகும். இது, முன்னோரான சோழர் காலத்தும் பிரபலம் பெற்றிருந்ததே. இவை யாவும் சாசனங்களால் விளங்குவன.

இவ்வூர்த்தலைவன் கொண்ட கருணாகரன் என்ற பெயர், இராமபிரானது திருநாமங்களுள் ஒன்றாகும். தர்ப்பசயனம் எனப்படும் திருப்புல்லணைத் திருக்கோயிலுள்ளே பள்ளிகொண்டருளிய அப்பெருமானுக்குக் கருணாகரன் என்பது திருநாமம். இது பற்றியே சயங்கொண்டாரும்,

'இலங்கை யெறிந்த கருணா கரன்றன்
இசைவெஞ் சிலையின் வலிகேட்பீர்!
கலிங்க மெறிந்த கருணா கரன்றன்
களப்போர் பாடத் திறமினோ!'

என்னும் தாழிசையுள், இராமபிரானுக்கு அப்பெயர் வழக்கு உண்மையைக் குறிப்பிட்டார். 'இருவரும் கருணாகரப் பெயருடையராயினும், ஒருவன் இலங்கையெறிந்த புகழுடையான். மற்றவன் கலிங்கமெறிந்த புகழுடையான்,' என்பது மேற்குறித்த பாடலின் கருத்தாம்.

இக்கருணாகரத்தொண்டைமான் தேவிக்குப்பெயர் அழகிய மணவாளினி என்பது தெரிகிறது. நம் தொண்டைமானுக்குப் பல்லவராசர் என்ற தமையனார் ஒருவர் உண்டு. இவர் கருணாகரனுடைய உபசேனாதிபதிகளுள் ஒருவரென்பதும், இங்ஙனம் பதவியில் இளையராயினும் உடன் பிறப்பால் மூத்தவரென்பதும் வள்ளன்மையுள்ளவரென்பதும் பரணியால் புலனாகின்றன இவரெல்லாரும் திருமால் பத்திமையிற்சிறந்திருந்தவர்.

இனி, கலிங்கத்துப்பரணியில், கருணாகரன் தன்னரசன் ஏவலாற் கலிங்கத்தின்மீது படையெடுத்துச் சென்று, அந்நாட்டைவென்று அடிப்படுத்தியது பற்றிச் சயங்கொண்டார் கூறும் செய்திகளைச் சாசனங்கட்கு இயைய இங்கே சுருக்கிக் கூறுவேன்:

### கலிங்க வெற்றி

சோணாட்டின் இராசதானியாய் விளங்கிய கங்கைகொண்ட சோழபுரத்தில், முதல் இராசேந்திரன் மகள் வயிற்றுப்பேரனும், வேங்கைநாட்டரசனான சாளுக்கிய இராசராசன் மகனுமாகிய விசயதரன் என்ற அரசிளங்குமரன் ஒருவன் வளர்ந்துவந்தான். அக்காலத்தே சோழ வமிசத்துக்கு நேரான ஆண் சந்ததி இல்லாதிருந்தது. அதனால், அம்மரபுக்கு உரிய புதல்வனாக அவ்விளங்குமரன் எடுத்துக்கொள்ளப்பட்டு, அவன் தாய்ப்பாட்டியான கங்கைகொண்ட சோழன் தேவியால் அருமையோடு பேணப்பட்டு வந்தனன். அக்காலத்து அவனுடைய தாய்மாமனான வீரராசேந்திரன் என்ற சோழன் ஆட்சிபுரியலானான். அரண்மனையில் வளர்ந்து வந்த இவ்வரசிளங்குமரன், அறிவு, ஆற்றல், பெருமை முதலிய

உத்தமக் குணங்கள் பெருகி, 'ஓர் அவதாரபுருஷன் இவன்!' என்று கண்டோர் புகழும்படி விளங்கித் தக்க பிராயமும் அடைந்தனன்.

அப்போது வடநாட்டிலுள்ள சக்கரக்கோட்டத்துத் தாராவர்ஷன் என்ற பகையரசனை அடக்கி வருவதற்கு அந்நாட்டின்மேற் படையெடுத்துச் செல்லவேண்டிய வாய்ப்பொன்று இளைஞனை விசயதரனுக்கு நேர்ந்தது. இவன் அக்காரியத்தின்மேல் மூண்டு வடநாடு சென்றிருந்த காலத்தே தாய்மாமனை வீரராசேந்திரன் எதிர்பாராதபடி இராசதானி நகரில் தேகவியோகமாயினன். ஆகவும், சோழ சிங்காதனத்துரிமைபற்றி அங்கிருந்த அரச வமிசத்தினருள் விவாதமுண்டாகியது. அதனால், நாடெங்கும் கலகமும் குழப்பமும் விளைந்தன. தன் மாமன் திடீரென இறந்ததையும், சோணாடு அராசகமானதையும் வடக்கே சென்று வெற்றி பெற்ற விசயதரன் கேள்வியுற்றதும், அதிவேகமாய் அங்குநின்றுந் திரும்பிச் சோணாடடைந்து, கலகத்தையடக்கி, நாட்டில் முன்போல அமைதியை உண்டாக்கியதோடு, தௌகித்திரனாய்ப் புகுந்த தன்னுரிமைப்படி, சோழ சிங்காதனத்தில் வீற்றிருந்து நாடு மகிழ ஆட்சிபுரிந்தும் வந்தனன். அக்காலத்து விசயதரனுக்கு இராசேந்திரன், குலோத்துங்கன், அபயன் முதலிய பெயர்கள் வழங்கலாயின. இவ்விசயதரனது ஆட்சிக்காலத்தே, இவனது பெருவலிமைக் காற்றாது பகையரசரெல்லாம் அடங்கியொடுங்கி இவனுக்குத் திறை செலுத்தி வந்தனர்.

இங்ஙனம் நிகழ, ஒருகால் விசயதரன் காவிரிக்கரையில் வேட்டையாடிவந்தபோது அங்குநின்று தொண்டை நாட்டுப் பாலாற்றங்கரையில் பரிவேட்டையாடி வர விரும்பித் தன் பெரும்பரிவாரங்களுடன் கோலாகலமாய்ப் புறப்பட்டான். அப்பயணத்தில் அவன் முதலிற்சிதம்பரம் சென்று தங்கி, ஆங்குச் சிவபிரானைத் தரிசித்துக் கொண்டு, அங்குநின்றுந் திருவதிகை சென்று, பின் கச்சிப்பதியை அடைந்தனன். ஒருநாள், அக்கச்சி மாநகர் அரண்மனையின் தென்மேற்கு மூலையில் அமைந்த சித்திரமண்டபத்திலே தன் பரிவாரங்கள் சூழ எல்லா அரச வைபவங்களுடனும் அபயன் சிங்காதனத்தில் வீற்றிருந்தான்.

அப்போது அரசரெல்லாம் தத்தம் திறைகளைக்கொணர்ந்து அவனடியில் வைத்து வணங்கிநின்றார்கள். அவற்றை ஏற்றுக் கொண்டு அவ்வவர்க்குரிய அருளைச் செய்த பின்னர், அவ்வேந்தர் வேந்தன், 'இவர்களையொழியத் தம் கடமைகளைச் செலுத்தாதொழிந்த வேறு அரசரும் உளரோ?' என்று தன் கருமத்தலைவனை திருமந்திரவோலை நாயகனை உசாவினன். அவன் அரசனைப் பணிந்து. 'பெருமானே! தத்தம் திறைகளுடன் வந்து ஏனை

வேந்தரெல்லாம் நின்கழல் வணங்கினராயினும், கலிங்க தேசாதிபதியான அனந்தவன்மன் என்பான் மட்டும் உரிய திறையோடும் இரு முறையாக வந்திலன்,' என்றான்.

இது கேட்டதும், வேந்தர் பெருமான் முகத்தில் புன்முறுவல் அரும்பியதேயன்றிச் சிறிதும் கோபக்குறி தோன்றியதில்லை. 'இதன் பொருள் என்னையோ! இனி நிகழ்வது யாதோ!' என்று உளங்குலைந்து நடுங்கலாயினர், வந்து நின்ற ஏனை மன்னவர். அப்போது, சோழன் தன் தானைத்தலைவரை நோக்கி, 'கலிங்கர் பதி, படை வலியற்றவனாயினும், அவனது குன்றரண் பெரு வலிமை கொண்டது; அதனால் நம் யானைப்படையுடன் நீவிர் சென்று அம்மலையரணை இடித்துக் கலிங்கனையும் பிடித்து வருதிர்.' என்று கட்டளையிட்டனன்.

இவ்வாறு தன்னரசன் ஆணையெழுந்ததும், தலைமைச்சேனாதிபதியும் பல்லவ குல திலகனுமாகிய கருணாகரத்தொண்டைமான் எழுந்து அடி வணங்கி, 'வேந்தர் வேந்தே! யானே படையெடுத்துச் சென்று ஏழு கலிங்கங்களையும் அழித்து, வெற்றியுடன் வருவல்!' என்று கூறினன். இங்ஙனங் கூறியவன், விரைந்து பகையழிக்கும் விருப்புடன் அரசன்பால் விடை கேட்க, அவனும், 'அங்ஙனமே செய்க!' என்று ஆணையளித்தான். அப்போதே, சேனாதிபதியின் கட்டளையால் நாற்பெரும்படைகளும் பல்லியங்களார்ப்பப் போர்க் கோலம் பூண்டு யுத்த யாத்திரைக்குச் சித்தமாயின.

தலைமைச்சேனாதிபதி கருணாகரனும், உபசேனாதிபதிகளான பல்லவராசர், வாணகோவரையன், முடி கொண்ட சோழன் என்பாரும் தத்தம் மத்த யானைகளின்மேல் ஆரோகணித்தனர். இங்ஙனம் படைகளும் படைத்தலைவர்களும் யாத்திரை புறப்பட்டு இரவும் பகலும் வழிக்கொண்டு, இரை வேட்டெழுந்த புலிகள் போல இகலின்மேற்சென்றனர். அப்பெரும்படை, பாலாறு, குசைத்தலை, முகரி, கொல்லி, பெண்ணை, வயலாறு, மண்ணாறு, குண்டியாறு, பேராறு, கோதாவிரி, கம்பை, சந்தநதி, கோதமை என்ற நதிகளைக் கடந்து, உகாந்தக்கடல் கொதித்து வருவதுபோலக் கலிங்க தேசத்தினுட்புகுந்தது. அது, தன் வருகையை அறிவிக்க வேண்டி நாடெங்கும் தீக்கொளுவிச் சூறையாடியது.

அந்நாட்டார் சோழச் சேனைகளின் கொடுமைக்காற்றாது ஓடி, அத்தாணி மண்டபத்தில் அமைச்சருடனிருந்த தம் அரசனிடம் சென்று, 'எடுத்து வரும் படைகள் சோழன் நம்மேல் விடுத்தன வாகும்!' என்று நடுங்கித் தெரிவித்தனர். கலிங்கர் பதி அதனைக் கேட்டு, 'திறை கொடுக்க நான் மறுத்தமைக்காகச் சோழன்

தன் படையை ஏவினன் போலும்! வலியனான அபயனுக்கன்றி, அவன் விடுத்த சேனைக்கும் நான் எளியனோ? காட்டரண், மலையரண், கடலரண் என்னும் மூவகை அரணுமுடையது நம் கலிங்க தேசம் என்பதை அச்சோழன் அறியான்! அவன் சேனையை எதிர்த்தழிப்பேன்!' என்று வீராவேசத்துடன் தன் மந்திரிகளிடங்கூறினன்.

கூறவும், அவனமைச்சருள் ஒருவனான எங்கராயன் என்பவன் எழுந்து, 'அரசே! நீர் சினந்தாலும், உறுதி கூறுதொழிதல் என் போன்றவர் கடமையன்று; ஆதலால், யான் சொல்வன சில உண்டு,' என்று கூறிவிட்டு, 'பாண்டியர் ஐவரை அவர் நாட்டிலும், சேரரைச் சாலை விழிஞங்களிலும், வத்தவனைச் சக்கரக் கோட்டத்தும், சாளுக்கியரை நவிலை, அளத்தி என்ற நகர்களிலும், இன்னும் வேந்தர் பலரைப் பல்லிடங்களிலும் அவ்வபயன் வென்றடிப்படுத்தியதெல்லாம், தான் நேரிற்சென்றன்றி, தன் வலிய கடல் போன்ற தண்டைக்கொண்டேயன்றோ? அவ்வாறே இப்போதும் சக்கரவர்த்தியான அவனது சக்கரமாயுள்ள கருணாகரனைத் தலைமையாகக்கொண்டு, அவன் சேனை நம்மைத் தாக்க வருகின்றது. இப்போது என்னை நீர் முனியக்கூடுமாயினும், அவன் சேனைமுன் நீர் நிற்கும்போது, யான் கூறியதன் உண்மையை உணர்வீர்,' என்று கூறினன்.

இவற்றைக் கேட்ட கலிங்கவரசன், இவ்வார்த்தைகளைப் பொறுது, தன் அமைச்சனைப் பலவாறு கடிந்து, தன் படைகட்கு முன் எதுவும் எதிர்நிற்குந் தரத்ததன்று என்று கூறிவிட்டு, படையெடுத்து வரும் சோழன் சேனையை எதிர்த்து அழிக்கும்படி தன் படைத்தலைவர்க்குக் கட்டளையிட்டான். உடனே யானை தேர் பரி காலாள்கள் என்ற நால்வகைக் கலிங்கச்சேனைகளும் சோழன் பெரும்படையைத் தாக்கலாயின. பெரும்போர் மூண்டது.

இருதிறத்து வீரர்களும் அரிய பெரிய வீரச்செயல்காட்டிப் போர் புரிந்துவந்தனர். இரு சேனைகளும் ஒத்த பலமுடையனவாய்ப் பொருதுவரும்பொழுது, சோழ சேனாதிபதி கருணாகரன் மதகளிற்றின் மேற்கொண்டு நேராகவே போர் முகத்துள் நுழைந்தான். அவன் களத்துட்புகுந்தது முதலே, சோழன் படைகள் உற்சாகமிகுந்து கலிங்கச் சேனைகளைச் சின்னபின்னம் செய்யலாயின. அதனால், அப்பகைச்சேனை முழுதுமே எதிர்த்து நிற்கும் வலியற்றுத் தோற்றோடியது. எண்ணிறந்த களிறுகளுடன் குதிரை, தேர், ஒட்டகம் நிதித்திரள், மகளிர் குழு முதலிய கலிங்கர் செல்வம் எல்லாவற்றையும் சோழச் சேனைகள் கைப்பற்றிக்கொண்டன. தோல்வியுற்ற கலிங்கர் பதி, அப்போரினிடையே ஓடியொளிந்தனன்.

இவ்வாறு தன் சேனை பெருவெற்றி பெற்ற பின்பு, கலிங்க வேந்தன் ஓடிப்பதுங்கிய இடத்தையும் சோழச் சேனாதிபதி ஒற்றர் மூலம் தேடலானான். அவ்வேந்தன் தன் பெரும்பலத்துடன் மலையரணொன்றைப் பற்றியுள்ளான் என்ற செய்தி ஒற்றரால் அவனுக்குத் தெரியவந்தது. உடனே அவ்வரணைக் கருணாகரனுடைய சேனைகள் அத்தமனத்துள் வளைத்துக்கொண்டு தாக்கலாயின. ஆங்கிருந்த கலிங்கப்படைகளும் சோழன் சேனையால் பெரும்பாலும் அழிக்கப்பட்டொழிந்தன. எஞ்சி நின்ற ஒரு சிலர். மூலைக்கொருவராய் ஓடியொளிந்தனர். இங்ஙனமாக,

'கடற்கலிங்க மெறிந்துசயத் தம்பம் நாட்டிக்
கடகரியும் வயமாவுந் தனமுங் கொண்டு
சுடர்க்கதிர்வா ளபயனடி யருளி னேடுஞ்
சூடினான் வண்டையர்கோன் தொண்டை மானே.'

இவ்வளவே, கலிங்கப்போரைப்பற்றிய வரலாறுகளாகப் பரணியாலும் பிறவற்றாலும் அறியப்பட்டவை. இச்செய்திகளை அடிப்படையாகக் கொண்டு, வனதேவதையாகிய துர்க்கைக்குப் பரணி நாளில் கூழும் துணங்கைக்கூத்துங் கொடுத்து வழிபடுவதொரு பழைய வழக்குப்பற்றி, சயங்கொண்டார் தம் பரணி நூலுள் பலபடப்புனைந்து பாடுகின்றார். கடவுள் வாழ்த்து, கடை திறப்புரைத்தல் முதல் அடுகளம் வேட்டல் இறுதியாகப் பல அதிகாரங்களை வகுத்துக்கொண்டு, பேய்கள் கூற்றாகவும் தேவி கூற்றாகவும் சோழரது பரம்பரைச் செய்திகளையும் அபயனது பிறப்பு, வளர்ப்பு, வீரம் முதலியவற்றையும் புனைந்துரைவகையால் இப்புலவர்பிரான் பாடும் அழகு, வியப்பும் உவப்பும் ஊட்டக்கூடியது. இப்பரணி நூல், சோழனுக்குரியதாயினும், இதனிற்கண்ட புகழ்ச்சிகளிலே கருணாகரத் தொண்டைமானுக்குரிய பகுதியும் அரசனையடுத்ததென்றே சொல்லலாம். அதனாலேதான்,

'காட்டிய வேழ அணிவாரிக்
கலிங்கப் பரணிநங் காவலனைச்
சூட்டிய தோன்றலைப் பாடீரே!
தொண்டையர் வேந்தனைப் பாடீரே!'

என்றும் பிறவாறும் இத்தொண்டைமானைத் தம் நூலுட்சிறப்பிக்கலாயினர் சயங்கொண்டார்.

அருஞ்சொற்பொருள்

**சாசனங்கள்** - அரசாணை முதலியவற்றைக் குறிக்கும் கல்வெட்டு செப்புப்பட்டயம் முதலியவை, **ஏகாதிபத்தியம்** - தனியரசாட்சி, **தானை** - படை, **வாகை மாலை சூட்டியவன்** - வெற்றி தேடித்

தந்தவன் (வாகை மாலை - வெற்றி மாலை), ஏவுதற்கருத்தா - கட்டளையிடும் தலைவன், இயற்றுதற்கருத்தா - தொழில் புரிபவன், பரணி - அரசனுடைய போர் வெற்றியைச் சிறப்பித்துப்பாடும் பிரபந்தம், சோழன சக்கரம் - சோழனுடைய ஆணைச்சக்கரம், வாரணம் - யானை, வேழவணி - யானைப்படை, வாரி - கடல், மந்திரத்தலைவன் - அமைச்சர் குழுத்தலைவன், இராசதானி - தலை நகரம், தேக வியோகமாயினன் - இறந்தனன், அராசகம் - அரச னில்லாமையால் விளையும் கேடு, தௌகித்திரன் - மகளுக்கு மகன், பரிவாரம் - அமைச்சர் சேனாதிபதியர் முதலியோர், திறை - கடமை (அரசருக்குச் செலுத்தும் கப்பம்), திருமந்திரவோலை நாயகம் - அரசவை எழுத்தாளர் தலைவன், பதி - தலைவன் (அரசன்), வருவல் - வருவேன், பல்லியங்கள் - பல வகை இசைக்கருவிகள், ஆரோகணித்தனர் - ஏறினர், இகல் - போர், உகாந்தக்கடல் - யுகமுடிவு காலத்து மேலெழும் கடல் வெள்ளம், சூறையாடியது - கொள்ளையடித்தது, அத்தாணி மண்டபம் - அரசன் கொலு மண்டபம், சாலை - காந்தளூர்ச்சாலை, தண்டு - சேனை, பரி - குதிரை, சயத்தம்பம் - வெற்றித்தூண், கடகரி - மதயானை, வயமா - வெற்றியடைந்த குதிரை, தோன்றல் - சிறந்த ஆண் மகன்.

## வினாக்கள்

1. கருணாகரத்தொண்டைமான் வரலாற்றை அறிவிக்கும் சான்றுகள் யாவை?
2. கருணாகரத்தொண்டைமானின் நாடும் ஊரும் பற்றிக் கட்டுரை ஆசிரியர் உரைக்கும் செய்திகள் யாவை?
3. விசயதரனுக்கு வழங்கிய வேறு பெயர்கள் யாவை?
4. விசயதரன் சோழ மன்னனான வரலாற்றை விளக்குக.
5. கருணாகரன் கலிங்க நாட்டின்மேல் படையெடுத்துச் செல்லக் காரணம் யாது?
6. சோழர் படையெடுப்பைப்பற்றிக் கேட்ட கலிங்க மன்னன் கூறியது யாது?
7. அனந்தவன்மனுக்கு எங்கராயன் கூறிய அறிவுரை யாது?
8. சோழர் படையும் கலிங்கர் படையும் செய்த போர் நிகழ்ச்சிகளை விளக்குக.
9. கலிங்கப்போரைச் சயங்கொண்டார் எங்ஙனம் சிறப்பித்துப் பாடியுள்ளார்?
10. குறிப்பு எழுதுக:

    கருணாகரன், அழகிய மணவாளினி, வீரராசேந்திரன், கச்சிப்பதி, திருமந்திரவோலை நாயகம்.

## 9. தனிச் சிறப்போடு விளங்கும் தாஜ்மகால்

**[திரு. வி. கணபதி]**

உலகில் மக்கள் அனைவரும் அழகு நிறைந்த பொருளைக் கண்டால் தம் உள்ளத்தைப் பறிகொடுத்து நிற்பர். அவ்வாறு உள்ளம் கவரும் எழில்மிக்கனவாக இயற்கைக் காட்சிகளையும் செயற்கைப் பொருள்களையும் குறிப்பிடலாம். ஓங்கியுயர்ந்து நிற்கும் பனி மூடிய மலைகள், வானுற வளர்ந்த மரங்களடர்ந்த காடுகள், கரும்பாறைகள் நிறைந்த மலைகள், அவற்றிடையே உருக்கி வார்த்த வெள்ளிக் கம்பிகளென வீழும் பேரருவிகள், கொத்துக் கொத்தாக வண்ணமலர்களைத் தாங்கி நிற்கும் செடிகள், கொடிகள், காய்கனிகள் நிறைந்து விளங்கும் மரங்கள், செவிக்கினிய ஓசையுடன் நீர் நிறைந்து வரும் சிற்றுறுகள், பசும்பயிர்ப் பண்ணைகள், சிப்பிகளும் சங்குகளும் சிதறுண்டு கிடக்கும் பரந்த மணல் வெளிகள், நீலச்சுடர் மணி வானம், மஞ்சள் மிகுந்த செம்பஞ்சுக் குழம்பில் தோய்ந்துவரும் காலைக் கதிரவன், அந்தி வானத்தே அழகுறத் தோன்றும் வளர் மதியம்: இவை அனைத்தும் கண்டவர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் கைபுனைந்தியற்றுக் கவின் பெருவனப்புடைய இயற்கைக் காட்சிகளாம். மதுரை மீனாட்சியம்மன் கோவில், தஞ்சாவூர்ப் பிரகதீசுவரர் கோவில் கோபுரம், மாமல்லபுரத்துச் சிற்பச் செல்வங்கள், கோனாரக் நகரில் அமைந்துள்ள சூரியனார் கோவில், மலைப்பாறைகளைக் குடைந்தமைத்த எல்லோராக்குகைக் கோவில்கள், அஜந்தாக் குகைக் கோவில்களில் தீட்டப்பெற்ற கண்கவர் வண்ண ஓவியங்கள், உதயபுரி அரண்மனை அமைப்பு, டில்லிக் கோட்டைகள், குதுப்மினார் கோபுரம், ஆக்ராவிலுள்ள தாஜ்மகால் போன்றவை அனைத்தும் இந்திய மக்களின் கைவண்ணத்தையும் பண்பாட்டுச் சிறப்பையும் உலகிற்கு உணர்த்திநிற்கும் செயற்கை எழில் நிலையங்களாம். இவைகளிலும் இவைபோன்று இந்தியாவின் பல்வேறு இடங்களிலுமுள்ள கட்டடங்கள், சிற்பங்கள், கோபுரங்கள், கோவில்கள், மசூதிகள் ஆகிய அனைத்திலும் உயர்சிறப்புடையதாக விளங்குவதும், உலக அற்புதங்களில் ஒன்று என்றும் 'சலவைக் கல்லின் கனவு' என்றும் போற்றப்படுவதும் ஆக்ரா நகரில் அமைந்துள்ள தாஜ்மகாலே யாகும்.

எழிலார் கலைக்கோவிலாக விளங்கும் தாஜ்மகாலை முகலாய மன்னர் ஷாஜகான் கட்டினார். ஷாஜகான் அழகுப் பொருள்களை நன்கு போற்றும் கலையுணர்வு மிக்கவர். ஆடம்பரமும் அலங்காரச் சிறப்பும் அவரிடம் மிகுதியுமிருந்தன. பொதுமக்களைச் சந்தித்து

நீதி வழங்கும் 'திவானி ஆம்' என்னும் பொதுக்கூடத்துக்கு வரும்பொழுது அவர் பொன்னுடையணிந்து வந்தார். தலைப்பாகையில் வைரக்கற்கள் பல வரிசைகளில் மின்னின. கழுத்தில் நவமணிகளாலான ஆரங்கள் ஒளி வீசின. அக்கூடத்தில் பொன்னால் இயன்றதும் இடையிடையே பல்வகை மணிகளை இழைத்துச் செய்யப்பெற்றதுமான மயிலாசனத்தில் அமர்ந்து, அவர் நீதி வழங்கினார். அவர் அழகு மிக்க கட்டடங்களைக் கட்டுவதிலும் தோட்டங்களை அமைப்பதிலும் பேரார்வம் கொண்டிருந்தார். டில்லி, இலாகூர், காஷ்மீரிலுள்ள தோட்டங்கள், நீரூற்றுகள், மலர்ச்செடிகள் ஆகியவை அவருடைய அழகுணர்ச்சிக்குச் சான்று பகர்வனவாம். மேலும், செங்கோட்டையிலுள்ள பளிங்குக்கல் மாளிகைகள், டில்லியிலுள்ள ஜும்மா மசூதி, முத்து மசூதி, ஆக்ராக் கோட்டையிலுள்ள அழகான கட்டடங்கள், உலகப் புகழ் பெற்ற தாஜ்மகால் போன்ற அனைத்தும் அவர் ஒரு கட்டடப் பிரியர் என்பதனைத் தெற்றெனக் காட்டுவனவாம். எனவே, இந்தியாவின் வரலாற்றில் ஷாஜகானின் ஆட்சிக்காலம் முகலாய ஆட்சியின் பொற்காலமாகக் கருதப்படுகிறது. இக்காலத்தில் முகலாயக் கட்டடக்கலை வளர்ச்சி உச்சநிலையை எய்தியது.

ஷாஜகான் தம் மனைவி மும்தாஜ் மகாலின்மீது கொண்டிருந்த அன்பின் நினைவுச் சின்னமாகவே தாஜ்மகாலைக் கட்டினார். 'மும்தாஜ் மகால்' என்பதற்கு 'அரண்மனையின் அணிகலன்' என்பது பொருள். மும்தாஜ்மகால் தம் அழகினாலும், தம் கணவர் ஷாஜகானுடன் நடத்திய கருத்தொருமித்த காதல் வாழ்வினாலும், பிற நற்பண்புகளாலும் உண்மையிலேயே அரண்மனையின் அணிகலனாகத் திகழ்ந்தார். அற்றார்க்கும் அலந்தார்க்கும் அன்பு காட்டும் அன்னையாக விளங்கினார். பெரும்பொருளைப் பலருக்கும் நன்கொடையாக வழங்கினார். நல்லியல்புகள் பல பொருந்திய அம்மெல்லியலார் தம் கணவனோடு வாழ்ந்த பத்தொன்பது ஆண்டுகளில் பதினான்கு குழந்தைகளைப் பெற்றெடுத்தார். பதினான்காம் மகப்பேற்றின்போது அவர் இவ்வுலக வாழ்வை நீத்தார். தம் மனைவிமீது அளவற்ற காதல் கொண்டிருந்த ஷாஜகான் மனைவி மறைந்தாலும் மனைவியின் புகழ் மறையாதிருக்கக் கருதிக் கல்லறையின் மீது கட்டடங்களில் மிகச் சிறந்ததாகத்திகழும் தாஜ்மகால் என்னும் கலைக்கோவிலை எழுப்பினார்.

மும்தாஜ்மகால் 1631ஆம் ஆண்டு மறைந்தார். நினைவுச் சின்னமாக அமைக்கக் கருதிய தாஜ்மகாலின் கட்டடவேலை 1632ஆம் ஆண்டு தொடங்கியது. இருபத்தோராண்டுகள் வேலை நடைபெற்று 1653ஆம் ஆண்டு கட்டடம் முழுமை எய்தியது. இக் கட்டடம் முழுமையும் வெண்மையான பளிங்குக் கற்களால்

ஆனது. இதனைக் கட்டி முடிக்க ஆறு கோடி ரூபாய் செலவாயிற்று என்று கூறுவர். அந்நாளில் அத்தொகை மிகப் பெருந்தொகை யாகும். கட்டடம் கட்டுவோர், சிற்பிகள், நவமணிகளைப் பதிப் போர், பணியாளர் என இருபதாயிரம் பேருக்கு மேல் அக்கட்டட வேலையில் ஈடுபட்டனர். வெனிஸ் நகரத்து வெரோனியா என்பவர் இக்கட்டடத்தைத் திட்டமிட்டார் என்ற கருத்து நிலவுகிறது; ஆயினும் பாரசீகரும் இந்தியரும் கூடியே இக்கட்டடத்தைத் திட்ட மிட்டுக் கட்டி முடித்தனர் என்பதில் ஐயமில்லை. உஸ்தாது ஈஸா என்னும் சிற்பி தாஜ்மகால் வேலையை மேற்பார்வையிட்டார். கட்டடவேலையை முஸ்லீம்களும், அழகுபடுத்தும் வேலைகளை இந்துக் களும் செய்து முடித்தனர்.

தாஜ்மகால் யமுனையாற்றின் கரையில் அழகான தோட்டத் தில் அமைந்துள்ளது. இத்தோட்டம் 264 மீட்டர் சதுரமாக உள்ளது. தோட்டத்தின் வடபக்கம் அமைந்துள்ள வாயில் வழி யாக வந்தால், வழி நடுவே அல்லிமலர் நிறைந்த செய்குளங்களும் அவற்றின்கண் நீரூற்றுகளும் உள்ளன. இருமருங்கும் ஒரே சீராக வளர்க்கப்பட்ட மரங்கள் அணிசெய்கின்றன. பாதையைக் கடந்து சென்றதும், 5·4 மீட்டர் உயரமுள்ள ஒரு மேடையைக் காண லாம். இம்மேடை ஏறத்தாழ 94 மீட்டர் சதுரமாகவுள்ளது. இம்மேடை முழுமையும் அதன்மீது ஏறிச்செல்ல அமைந்துள்ள படிகளும் பளிங்குக் கற்களாலேயே கட்டப்பட்டுள்ளன. இம் மேடையின் நான்கு மூலைகளிலும் கலையழகும் சிறந்த அளவான வடிவும் கொண்ட மெல்லிய நான்கு பள்ளிவாயில் தூண்கள் உள்ளன. இம்மேடையின் நடுவேதான் 55·8 மீட்டர் சதுர அளவில் கவின் நிறைந்த கல்லறை மாடம் அமைந்துள்ளது. சதுரத்தின் மூலை ஒவ்வொன்றும் கூர்மையாக இல்லாமல் ஏறத் தாழ 9·9 மீட்டர் பக்கமுள்ளதாக வெட்டப்பட்டுள்ளது. அம் முகப்பு 27·6 மீட்டர் உயரமுள்ளது. இக்கல்லறை மாடத்தின் நடுவில்தான் 17·4 மீட்டர் விட்டமும் 22·2 மீட்டர் உயரமும் உள்ள கவிகை மாடம் அமைந்துள்ளது. இம்மாடத்தின் உச்சி, மேடையிலிருந்து 57·3 மீட்டர் உயரமுள்ளது. இக்கல்லறை மாடத்தின் ஒவ்வொரு கோணத்திலும் இரண்டடுக்கு மாடிக ளுடன் 7·8 மீட்டர் விட்டமுள்ள கவிகை மாடங்கள் உள்ளன. இவையனைத்தும் ஒன்றோடொன்று கூடங்களாலும் வாயில்க ளாலும் இணைக்கப்பட்டுள்ளன.

தாஜ்மகாலின் அழகு எவராலும் சொற்களால் வருணிக்க முடியாததொன்றாகும். முழுமையும் வெண்மையான பளிங்குக் கற்களால் அமைந்துள்ள இக்கட்டடத்தின் உள்ளே ஆங்காங்குச் செதுக்குச் சித்திரங்கள் உள்ளன. சுவர்களில் மகம்மதிய மதத்தி

வரின் திருமறையான 'குர் ஆன்' பொறிக்கப்பட்டுள்ளது. பல இடங்களில் நுண்ணிய பூ வேலைப்பாடுகள் எழில்பெற அமைந்துள்ளன. ஆங்காங்கே விலையுயர்ந்த நவமணிகள் பதிக்கப்பெற்றுள்ளன. பளிங்குக் கற்களையே குடைந்தெடுத்துப் பூ வேலைப்பாடுகளுடன் சாளரங்கள் அமைத்துள்ளமை உயர் சிறப்பினை நல்குகின்றது. உயர்மாடங்களில் அமைந்துள்ள சாளரங்களின் வழியே வரும் ஒளி கட்டடத்தின் உட்புறம் நிலவும் தண்மைக்கேற்றபடி அமைதியூட்டும் நிலையில் உள்ளது. கட்டடத்தின் நடுவே அமைந்துள்ள வியப்புமிகு கவிகை மாடத்தின் நேர் கீழே, நடுவில் மும்தாஜ்மகாலின் கல்லறையும்' அதன் பக்கத்தில் ஷாஜகானின் கல்லறையும் அமைந்துள்ளன. கல்லறையின் அருகே நின்று ஒலியெழுப்பின் அவ்வொலியலைகள் கவிகை மாடத்தில் உள்ள வழவழப்பான பளிங்குக் கற்களின்மீது பட்டுச் சிறிது சிறிதாக மெல்லொலியாக மாறுவதை அங்கு வரும் யாவரும் கேட்டு இன்புறுவர். குழந்தைகள் அனைவரும் மீண்டும் மீண்டும் ஒலியெழுப்பி, எதிரொலி மென்மையாவதைக் கேட்டு மகிழ்வர். பளிங்குக்கல் மாளிகையின் உட்புறம் நிற்கும்பொழுது இன்னதென்று விளக்கவியலாத ஒரு பெருமகிழ்வுணர்வை ஒவ்வொருவரும் பெறுவர்.

தாஜ்மகால் டில்லியிலுள்ள ஹுமாயூன் கல்லறையின் அமைப்பினைப் பின்பற்றியமைந்ததெனக் கூறுவர். ஹுமாயூன் கல்லறை மாடம் எளிமையானதாக, ஆனால் உறுதிமிக்கதாக அமைந்துள்ளது. தாஜ்மகாலோ இன்பம் கனியும் மென்மையையும் விளக்க முடியாத ஒரு பண்பினையும் பெற்றுள்ளது. வாயில் குறுகலானதாகவும் மிக உயர்ந்ததாகவும் இருக்கின்றது. கவிகை மாடம் அதனினும் உயர்ச்சிமிக்கதாக உள்ளது. நான்கு மூலைகளிலும் மேற் செல்லச் செல்லக் குறுகியதாய் அமைந்துள்ள பள்ளிவாயில் தூண்கள், வானுலகத்தை நோக்கி எழும் வெண்மேக நீள்படலம் போன்றமைந்துள்ள தாஜ்மகாலுக்குப் பேரழகு ஊட்டுகின்றன. ஹுமாயூன் கல்லறைமீதுள்ள கவிகை மாடம் உலகின் தரைமீதுள்ளதெனவும் தாஜ்மகாலில் உள்ள கவிகை மாடம் கனவுலகின் மேகங்களிடையே உள்ளதெனவும் கூறும்படியுள்ளது. ஒன்று போரில் சிறந்த, ஆண்மைமிக்க ஆடவர் ஏறு ஒருவருக்காகக் கட்டப்பெற்றது. ஏனையதோ அன்பும் பண்பும் இன்சொலும் மென்மையும் கொண்ட வஞ்சிக்கொடியனைய மெல்லியலார் ஒருத்திக்காகக் கட்டப்பெற்றது. எனவே, இதன் சிறப்பு பல விதங்களிலும் மேலோங்கி நிற்கின்றது.

தாஜ்மகாலை எத்துணை வருணித்தாலும் அதனைக் கேட்போர் அதன் எழிலையோ அமைப்பையோ நன்குணர்ந்து போற்றுவர்

என்று கூற முடியாது. அதன் அழகை உணர நேரில் பார்க்க வேண்டும். ஏனெனில் தாஜ்மகால் அனைத்து நிலைகளிலும் உயர்ந் தோங்கி விளங்குகிறது. அம்மட்டோ? காலைக் கதிரவனின் செம்மையான கதிர்களில் தோய்ந்து வெண்மை கலந்த ஒருவிதச் செம்மை வண்ணம் தோற்றுவித்து நிற்கிறது. மாலைக் காலத்து மஞ்சள் வெயிலிலோ பொன்னிறக்காட்சி நல்கி அழகுடன் மிளிர் கின்றது! தண்ணொளி பரப்பும் திங்கள் ஒளியில் கற்பனையிலும் காணமுடியாத பெருமிதத் தோற்றத்துடன் திகழ்கிறது! உலகில் வேறு எந்தக் கலைப்பொருளையும்விட, எந்தக் கவின்மிகு கட்ட டத்தையும்விடத் தாஜ்மகால் அழகுக்கலையின் உச்ச நிலையில் உள்ளது என்னும் கூற்று உண்மையுரையேயாகும். 'கவின்மிகு பொருளைக் காணல் என்றும் நனிபேரின்பம் நல்குவதாகும்,' என்று ஆங்கிலப் பெருங்கவிஞர் ஜான் கீட்ஸ் கூறியதன் சிறப்பைத் தாஜ்மகாலைக் காணும் ஒவ்வொருவரும் நன்குணர்வர்

இவ்வாறு இயற்கையழகும், செயற்கையழகும் ஒருங்கே பெற்ற புகழ்வாய்ந்த கட்டடம் நம் இந்திய நாட்டில் உள்ளது என்பது நமக்கு மிகுந்த பெருமையளிப்பதொன்றன்றோ?

அருஞ்சொற்பொருள

வானுற - வானைப் பொருந்த, பண்ணை - வயல், கைபுனைந்து இயற்ரு - கைகளால் செய்து இயற்ற முடியாத, கோனாரக் - ஒரிஸா மாநிலத்தில் உள்ளது; 12 சக்கரங்கள் அமைந்த ரதம் போன்ற வடிவில் நுண்ணிய சிற்ப வேலைப்பாடுகள் அமைந்த சூரியனார் கோவில்; 13ஆம் நூற்றுண்டில் இங்குக் கட்டப்பெற்றது. எல்லோரா, அஜந்தா - பம்பாயிலிருந்து $1\frac{1}{2}$ மணி நேரத்தில் விமானத்தில் சென்று சேரக்கூடிய அவுரங்கபாத் அருகே உள்ளவை. எல்லோராவில் பாறைகளைக் குடைந்தமைக்கப்பட்ட குகைக் கோவில்கள் சிறப்பு வாய்ந்தவை. சில கோவில்கள் 2000 ஆண்டுகட்கும் முற்பட்டவை என்பர். கைலாசநாதர் கோவில் குறிப்பிடத்தக்கது. அஜந்தாவில் உள்ள குகைகளின் உட்புறச் சுவர்களில் கண்கவர் வண்ண ஓவியங்கள் பல உள்ளன. உதயபுரி - இராஜஸ்தானில் பசுமை நிறைந்த மலைச்சாரலில் ஏரிகள் நிறைந்த ஊர். ஏரியின் நடுவில் அழகிய அரண்மனைகள், பூங்காக்கள் உள்ளன. டில்லியிலுள்ள கோட்டைகள் - ஷாஜகானல் கட்டப்பட்ட செங்கோட்டை மிகச் சிறப்புடையது. எழிலார் - அழகு பொருந் திய, கவிகை மாடம் - வெங்காய வடிவம் போன்ற கூண்டமைப்பு, நல்குகின்றது - தருகின்றது, தண்மை - குளிர்ச்சி, ஆடவர் ஏறு - ஆண்சிங்கம் போன்றவர், மிளிர்கின்றது - ஒளிவிடு கின்றது.

### வினுக்கள்

1. இந்தியாவின் பண்பாட்டுச் சிறப்பினையும் கலைச் சிறப்பினை யும் உணர்த்தும் சில இடங்களைக் கூறுக.
2. ஷாஜகான் ஆடம்பரப் பிரியர் என்பதனை எவ்வாறு அறிகிறோம்?
3. 'மும்தாஜ்மகால்' என்ற பெயரின் பொருள் யாது? அஃது எவ்வாறு ஷாஜகானின் மனைவிக்குப் பொருந்தும்?
4. தாஜ்மகால் கட்டடத்தின் அழகினை 20 வரிகளில் வருணிக்க.
5. தாஜ்மகாலில் கல்லறை மாடமும் கவிகை மாடமும் எவ்வாறு அமைந்துள்ளன எனக் குறிக்க.
6. ஹுமாயூன் கல்லறை மாடத்தின்வழி அமைந்ததாயினும் தாஜ்மகால் அதனினும் சிறப்புடையது எனல் எவ்வாறு பொருந்தும்?
7. இயற்கையழகும் செயற்கையழகும் ஒருங்கே அமைந்தது தாஜ்மகால் என்பதனை விளக்குக.

## 10. நேத்தாஜி சுபாஷ் சந்திர போஸ்

[திரு. தணிகை உலகநாதன்]

பரமபரை பரம்பரையாய் அடிமைத்தளையில் சிக்கியிருந்த நம் பாரதநாடு தற்போது உரிமைபெற்ற திருநாடாக விளங்குகிறது. தாயின் மணிக்கொடி தகதகவென வான வீதியில் பட்டொளி வீசிப் பறக்கிறது. 'ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே,' என்னும் உரிமைக் கீதம் திக்கெட்டும் முழங்குகிறது. நாம் 'எல்லோரும் ஓர் குலம் எல்லாரும் ஓரினம்,' என்னும் ஒற்றுமை மனப்பான்மை யோடு வாழ்கிறோம். நம் நாடு உரிமை பெறுதற்கும் நாம் இந் நிலையை அடைவதற்கும் பெருந்தொண்டு புரிந்த தேசியப் பெரு மக்களில் நேத்தாஜி சுபாஷ் சந்திர போஸ் அவர்களுக்கு ஒரு சிறப் பிடம் உண்டு. அவர் தொண்டுகள் இந்திய வரலாற்றுப் பொன் னேடுகளில் வைர எழுத்துக்களால் பொறிக்கத்தக்க பெருமை உடையனவாகும்.

வங்காளத்தில் 'இருபத்துநான்கு பர்காணுக்கள்' என்னும் மாவட் டத்தில் கோதாலியா என்னும் சிற்றூர் உண்டு. அச்சிற்றூரில் வாழ்ந்தவர் ஜானகிநாதர் என்பவர். அவர் மனைவியார் பிரபாவதி என்னும் அம்மையார். இருவருக்கும் அருந்தவ மைந்தராய் 1897ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 23ஆம் நாள் கடக் என்னு

மிடத்தில் நம் நேத்தாஜி பிறந்தார். குழந்தைப் பருவத்திலிருந்தே அவர் மதிநுட்பம் மிக்கவராக விளங்கினர்; தெய்வபக்தியும் தேசப் பற்றும் மிக்கவராகத் திகழ்ந்தார்.

நம் சுபாஷ் எப்போதும் எளிமையாகவே இருந்தார்; ஒரு வேளை உணவுதான் உண்டார். இரவில் தரையில்தான் படுத்துக்கொள்வார். ஒருசமயம் அவர்தம் அன்னையார் அவரைக் கட்டிலில் படுத்துக்கொள்ளுமாறு கூறினர்.

அதற்கு அவர், 'அன்னையே, சிவபெருமான் கைலாயத்தில் பாறைமீதுதானே இருக்கிறர்,' என்றர்.

சிறு வயதிலேயே அவர் புராண இதிகாசக் கதைகளைத் தம் அன்னையாரிடம் கேட்டு இன்புற்றர். ஏழைகளுக்குச் செய்யும் உதவியே இறைவனுக்குச் செய்யும் வழிபாடு என்று கருதினர்; உலக ஆடம்பரங்களை அறவே வெறுத்தார். கல்கத்தாவில் சுவாமி விவேகானந்தர் ஆற்றிய சொற்பொழிவுகளைக் கேட்டார். அவரைப் போலவே தமக்கும் ஒரு ஞானகுரு வேண்டுமெனத் தேடி தில்லி, ஆக்ரா, மதுரை, காசி முதலிய இடங்களில் அலைந்தார். மெய்யான குருவைக் காணுமல் வீடு திரும்பினர்.

சுபாஷ் முறையாகக் கல்வி பயின்று எம்.ஏ. படிக்கத் தொடங்கினர். அவர் தந்தையார் அவரை ஐ.சி.எஸ். படிப்புக்காக இங்கிலாந்துக்கு அனுப்பினர். ஆனல், சுபாஷ் நாட்டுப் பணிக்காக அந்தப் படிப்பை உதறித் தள்ளிவிட்டுத் தாயகம் திரும்பினர். சுதந்தர வீரரும் தியாகியுமான சி. ஆர். தாஸுடன் சேர்ந்து விடுதலைப் போரில் ஈடுபட்டார். காந்தியடிகளாரின் எளிய வாழ்க்கையும் உயர்ந்த ஒழுக்கமும் அவர் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. அவரையே தம் அரசியல் குருவாக ஏற்றர். வங்காளத்தில் சத்தியாக்கிரக இயக்கம் தீவிரமாக நடைபெற்றது. சி. ஆர். தாஸ், போஸ் ஆகிய இருவரையும் ஆங்கிலேய அரசு கைது செய்தது. போஸுக்கு ஐந்து மாதம் வெறுங்காவல் தண்டனை கிடைத்தது. தண்டனையைக் கேட்ட அவர் புன்னகை புரிந்தார். 'நான் என்ன கோழித் திருடனு? இவ்வளவு குறைந்த தண்டனை கொடுத்திருக்கிறர்களே?' என்றர். பிற்காலத்தே அன்னை நாட்டின் அடிமைத்தளையை முறிக்க வாழ்க்கையின் பெரும்பகுதியைச் சிறையில் கழிக்கப்போகிறேம் என்பதை அவர் அப்போது உணரவில்லை.

சுபாஷ், 1922ஆம் ஆண்டில் 'இளைஞர் கட்சி' என்னும் ஒரு கட்சியைத் தொடங்கினர். உழவர்களுக்கு உதவி செய்வதும் நாட்டு விடுதலைக்குப் பாடுபடுவதுமே இக்கட்சியின் நோக்கங்க-

ளாகும். உழவர்களுக்கு மரம் வெட்டுதல், குளம், கிணறு தோண்டு தல், வீடு கட்டுதல் ஆகியவற்றில் முழு உரிமை வேண்டுமென்று அவர் ஓயாமல் பேசி வந்தார். தன்னலமற்ற அவரது தூய தொண்டினுல் அவரது புகழ் நாடெங்கும் பரவலாயிற்று.

தொழிலாளர்களுக்கும் உழவர்களுக்கும் தேசிய உணர்ச்சியை ஊட்டிவந்தமையால் அவரை அரசாங்கம் விசாரணையின்றி அலிப் பூர்ச் சிறையில் வைத்தது. சிறையில் அவரது உடல்நலம் குன்றியது. வயிற்றுக் கோளாறும் முதுகு வலியும் ஏற்பட்டன. இவ்வாறு போஸ் நாட்டு விடுதலைக்குத் தம் உடல்நலத்தை முதற்பலியாக்கி ஞர். சில நாள்களில் அவர் உடல்நலம் பெற்ருர்.

1927இல் பாரத நாட்டுக்குக் குடியேற்ற நாட்டு உரிமையுடன் கூடிய சுயாட்சி வழங்குமாறு மோதிலால் நேரு ஓர் அறிக்கை வெளியிட்டார். ஆனுல், நம் போஸ் அதை விரும்பவில்லை. அவர் மைந்தரான ஜவஹர்லால் நேருவுக்கும் அது பிடிக்கவில்லை; முழு உரிமையே வேண்டுமென விரும்பினுர். ஆனுல், மகாத்மா காந்தி நடுத்தரமான ஒரு தீர்ப்பைக் கூறினுர். '1929ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் 31ஆம் நாளுக்குள் ஆங்கில ஆட்சியினர் மோதிலால் நேரு வின் அறிக்கையை ஏற்கத் தவறினுல் முழு சுயராச்சியமே காங்கிரசின் கோரிக்கையாகும்,' என்று அறிக்கை வெளியிட்டார். அதனை நாட்டுத் தலைவர்கள் அனைவரும் ஏற்றனர்.

காந்தியடிகளின் கோரிக்கை ஏற்கப்படவில்லை. மகாத்மா உப்புச் சத்தியாக்கிரகம் தொடங்கினுர். மக்கள் உப்புச் சட்டத்தை மீறிச் சிறை சென்றனர். சிறைகள் எல்லாம் நிரம்பி வழிந்தன. அப்போது நடந்த கிளர்ச்சியின் பலனுகப் போஸ் பலமுறை சிறை சென்ருர். மாண்டலே சிறையில் அவர் முன்போல் முதுகு வலியால் துன்பப்பட்டார்; மருத்துவத்துக்காகச் சுவிட்ஸர் லாந்துக்கு அனுப்பப்பட்டார்.

அங்கு அவர் உடல்நலமுற்ருர். அங்கிருந்து ரோமாபுரி, அயர் லாந்து, இங்கிலாந்து, பிரான்ஸ், ஜெர்மனி முதலிய நாடுகளில் சுற்றுப்பயணம் செய்தார். மூன்று ஆண்டுகள் வெளிநாடுகளில் தங்கியிருந்தார். அவர் தாய் நாட்டுக்குத் திரும்ப அரசு இசைய வில்லை. வெளிநாடுகளிலும் இந்திய விடுதலைப் போரைப்பற்றிச் சொற்பொழிவுகள் புரிந்தார். 1936ஆம் ஆண்டு நடைபெற்ற லக்னோ காங்கிரஸ் பேரவைக் கூட்டத்தில் கலந்துகொள்ள சுபாஷ் புறப்பட்டார். அவர் இந்திய மண்ணில் கால்வைத்ததும் ஆங்கில அரசு அவருக்குப் பதினெட்டுத் திங்கள் சிறைத் தண்டனை அளித்தது.

1935இல் பிரிட்டன் இந்தியாவுக்கு மாகாண சுயாட்சி வழங்கியது. காங்கிரஸ் பொதுத் தேர்தலில் கலந்து ஏழு மாநிலங்களில் வெற்றி பெற்றது. சுபாஷ் விடுதலை ஆனார். 1940இல் நடைபெற்ற திரிபுரா காங்கிரசில் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 'ஆறு திங்களுக்குள் பிரிட்டன் இந்தியாவுக்கு விடுதலை வழங்கவேண்டும். இன்றேல் பிரிட்டனுக்கு எதிராக மக்களைத் திரட்டவேண்டும்,' என்று சுபாஷ் அறிக்கை வெளியிட்டார். அதனைக் காந்தியடிகள் போன்ற பெருந்தலைவர்கள் விரும்பவில்லை. காங்கிரசுக்குள் பிளவை விரும்பாத சுபாஷ் தலைமைப் பதவியிலிருந்து விலகி, 'பார்வர்டு பிளாக்' (முன்னணிக் கட்சி) என்னும் கட்சியை நிறுவினார்; நாடு முழுவதும் சுற்றுப்பயணம் செய்தார்; கட்சிக் கிளைகளை நிறுவினார். அலைச்சல் காரணமாக மீண்டும் அவரது உடல்நலம் குன்றியது.

கல்கத்தாவில் ஹால்வெல் என்னும் ஆங்கிலேயரின் நினைவுச் சிலையை அகற்றவேண்டும் என்னும் ஒரு கிளர்ச்சி நடைபெற்றது. கிளர்ச்சியில் முன்னணியில் நின்ற சுபாஷுக்கு மீண்டும் சிறைத் தண்டனை கிடைத்தது.

சிறையில் அவருக்கு ஒரு சிந்தனை தோன்றியது. அவர் வரலாற்றின் ஏடுகளைப் புரட்டினார். அமெரிக்க ஐக்கிய நாடுகள், பிரிட்டனை எதிர்த்து விடுதலைப் போர் நடத்தியபோது பிரான்ஸ் உதவிபுரிந்தது. சொந்த நாட்டின் சுதந்தரத்தைப் பெறுவதற்கு வெளிநாடுகளின் துணையைப் பெறுவது தவறு அன்று என்பதை உணர்ந்தார். வெளிநாடு செல்வதென்று முடிவு செய்தார். சுபாஷ் சிறையில் ஆறு நாள் பட்டினி கிடந்தார். அரசாங்கம் அவரை விடுதலை செய்தது. உடல் நலம் பெற்ற பின்னர் மீண்டும் அவரைச் சிறைப் படுத்த எண்ணியது. ஆனால், விடுதலை பெற்ற சிறைப் பறவையாகிய நம் சுபாஷ் மாஸ்கோவுக்குச் செல்ல விரும்பினார். ரஹமத் கான், உத்தம் சந்த் முதலிய நண்பர்கள் உதவியால் ஜெர்மனியின் தலைநகரான பெர்லின் சென்றார். அங்கு ஹிட்லரிடம் அளவளாவினார். ஹிட்லர் அவரை இந்தியாவின் பெருந்தலைவர் எனக் கொண்டாடினார். பின்னர் சுபாஷ் இத்தாலிக்குச் சென்றார். அங்கும் அவருக்குச் சிறந்த வரவேற்புக் கிடைத்தது. ஜெர்மனி, இத்தாலி, ஜப்பானுடன் அவர் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டார். ஜெர்மனியில் 4000 வீரர்களைக் கொண்ட சுதந்தர இந்தியப் படையை நிறுவினார்.

சுபாஷ் சென்ற இடமெல்லாம் பட்ட வழித் துன்பங்களுக்கு அளவே இல்லை. கரடுமுரடான மலைப்பாதைகள், கல்லும் முள்ளும் செறிந்த காடுகள், கடும்பனி, தாங்கமுடியாத குளிர் இவற்றையெல்லாம் தாங்கிச் செல்லவேண்டியவரானார்.

இதற்கிடையே இரண்டாம் உலகப்போர் மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. ஜப்பான் சிங்கப்பூரை எளிதாகக் கைப்பற்றியது. தாய்லாந்து, மலேயா, அந்தமான் தீவுகள் எல்லாம் ஜப்பானியர் வசமாயின. பிரிட்டிஷ் வீரர்கள் பின்வாங்கினார்கள். தூரக்கிழக்கில் வாழ்ந்த முப்பது இலட்சம் இந்தியர்களைக் காக்க அவர்களால் முடியவில்லை. அவர்களுக்காகப் போராடிய இந்திய ராணுவத்தைக் கூட அவர்கள் போற்றவில்லை.

அவ்வமயம், ராஷ்பிகாரி கோஷ் என்பவர் இந்திய யுத்தக் கைதிகளைக் கொண்டு முதல் இந்திய ராணுவத்தைக் காப்டன் மோகன் சிங் தலைமையில் நிறுவினார். ஜப்பானில் நிகழ்ந்துகொண்டிருந்த செய்திகளை அறிந்த சுபாஷ் ஜெர்மன் நீர்மூழ்கிக் கப்பலில் தந்திரமாக ஜப்பானை அடைந்தார். டோக்கியோவில் அவருக்குச் சிறந்த வரவேற்புக் கிடைத்தது. அங்கிருந்து சிங்கப்பூர் சென்றார். இந்திய தேசிய ராணுவத் தலைவர்களைச் சந்தித்தார். சுபாஷ் கூறிய போர்த் தந்திரங்களும் நுட்பங்களும் கானகப் போர் முறைகளும் அவர்களுக்குப் பெருவியப்பைத் தந்தன. அவரிடம் அவர்களுக்கு முழு நம்பிக்கை உண்டாயிற்று. மரணத்துக்கு அஞ்சாத மாவீரர்களாக அவர் ஆணையை மேற்கொண்டு நடக்க ஆயத்தமானார்கள்.

1943ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்களில் சுபாஷ் சந்திர போஸ் சுதந்திர இந்திய அரசைச் சிங்கபூரில் அமைத்தார். இந்திய தேசிய ராணுவம் இந்திய எல்லையைக் கடந்து இந்தியாவுக்குள் நுழைந்து பிரிட்டிஷ் அதிகாரவர்க்கத்தை நீக்கவேண்டும் என்பது அவரது திட்டம்.

இந்திய வீரர்களை நோக்கி, 'இறைவன்மீது ஆணை! பாரத நாட்டை விடுவிப்பதற்காக இறுதி மூச்சுவரை போராடுவேன்; என்றைக்கும் பாரதத்தின் ஊழியனாக இருப்பேன்; பாரதத்தின் நலனே என் வாழ்வின் குறிக்கோள். உரிமை பெற்ற பின்னரும் சுதந்தரத்தைக் காக்க என் சேவை தேவைப்படின் என் செந்நீர் இறுதிச் சொட்டையும் அன்னையின் காலடிகளில் ஒப்படைப்பேன்,' என்று சூளுரைத்தார்.

வீரர்களும் அவரைப் பின்பற்றிச் சூளுரை கூறினார்கள். எல்லாரும் தேசிய கீதம் பாடினார்கள். 1943ஆம் ஆண்டு ஜனவரி 7ஆம் நாள் இந்திய தேசிய அரசின் தலைமைச் செயலகம் சிங்கப்பூரிலிருந்து இரங்கூனுக்கு மாற்றப்பட்டது. 26ஆம் நாள் சுபாஷின் ஆணைப்படி இந்திய தேசிய ராணுவம் இந்தியாவை நோக்கிப் புறப்பட்டது. மார்ச்சு 18ஆம் நாள் இந்திய தேசிய ராணுவம் தாய்நாட்டுக்குள் புகுந்தது. அங்கு வீரர்கள், பாரத அன்னையை

எண்ணி, 'அன்னையே நின் அடிமை விலங்குகளை உடைத்தெறிந்து இந்தியரைச் சுதந்தர மக்களாக்கும்வரை உறங்கமாட்டோம். இஃது உறுதி!' எனச் சூளுரைத்தனர். தேசிய ராணுவத்துக்கும் பிரிட்டிஷ் ராணுவத்துக்கும் போர் நடந்தது. பிரிட்டிஷ் இந்தியப் படை பல இடங்களில் தோற்றது. தேசியப் படையினர் மணிபுரி, கோஹிமா முதலிய நகரங்களில் புகுந்தனர். 1944ஆம் ஆண்டில் பிரிட்டிஷ் படையினர் அவற்றை மீட்டுக் கொண்டனர். அப்போது பெய்த அடைமழையே தேசிய ராணுவம் பின்வாங்கியதற்குக் காரணமாகும். 1945ஆம் ஆண்டில் பிரிட்டிஷ் படையினரின் பக்கம் வலுத்தது. ஜப்பானியப் படை பர்மாவிலிருந்து வெளியேறியது. தேசிய ராணுவப்படையின் தலைமைத் தளபதி நேத்தாஜியும் வெளியேறினர். வெளியேறுமுன் அவர் தேசிய வீரர்களுக்குக் கூறிய செய்தி படிக்கப் படிக்க உள்ளம் உருகும்; கண்ணீர் பெருகும்.

'வீரர்களே, ஒளி தோன்றுவதற்கு முன் இருள் அடைகிறது என்பதை நம்புங்கள். பாரதம் விடுதலை பெறுவது உறுதி. மிக விரைவில் விடுதலை அடையும். இறைவன் உங்களை வாழ்த்துவானாக,' என்பதே அச்செய்தியாகும்.

இந்திய தேசிய வீரர்கள் இறுதிவரை போராடினார்கள். அமெரிக்கா ஜப்பான்மீது அணுகுண்டு வீசியது. அதைத் தொடர்ந்து 1945ஆம் ஆண்டு ஆகஸ்டு 15ஆம் நாள் ஜப்பான் நேசநாடுகளிடம் சரணடைந்தது.

சுதந்தர இந்தியத் தற்கால அரசின் தலைவரான நேத்தாஜி 1945 ஆகஸ்டு 16ஆம் நாள் ஜப்பானிய அரசிடம் பேச்சு நடத்துவதற்கு விமானத்தில் சென்றார். 18ஆம் நாள் பிற்பகல் 2 மணிக்குப் பார்மோசாவைச் சேர்ந்த தைஹோக்கு என்னும் விமான நிலையத்தில் அவர் விமான விபத்தில் சிக்கிப் படுகாயமடைந்தார். அவர் ஜப்பானில் உள்ள மருத்துவ நிலையம் ஒன்றில் சேர்க்கப் பட்டார். மருத்துவம் பயனளிக்கவில்லை. வாழ்நாள் எல்லாம் பிறந்த பொன்னாட்டை எண்ணி எண்ணித் தியாகங்கள் பல புரிந்த அப்பெருமகனாரின் பேச்சு அடங்கியது; மூச்சு ஒடுங்கியது; உயிர்ப்பறவைப் பறந்துவிட்டது; வீர விளக்கு அணைந்துவிட்டது; தேசிய மாவீரர் ஒருவரின் கதை முடிந்துவிட்டது. எனினும் நாட்டு மக்களின் உள்ளத்தே அவர் ஏற்றிவைத்த உரிமை விளக்கு என்றும் அணையா விளக்காகக் கொழுந்துவிட்டு ஒளிவீசும் என்பதில் ஐயமில்லை.

### அருஞ்சொற்பொருள்

கோரிக்கை - வேண்டுகோள், சத்தியாக்கிரகம் - அறப்போர், டோக்கியோ - ஜப்பானின் தலைநகரம், ஆயத்தமானார்கள் - சித்தமானார்கள், செந்நீர் - இரத்தம், சூளுரைத்தார் - சபதம் செய்தார்.

### வினாக்கள்

1. சுபாஷ் போஸின் இளமைப் பருவத்தே காணப்பட்ட அருங்குணங்கள் யாவை?
2. இளைஞர் கட்சியின் இலட்சியங்கள் யாவை?
3. சுபாஷ் போஸ் சுதந்தரப் போராட்டத்தில் கலந்து கொண்ட நிகழ்ச்சிகளைத் தொகுத்துப் பதினைந்து வரிகளில் எழுதுக.
4. நேத்தாஜி வெளிநாடு செல்ல விரும்பியது ஏன்?
5. தேசிய ராணுவத்தின் திறமைகளைக் குறித்து நீவிர் அறிவன யாவை?
6. பிரிட்டிஷ் இந்தியப் படையினருக்கும் தேசிய ராணுவப் படையினருக்கும் நடந்த போர் நிகழ்ச்சியை விளக்குக.
7. சுபாஷ் சந்திர போஸ் மறைவைப்பற்றி நீவிர் அறிவன யாவை?
8. நேத்தாஜி சுதந்தரப் போராட்டத்தில் அடைந்த துன்பங்கள் யாவை?

## 11. சித்தரஞ்சன் தாஸ்

[டாக்டர் இரா. குமரவேலன்]

நம் இந்திய நாடு விடுதலை பெற்றுத் தன்மான வாழ்வு நடத்தச் சீரிய தொண்டாற்றியவர்கள் மிகப் பலர். அண்ணல் காந்தியடிகளின் தலைமையில் விடுதலைப் போராட்டம் நாட்டின் பல பாகங்களிலும் செம்மையாக நடைபெற அவர்கள் உதவி புரிந்தனர். ஆங்கிலேயரின் ஆதிக்கம் ஒழிந்தாலொழிய நாட்டு முன்னேற்றம் என்பது முயற்கொம்பு என்பதனை மக்களுக்கு உணர்த்தினர். தமிழ்நாடு தந்த தவப்புதல்வர்கள் சுப்பிரமணிய பாரதியார், வ. உ. சிதம்பரனார், வ. வே. சு. ஐயர், சுப்பிரமணிய சிவா முதலியோரும் லோகமான்ய பால கங்காதர திலகரும் அண்ணல் காந்தியடிகளும் மனிதருள் மாணிக்கம் ஜவஹர்லால் நேருவும் ஆந்திர கேசரி பிரகாசமும் பஞ்சாப் சிங்கம் லாலாலஜபதிராயும் விடுதலைப் பணியில் ஈடுபட்டதுபோல தேசபந்து சித்தரஞ்சன் தாஸும் சீரிய பணியாற்றினர்.

சித்தரஞ்சன் தாஸ் 5-11-1870இல் பிறந்தார். தந்தையார் பெயர் புவனமோகன் தாஸ் என்பது. தொடக்கத்தில் அவர் பவானிப்பூர் இலண்டன் மிஷன் கல்லூரியிலும் கல்கத்தா மாநிலக் கல்லூரியிலும் பயின்றார். பின்னர் இங்கிலாந்து சென்று. 'பாரிஸ்டர்' பட்டம் பெற்றார். தாயகம் திரும்பியவுடன் கல்கத்தா உயர்நீதிமன்றத்தில் வழக்கறிஞராகத் தொழில் நடத்தினர். அவர் தம் அறிவுக் கூர்மையினாலும் கடும் உழைப்பினாலும் பேரும் புகழும் அவரைத் தேடிவந்தன.

தாஸின் நீதிமன்றப் பணி சிறப்பு வாய்ந்தது. பல அரசியல் வழக்குகளை அவர் எடுத்து வாதாடி வெற்றிபெற்றிருக்கிறார் 1917இல் அரவிந்தர்மீது தொடுக்கப்பட்ட அலிப்பூர் சதி வழக்கில் வாதிட்டு வென்றது குறிப்பிடத்தக்கது. அரசினர் தொடுத்த மானிக்தோலா வெடிகுண்டுச் சதி வழக்கிலும் வாதாடி வெற்றி கண்டார். விடுதலைக்குப் போராடிச் சிறைப்பட்ட வீரர்களுக்காக வும் வேறு அரசியல் கைதிகளுக்காகவும் வழக்காடினர்.

நாட்டு விடுதலைக்கு நாளிதழ்கள் வாயிலாகவும் பிற கிழமை. திங்கள் ஏடுகளின் வாயிலாகவும் ஆதரவு திரட்டுவது சாலச் சிறந்தது என்று கருதினர். அதனால், 'வந்தேமாதரம்' முதலான தீவிரவாத இதழ்களுக்குப் பெருமளவில் உதவிபுரிந்தார். 1915இல் 'நாராயணா' என்னும் இதழ் ஒன்று நடத்தினர். இவ்விதழ் வங்காள மொழியில் திங்கள் ஏடாக வெளியிடப்பெற்றது. தாஸ் சிறந்த பேச்சாற்றலுடன் எழுத்தாற்றலும் கைவரப்பெற்றவர் 1895ஆம் ஆண்டில் 'மாலஞ்சா' என்னும் பெயரில் உணர்ச்சி மிக்க வங்காளிக் கவிதைகளைத் தொகுத்து வெளியிட்டார். பின்னர், முதல் உலகப் போரின்போது மேலும் சில தொகுதிகள் வெளியிட்டார். ஆனல், எழுத்தாளராக அவர் ஆற்றிய பணி. 'பார்வர்டு' என்ற ஆங்கில நாளிதழினல் மிகச் சிறப்பாக உணரப்பட்டது. இந்த இதழ் 'சுயராச்சியக் கட்சி'யின் இதழாக விளங்கியது. இவ்வாறு எழுத்துலகப் பணியில் ஈடுபட்ட சித்தரஞ்சன் தாஸ் மக்கள் மனத்தில் விடுதலை உணர்வினை நன்கு விதைத்துக் கனிமரமாக உயரச் செய்தார் தூங்கிக்கிடந்த வீர உணர்வை எழுப்பி மக்களைச் சிங்கமெனச் சிலிர்த்தெழச் செய்தார். பின்னர் நடந்த பல போராட்டங்களுக்கு அவருடைய இந்த அடிப்படைத் தொண்டே எப்போதும் துணைநின்றது எனலாம்.

1921ஆம் ஆண்டில் காந்தியடிகள் ஆங்கிலேய அரசினை எதிர்த்து ஒத்துழையாமை இயக்கத்தினை நடத்தினர். சி. ஆர். தாஸ் இதனை முழுமனத்தோடு ஏற்று ஆதரவு காட்டினர் தேசியத்

தொண்டர் படை இயக்கம் சட்ட விரோதமானது என்று அக்கால அரசு அறிவித்திருந்தபோதிலும் மக்களைத் துணிந்து அதில் சேர வருமாறு அழைப்பு விடுத்தார். அவர் வேண்டுகோளை ஏற்ற மக்கள் அவ்வியக்கத்தில் சேர்ந்தனர். இதனைக் கண்ட அரசு வெகுண்டது. அவ்வாண்டு அகமதாபாத் காங்கிரசு மாநாட்டிற்குத் தலைமை வகிக்கவந்த அவரை முன்னதாகவே கைது செய்தது அரசு. அதனால் 1921ஆம் ஆண்டு அவர் சிறை புக நேர்ந்தது. ஆறு மாதத் தண்டனை விதிக்கப்பட்டது. அவர் மனைவியும் உடன் கைது செய்யப்பட்டார். பின்னர் ஆளுநரின் ஆணையினால் விரைவி லேயே விடுதலை செய்யப்பட்டார்.

இதற்கடுத்த ஆண்டு கயா நகரில் நடந்த காங்கிரசு மாநாட் டிற்கு இவர் தலைமை தாங்கவேண்டியிருந்தது. 1922ஆம் ஆண்டு நடந்த இம்மாநாட்டிற்கு முன்பு நடந்த மாநாட்டில் சட்ட மன்றத்தைப் புறக்கணித்தல்வேண்டும் என்று முடிவு எடுக்கப் பட்டிருந்தது. இது சித்தரஞ்சன் தாஸுக்குப் பிடிக்கவில்லை. காங்கிர சார் சட்டமன்றம் சென்று அதனை நடக்கவொட்டாமல் எதிர்ப்புக் காட்டவேண்டும் என்று கருதினார். ஆனால், இயக்கம் அவர் கருத்தை ஆதரிக்கவில்லை. இதன் காரணமாக 1923ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் முதல்நாள் 'சுயராச்சியக் கட்சி' என்னும் புதிய கட்சியைப் பண்டித மோதிலால் நேருவுடன் சேர்ந்து தொடங்கினார். இக்கட்சி சட்டமன்றத் தேர்தலில் கலந்துகொண் டது. தாஸ் பல தொகுதிகளிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பெற்றார்.

1924ஆம் ஆண்டில் கல்கத்தா நகரத்தின் முதல் மேயர் ஆக விளங்கி அரும்பணி ஆற்றினார். ஆற்றல் வாய்ந்த சி. ஆர். தாஸைத் தன் பக்கம் ஈர்ப்பதற்கு ஆங்கில அரசு பெரிதும் முனைந்தது. அப்போது வங்காளத்தில் கவர்னராகவிருந்த லிட்டன் பிரபு அவரை அழைத்து அமைச்சர் பதவி தருவதாகக் கூறினார். ஆனால், தாஸ் மறுத்துவிட்டார் இவருடைய செல்வாக்கு மேலும் மேலும் சட்டமன்றத்தில் பெருகுவதைக் கண்ட கவர்னர் இரட்டை ஆட்சி யினை நீக்கி எல்லாத் துறைகளிலும் தன்னுடைய நேரடிக் கண் காணிப்பு இருக்கும் வகையில் நிர்வாக மன்ற அங்கத்தினர்களைக் கொண்டு செயலாற்றினார்.

சித்தரஞ்சன் தாஸ் எளிய வாழ்க்கையை மேற்கொண்டார். மக்களிடம் நெருங்கிப் பழகினார். தாம் கல்கத்தா மாநகர மேய ராக இருந்தபோது மக்களுக்குப் பல வசதிகளைச் செய்துதந்தார். எழுத்தாலும் பேச்சாலும் வாதத்தாலும் சுதந்தர வேட்கையினை மக்களிடையே உண்டாக்கினார். எளிதில் மக்களைக் கவரும் மாபெரும் மனிதராக விளங்கினார். தாம் அரிதின் முயன்று ஈட்டிய

செல்வத்தையெல்லாம் மக்கள் அனைவருக்கும் தயங்காமல் செல வழித்தார். அவருடைய உள்ளன்பை கண்டு வங்காளமே அவரைப் பெரிதும் பாராட்டியது. தாம் வாழ்ந்த பெரிய மாளிகையை மக்கள் நலனுக்கே பயன்படவேண்டும் என எழுதிவைத்தார். இத்தகைய நற்பணிகளைக் காலம் முழுவதும் செயற்படுத்திவந்த தனால் நாட்டு மக்கள் அவரைத் 'தேசபந்து'என்று அன்போடு அழைத்தனர்.

கடும் உழைப்பின் காரணமாகச் சித்தரஞ்சன் தாஸின் உடல் நிலை சீர்குலைந்தது. 1925ஆம் ஆண்டு டார்ஜிலிங் சென்றார். ஆனாலும் இயற்கையை எவரால் வெல்ல இயலும்? 16-6-1925 அன்று தேசபந்து மாரடைப்பினால் உலக வாழ்வை நீத்தார்.

தாசின் மறைவிற்குப் பிறகு அவர் பெயரில் நினைவுச் சின்னம் ஒன்று ஏற்படுத்தவேண்டும் என்று கருதினார் காந்தியடிகள். எனவே, பொதுமக்களிடம் நிதி திரட்டினார். மிகக் குறுகிய காலத்தில் ரூ. 10 இலட்சம் நன்கொடையாகச் சேர்ந்தது. அந்தப் பணத்தைக்கொண்டு தாஸினுடைய இல்லத்திலேயே 'சித்தரஞ்சன் சேவா சதனம்' என்ற பெயரில் மகளிர் மருத்துவ மனை ஒன்று நிறுவப்பட்டது.

அவரது பேரும் புகழும் நமது இந்திய நாட்டில் என்றும் நிலவி நிற்கும்.

### அருஞ்சொற்பொருள்

சீரிய பணி - சிறந்த தொண்டு, திங்கள் ஏடு - மாத இதழ், வெகுண்டது - சினம் கொண்டது, சுதந்தர வேட்கை - விடுதலை விருப்பம்.,

### வினாக்கள்

1. பாரதநாட்டு விடுதலைப் போரில் ஈடுபட்ட பெருமக்கள் யாவர்?
2. சித்தரஞ்சன் தாஸின் இளமைப் பருவம்குறித்து எழுதுக.
3. அவர் வழக்கறிஞராக இருந்து ஆற்றிய தொண்டு யாது?
4. தாஸின் பத்திரிகைப் பணிபற்றி விளக்கமாக எழுதுக.
5. சித்தரஞ்சன் தாஸ் சிறை செல்லக் காரணம் யாது?
6. தாஸ் சுயராச்சியக் கட்சியை ஏன் தொடங்கினார்?
7. வங்காள கவர்னர், தாஸ்பற்றி என்ன கருதினார்?
8. சித்தரஞ்சன் தாஸிற்குத் 'தேசபந்து' என்ற பெயர் ஏன் வந்தது?
9. தேசபந்துவின் நினைவாகக் காந்தியடிகள் மேற்கொண்ட நடவடிக்கை யாது?

## 12. டாக்டர் அன்னி பெசண்டு அம்மையார்

[திரு. பூ. ஆலாலசுந்தரனார்]

பாரத நாட்டின் அடிமைத்தளையை நீக்குவதற்குத் தடியடி பட்டும், சிறை சென்றும், தம் உடல் பொருள் ஆவி முதலிய வற்றைக் கொடுத்தும் விடுதலை வாங்கித் தந்த இந்தியத் தலைவர் பலராவர். ஒருவர் தம் நாட்டு விடுதலைக்காகத் தியாகம் செய்தல் இயல்பாகும். ஆனால், ஆங்கிலேயரின் ஆட்சியின்கீழ் அடிமைப் பட்டுக் கிடந்த இந்திய மக்களின் விடுதலைக்காக, ஆங்கில நாட்டி லிருந்து இந்தியாவுக்கு வந்து, இந்தியப் பெண்மணியாக வாழ்ந்து, நம் நாட்டின் முன்னேற்றத்திற்காகக் கல்வித்துறையிலும் சமூகத் துறையிலும் அரசியல் துறையிலும் அயராது உழைத்தவரும் நம் நாட்டிற்கு விடுதலை வாங்கித் தந்த தலைவர்களுள் சிறந்த ஒருவருமாகிய டாக்டர் அன்னி பெசண்டு அம்மையாரின் வாழ்க்கை வரலாற்றினை இந்திய மக்கள் அறிந்துகொள்வது சாலவும் இன்றியமையாததாகும். இனி, அம்மையாரின் வரலாற்றினை நோக்குவோம்.

இலண்டன் மாநகரில் வாழ்ந்த வில்லியம் டி பேஜ் உட் என்ற மருத்துவர் அயர்லாந்து நாட்டு எமிலி என்ற எழில்மிகு நங்கையை வாழ்க்கைத் துணைவியாகப் பெற்று வாழ்ந்துவந்தார். 1847ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் முதல் நாளில் எமிலிக்கு இரண்டாம் குழந்தையாக ஒரு பெண் மகவு பிறந்தது. அம் மகளுக்குப் பெற்றோர் அன்னி எனப் பெயர் வைத்துப் பாராட்டி வளர்த்தனர். அன்னியின் இளமைப் பருவத்திலேயே அவளது தந்தையார் வில்லியம் உட் காசநோயால் பீடிக்கப்பட்டு இறந்த மையால் அன்னியின் குடும்பம் ஏழ்மை நிலை அடைந்தது. பொருட் செல்வமும் அருட்செல்வமும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற திருமதி மரியட் என்ற அம்மையாரிடம் தங்கி அன்னி ஏழாண்டுகள் கல்வி பயின்றார். ஏழை மக்களுக்கு உதவி செய்யவேண்டும் என்ற அன்பு உள்ளம் இளமையிலிருந்தே அன்னியினிடத்து விளங்கியது. தமது இருபதாம் அகவையில் அன்னி பிராங்கு பெசண்டு என்ற பாதிரி யாரைத் திருமணம் செய்துகொண்டார். இவர்களுக்கு ஓர் ஆண் மகவும் பிறகு இரண்டு ஆண்டுகள் கழித்து ஒரு பெண் மகவும் பிறந் தன. எனினும் கணவனுக்கும் மனைவிக்குமிடையே பிணக்கமும் கருத்து வேறுபாடுகளும் அதிகமாகத் தோன்றின. இதனால், அன்னி பெசண்டு தம் கணவரை விட்டுப் பிரிய நேர்ந்தது. அமெரிக்கா வைச் சார்ந்த கான்வே தம்பதிகள் அன்னிக்குப் புகலிடம் அளித்த னர். இந்த நிலையில், அன்னியின் தாய் எமிலியும் இறந்துவிட்டார்.

சார்லஸ் பிராட்லா என்பவர் நடத்திவந்த 'தேசீய சீர்திருத்தம்' என்ற பத்திரிகையில் அன்னி பெசண்டு சீர்திருத்தக் கொள்கைகள்பற்றிப் பல கட்டுரைகள் எழுதிவந்தார். அன்னி பெசண்டு அம்மையார் இராப்பள்ளியும் வயதுவந்தோர் பள்ளியும் அமைத்து மாலை நேரங்களில் தொழிலாளர்களுக்கும் குடியானவர்களுக்கும் மற்ற ஏழைகளுக்கும் கல்வி அளிக்கும் தொண்டில் ஈடுபட்டார். இந்தியாவுக்குச் சென்று இந்திய மக்களுக்குத் தொண்டு புரிய வேண்டும் என்ற எண்ணம் அம்மையார் உள்ளத்தில் தோன்றியது. அதற்காக, அவர் இந்தியரைப்பற்றிய ஒரு நூலும் எழுதி வெளியிட்டார்.

உருசியாவில் பிறந்த பிளவட்ஸ்கி என்ற அம்மையார் பிரம்ம ஞான சங்கத்தின் தலைவராவர். இந்த அம்மையார் எழுதிய நூல் ஒன்றினை அன்னி பெசண்டு அம்மையார் படித்துத் தாமும் பிரம்ம ஞான சங்கத்தில் சேர்ந்தார். அப்போது, மன்னுயிர்க்குச் செய்யும் தொண்டே மாதேவனுக்குச் செய்யும் தொண்டாகும் என்பதை அம்மையார் உணர்ந்தார். 1875ஆம் ஆண்டு கர்னல் ஆல்காட்டும் பிளாவட்ஸ்கி அம்மையாரும் இந்தியாவுக்கு வந்து பல இடங்களில் பிரம்ம ஞான சங்கத்தைத் தோற்றுவித்தனர். சென்னை நகரில் அடையாற்றில் தோற்றுவித்த பிரம்ம ஞான சங்கத்தைத் தலைமையகமாகக் கொண்டனர். 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்,' என்பதனையும், 'மக்கள் பல மதங்களின் உண்மைகளை ஆராயவேண்டும்,' 'உண்மையே உயர்ந்த மதம்,' என்பவற்றையும் வலியுறுத்துவதே பிரம்ம ஞான சங்கத்தின் நோக்கமாகும். அன்னி பெசண்டு அம்மையார் பல ஊர்களுக்குச் சென்று பிரம்ம ஞான சங்கத்தின் நோக்கங்கள்பற்றிச் சொற்பொழிவாற்றினார். கர்னல் ஆல்காட் என்பவருக்குப்பின், 1907ஆம் ஆண்டு பிரம்ம ஞான சங்கத்தின் தலைமைப் பதவிக்கு அன்னி பெசண்டு அம்மையார் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இந்தியாவுக்கு வந்த அன்னி பெசண்டு அம்மையார் இந்தியாவைத் தம் தாயகமாக ஏற்றுக்கொண்டு இந்திய மாதர்களைப் போல் சேலை உடுத்தி, இந்தியர்களைப்போல் தரையில் உட்கார்ந்து இலை போட்டுக்கொண்டு உணவு உண்டார். பல புண்ணியத் தலங்களைத் தரிசித்து, நம் பழம் பெரும் நூல்களை அச்சிட்டு வெளிப்படுத்தினார். எடுத்துக்காட்டாக, அம்மையார் 'பகவத் கீதை'யினை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டதைக் கூறலாம்.

இந்தியா உயர்நிலை பெறவேண்டுமாகில் ஆண் பெண் என்ற இருபாலாரும் கல்வி கற்கவேண்டும் என்பதை அம்மையார் பல

இடங்களில் எடுத்துக்கூறினுர். இந்திய மாணவர் தமது சமயக் கருத்துகளையும் கொள்கைகளையும் முற்றும் மறந்து மேனுட்டு நாகரிகத்தில் மூழ்கி மயங்கிக்கிடப்பதை அறிந்த அம்மையார், அவர்களை நல்வழியில் கொண்டுவரும் நோக்கத்தோடு 1904ஆம் ஆண்டில் காசியில் 'மத்திய இந்துக் கல்லூரி' என்ற ஒரு கல்லூரியை நிறுவினுர். அங்கு ஆங்கிலம், சமஸ்கிருதம், தத்துவம், இந்து மதம் முதலியன கற்பிக்கப்பட்டன. அங்கு ஆசிரியரும் மாணவரும் அன்புடன் நெருங்கிப் பழகினர். அக்கல்லூரி, மற்றக் கல்லூரிகளுக்கு எடுத்துக்காட்டாக விளங்கியது. இதனை ஒரு பல்கலைக் கழகமாக மாற்றவேண்டும் என்று கருதிய அம்மையார் அதற்குப் பெரும் பொருள் தேவைப்படுமாதலின் தம் முயற்சியைக் கைவிட்டார். ஆனுல், பின்னர், பண்டித மதன்மோகன் மாளவியா அவர்களின் பெருமுயற்சியால் அக்கல்லூரி பல்கலைக் கழக மாக மாற்றப்பட்டது. அதுதான் தற்போது காசியிலுள்ள காசி இந்து பல்கலைக் கழகம். இந்தியப் பெண்களின் கல்வியின்மை யைப் போக்கவேண்டும் என்ற நோக்கத்துடன் 1904ஆம் ஆண்டில் அம்மையார் காசியில் பெண்களுக்காக ஒரு கல்லூரி யைத் தோற்றுவித்தார். அங்குச் சமையற்கலை, மருத்துவம், சுகாதாரம், குழந்தை வளர்ப்பு, உடற்பயிற்சி, மனை இயல், தையற்கலை, நூல் நூற்றல், இசைக்கலை முதலியன கற்பிக்கப் பட்டன. இவைகளேயன்றி, அம்மையார் கிராமங்களில் சிறு சிறு தொடக்கப் பள்ளிகளையும் தோற்றுவித்தார். பிறப்பால் உயர்வு தாழ்வு இல்லை என்ற கருத்தினை மக்களுக்கு எடுத்துக்கூறி, அம்மை யார் ஹரிஜனங்களின் முன்னேற்றத்திற்குப் பல பணிகளை ஆற்றி யுள்ளார். அம்மையாரின் பலதிறப்பட்ட கல்வித் தொண்டுகளைப் பாராட்டி, காசிப் பல்கலைக் கழகம் அம்மையாருக்கு 'டாக்டர்' என்ற சிறப்புப் பட்டம் வழங்கியது.

இனி, அம்மையாரின் அரசியல் தொண்டுகளை நோக்குவோம். இந்திய மக்கள் தம் உரிமை இழந்து ஆங்கில ஆட்சியில் அடிமைப்பட்டுக்கிடப்பதைக் கண்டு அம்மையார் மனம் வருந்தி அவர்களின் முன்னேற்றத்திற்கு பாடுபட முயன்றுர். இந்திய விடுதலைக்காக அம்மையார்', அனைத்து இந்தியச் சுய ஆட்சிச் சங்கம்,' என்ற ஒரு சங்கத்தைத் தோற்று வித்தார். இச்சங்கத்தின் வாயிலாக, இந்திய மக்களுக்கு அளிக்கவேண்டிய அரசியல் உரிமைகளைப்பற்றி வெளியிட்டார். இக்கருத்துகளைப்பற்றிப் பல இடங்களில் சொற்பொழிவு ஆற்றிய தோடு அமையாது, 'காமன்வீல்' என்ற பருவ வெளியீட்டிலும், 'நியூ இந்தியா' என்ற நாள் இதழ் செய்தித்தாளிலும் வெளி யிட்டார். இதனைக் கண்ட அரசாங்கத்தார் 'நியூ இந்தியா'

நாள் இதழுக்குத் தடை விதித்து ரூபாய் 20,000 பொறுப்புத் தொகை கட்டும்படி உத்தரவிட்டனர். அம்மையார் அத் தொகையைக் கட்டிவிட்டு முன்போல் பேசவும் எழுதவும் தொடங்கினுர். பின்னர், அம்மையார் தம் அரசியல் தோழர் களுடன் சிறை செய்யப்பட்டுக் காவலில் வைக்கப்பட்டார். இதனைக் கண்டு மக்கள் கிளர்ச்சி செய்யவே, அரசினர் அம்மையாரை விடுதலை செய்தனர்.

இளைஞர்களை உரிமைப் போராட்டத்தில் ஈடுபடுத்த அம்மை யார், 'இந்திய இளைஞர் சங்கம்' என்ற சங்கத்தைத் தோற்றுவித்து, நூறு மாணவர்கள் உண்டியும் உறையுளும் பெறுவதற்காக, 'கோகலே மண்டபம்' கட்டி, அதனை ஓர் உட்குழுவினர் ஆட்சிக்கு ஒப்படைத்தார். அம்மையாரின் நினைவுச்சின்னமாக இன்றும் 'கோகலே மண்டபம்' சென்னையில் காட்சி அளிக்கின்றது.

இந்திய இளைஞர்கள் ஒழுக்கமும், கட்டுப்பாடும் கொண்ட தேசிய வீரர்களாக விளங்க வேண்டுமென்று அம்மையார் 1916 ஆம் ஆண்டில் இந்தியச் சாரணர் சங்கத்தைத் தோற்றுவித்தார்.

1917ஆம் ஆண்டு பெசண்டு அம்மையார் இந்திய தேசிய காங்கிரசின் தலைமைப் பதவியினைப் பெற்றுர். அம்மையார் காங்கிர சைச் சார்ந்த தீவிரவாதிகளையும் மிதவாதிகளையும் ஒன்றுபடும் படி செய்தார். இது செயற்கரிய செயலாகும். இதனுல், காங்கிரசின் மதிப்பு உயர்ந்தது.

அம்மையார் தம் இந்திய வாழ்க்கையின் பெரும் பாகத்தைச் சென்னை அடையாற்றில் கழித்தார். அடையாற்றிலுள்ள பிரம்ம ஞான சங்கத் தலைமை நிலையம் இயற்கை அழகும் செயற்கை அழகும் நிறைந்து அரிய காட்சி அளிக்கின்றது. 1933ஆம் ஆண்டு அன்னி பெசண்டு அம்மையார் அடையாறு பிரம்ம ஞான சங்கத் தில் தம் பூதவுடல் நீத்துப் புகழ் உடம்பு எய்தினுர். சென்னைக் கடற்கரையில் விவேகானந்தர் இல்லத்தின் பக்கத்தில் அம்மை யாருக்கு ஓர் அழகிய சிலை எடுக்கப்பட்டுள்ளது. இது பாரத மக்களின் நன்றி உணர்ச்சியைக் காட்டுவதாகும். அம்மையாரின் உருவச்சிலையைச் சென்னைக் கோகலே மண்டபத்தின் முகப்பிலும் காணலாம். அடையாற்றிலுள்ள நூலகம், ஆல்காட் நந்தவனம், பல கலைகளுடன் பொலிவு பெறும் கலாக்ஷேத்திரம், இந்திய இளைஞர் சங்கம், அடையாறு பிரம்ம ஞான சங்கம், பெசண்ட் சாரணர் பாசறை என்ற இவைகள் அம்மையாரின் அருந்தொண்டு களை நினைப்பூட்டும் அரிய சின்னங்களாக அமைந்துள்ளன. நாமும் கல்விப் பணியிலும், சமூகப் பணியிலும், அரசியல் பணியிலும்

ஈடுபட்டு அம்மையார் காட்டிய நெறி நின்று நம் நாட்டின் உரிமையையும் பெருமையையும் பாதுகாப்போமாக.

### அருஞ்சொற்பொருள்

தளை - கால் விலங்கு, ஆவி - உயிர், சாலவும் - மிகவும், எழில்- அழகு, வாழ்க்கைத் துணைவி - மனைவி, மகவு - குழந்தை, பீடிக்கப் பட்டு - துன்பப்பட்டு, அகவை - வயது, பிணக்கம் - சண்டை.

### வினாக்கள்

1. அன்னி பெசண்டு அம்மையார் தம் இளமைப் பருவத்தில் பெற்ற வறுமை நிலையினையும் பின்னர் இல்வாழ்க்கை முறையில் அடைந்த துன்ப நிலையினையும் விளக்கி வரைக.
2. அன்னி பெசண்டு அம்மையார் பிரம்ம ஞான சங்கத்தில் சேர்வதற்குக் காரணமாக இருந்த நிகழ்ச்சி யாது? அச்சங்கத்தின் நோக்கங்கள் யாவை?
3. பிரம்ம ஞான சங்கத்தின் வளர்ச்சிக்கு உழைத்த அறிஞர் பெருமக்கள் யாவர்?
4. ஆங்கில நாட்டிலிருந்து வந்த அன்னி பெசண்டு அம்மை யார் எம்முறைகளில் இந்தியப் பெண்மணியாக வாழ்ந்து வந்தார்?
5. அம்மையார் எந்த நோக்கத்தோடு காசியில் மத்திய இந்துக் கல்லூரியை நிறுவினார்? அக்கல்லூரியின் சிறப் பினையும் அது எவ்வாறு வளர்ச்சி பெற்றது என்பதனை யும் விளக்கி எழுதுக.
6. பெண்களுக்காகக் காசியில் அம்மையார் தோற்றுவித்த பெண்கள் கல்லூரியின் தனிச் சிறப்பு யாது?
7. இந்திய விடுதலைக்காக அம்மையார் ஆற்றிய அரும் பணி களைச் சுருக்கி வரைக.
8. அம்மையார் இந்திய தேசிய காங்கிரசின் தலைமைப் பதவி பெற்றபோது ஆற்றிய அருந்தொண்டு யாது?
9. இளைஞர்கள் உரிமைப் போராட்டத்தில் ஈடுபடவேண்டும் என்ற கருத்தில் அம்மையார் செய்த அரிய செயல் யாது?
10. அம்மையாரின் அருந்தொண்டுகளை நமக்கு நினைப்பூட்டும் அரிய சின்னங்களாக விளங்குவன யாவை?

# 13. குறிஞ்சி

[திரு. பி. எல். சாமி]

மலையும் மலை சார்ந்த இடமும் 'குறிஞ்சி' எனப்படும். 'ஆயின், இவ்விடத்திற்கு இப்பெயர் எதனால் வந்தது?' எனின், 'மலையில் வாழும் ஒரு செடியின் பூவினால் வந்தது' என்பர். 'பல செடிகள் வளரும் மலைக்கு ஒரு செடியின் பெயரிடுவது ஏன்?' என்றால், விடை தேடித்தான் கண்டுபிடிக்கவேண்டும். அப்படித் தேடும் பொழுது நமக்கு அறிவியல் துணை செய்கின்றது. அறிவியல் துணை கொண்டு ஆராயுங்கால் பழந்தமிழரின் நுண்மாண் நுழை புலமும், இயற்கை ஈடுபாட்டாராய்ச்சியும் வெளியாகின்றன.

கடல் மட்டத்திற்கு ஆறாயிரம் அடிக்கு மேற்பட்ட உயரத்தில் உள்ள இடத்தில் இயற்கையில் காணக்கூடிய செடி, குறிஞ்சிச் செடியாகும். இச்செடிகளுக்கிருப்பதுபோலப் பிற செடிகளுக்கு அத்தகைய வரையறை இல்லை. ஆறாயிரம் அடிக்கு மேற்பட்ட நிலம், மலையும் மலை சார்ந்த பகுதியாயுமே இருக்கும். இத் தன்மையின் அடிப்படைக் காரணத்தாலேயே மலையையும் மலை சார்ந்த இடத்தையும் இச்செடியின் பெயரால் வழங்கினர்.

இதற்கு மற்றொரு காரணமும் உண்டு. அஃது இச்செடியின் பூவின் தனித்தன்மையாகும். இச்செடியின் பூ, ஒன்பது ஆண்டுகளுக்கு ஒருமுறை தோன்றிப் பன்னிரண்டு ஆண்டுகள் வரை தொடர்ந்து காணப்படுகின்றது. இயற்கையில் இத்தகைய வியப்பிற்குரிய பூ வேறின்மையால், இந்தப் பூவின் பெயராலேயே இந்த இடத்தை வழங்கினர். செடி நூலில் இச்செடி ஸ்டிரொபிளாந்தெஸ் (Strobilanthes) என்னும் இனத்தைச் சார்ந்தது. தமிழ் நாட்டிலும், ஈழத்திலும், மத்திய இந்தியாவிலும் இது காணப்படுகின்றது. நீலகிரி மலையிலும், பழனி மலையிலும் கோடைக்கானல் மலையிலும் பல ஆண்டுகளாய் இச்செடி பூக்கும் காலத்தைக் கண்டுவைத்திருக்கின்றனர்.

இது மலைச்சாரல்களில் பூக்குங்கால் பல்லாயிரக்கணக்கான பூக்கள் ஒரே கூட்டமாய்த் தென்படும். ஒன்பதாவது ஆண்டிலிருந்து பன்னிரண்டாவது ஆண்டுவரை மலைச்சாரல்களில் இச்செடிப்புதர்கள் கூட்டம் கூட்டமாய்ப் பூத்துக்கிடக்கும். பன்னிரண்டாம் ஆண்டில் இவை பட்டுவிடுகின்றன. இப்படிக் கூட்டங் கூட்டமாய்ப் பார்த்ததாலேதான் பழந்தமிழ்ப் புலவர், 'கருங்கோற் குறிஞ்சியடுக்கம்' (புறம். 374) என மலையை வருணித்தனர்.

இந்தப் பூவில் நிரம்பத் தேனுண்டு. பல்லாயிரக்கணக்கான பூக்கள் குறிப்பிட்ட ஒரு காலத்தில் தோன்றுவதால், தேன் மலிந்து போய்விடுகின்றது. அதனால், தேனீக்கள் மலைச்சாரல்களில் பெரிய பெரிய தேன் கூடுகளைக் கட்டுகின்றன. இச்செடி பூக்கத் தொடங்கியதும் தேன் கூடுகள் மலைச்சாரல்களில் மலிந்துவிடுன்றன. இதைக்கண்டே சங்கப் புலவரொருவர்,

'கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தே னிழைக்கும் நாடனொடு நட்பே,' (குறுந். 3)

என்று பாடினர். 'குறிஞ்சிப் பெருந்தேனிறால்,' என்று கலித்தொகை என்னும் நூலும் குறிக்கின்றது. குறிஞ்சிப்பூவின் தேனை மிக இனியதெனக் கருதினர்.

'கருங்கோற் குறிஞ்சி மதனில் வான்பூ
நாறுகொள் பிரசம் ஊறும் நாடற்கு,'

என்னும் நற்றிணைப்பாடலில் குறிஞ்சித்தேனின் இனிமை கூறப்பட்டிருக்கின்றது.

குறிஞ்சிப்பூவின் தேனை மிகவுயரியதெனக் கருதியதற்கு இன்னொரு காரணமும் உண்டு. பொதுவாகத் தேன் கூடுகளில் பலவகைப் பூக்களின் தேன் கலந்து காணப்படும். ஆனால், குறிஞ்சிப் பூக்களின் தேனால் இழைக்கப்படும் கூட்டில் பிற பூக்களின் தேன் கலப்பதில்லை. ஏனெனில், குறிஞ்சிச் செடி பூக்க ஆரம்பித்தால். தேனீக்கள் குறிஞ்சித்தேனையே கூடுகளில் சேர்க்கின்றன. இத்தகைய தேனைத் 'தனிப்பூத்தேன்' (Unifloral honey) என்று அறிஞர் வழங்குகின்றனர்.

சவ்வாது மலையில் சந்தனப்பூத்தேன் சேர்க்கத் தமிழ்நாட்டு அரசியலார் ஒரு தேன் ஆராய்ச்சிப் பண்ணையை நிறுவியிருக்கின்றனர். இந்தத் தனிப்பூத்தேன் மணத்திற்கும் இனிப்புக்கும் பெயர் பெற்றது. பூக்குங்காலத்துக் குறிஞ்சித்தேன் நிறைந்துவிடுகின்றது. இது இனிமை மிகுந்தது; நறுமணம் வாய்ந்தது; பல்லாண்டுகளுக்கொருமுறை அரிதாகக் கிட்டுகின்றது.

குறிஞ்சித்தேனின் அருமை பெருமைகளைத் தமிழர் மட்டுமன்றிப் பிற பழங்குடி மக்களும் அறிந்திருந்தார்களென்பது தெரியவருகின்றது. டாக்டர் வெரியர் எல்வின் (Dr. Verrier Elwin), என்ற அறிஞர், பழங்குடி மக்களைப்பற்றிப் பல ஆராய்ச்சிகளை வெளியிட்டிருக்கின்றார்; சோட்டா நாகபுரியில் வாழும் பைகர்கள் (Baigas) என்னும் இனத்தாரைப்பற்றியும் எழுதியுள்ளார். அவர், 'குறிஞ்சிப் பூக்கள் கூட்டங்கூட்டமாய்ப் பூக்கும்: ஒன்பது ஆண்டுகளுக்கொருமுறை பூக்கும். அப்

பொழுது பைகர்கள் தேனீ விழாக் கொண்டாடுவார்கள்; விழா முடிவு நாளில் சடங்கு செய்து நடனமாடி மலைத்தேனைப் பருகுவார்கள்,' என்றும், இச்செடியை அம்மக்கள் 'மோர்கடே, ஆமேரா' என்று வழங்குவார்கள்,' என்றும் கூறுகிறார்.

பைகர்கள் இச்செடியில் ஆண் பெண் வேற்றுமையையும் அறிகின்றார்களாம். இச்செடியைப்பற்றிச் சில புராணக் கதைகளும் அவர்களிடையே வழங்குகின்றனவாம். தேனீ விழாக்காலத்தில் கூடைகூடையாகக் குறிஞ்சித் தேனடைகளைச் சேகரித்துக் கொண்டு வந்து, ஆடவரும் பெண்டிரும் தீயைச் சுற்றிச் சுற்றி நடனமாடுவராம்; குறிஞ்சிச்செடிகளைத் தலையிலும் இடுப்பிலும் செருகிக்கொண்டு ஆடுவராம். இந்தியாவின் நடுவில் வாழும் பழங்குடி மக்கள்—திராவிடப் பழங்குடி மக்கள்—குறிஞ்சித் தேனைப் போற்றுவதைக் காணுங்கால் அவர்களுக்கும் பழந்தமிழருக்கும் மிகப் பழைய காலத்திலேயே தொடர்பிருந்திருக்கவேண்டும் என்பது தோன்றுகின்றது.

நீலகிரியில் தொதுவர்கள் தங்கள் குழந்தைகளின் வயதைக் குறிஞ்சிச்செடி பூப்பதைக்கொண்டே கணக்கிட்டார்களாம். பழந்தமிழர் வேங்கை மரம் பூப்பதைக் கண்டு ஆண்டுகளைக் கணக்கிட்டனரென்பது நாமறிந்த செய்தியாகும். குறிஞ்சிச்செடி, எப்படிப் பழங்குடி மக்களையும் பழந்தமிழரையும் கவர்ந்ததோ, அப்படியே நீலகிரியிலும் கோடைக்கானலிலும் வாழ்ந்த வெளிநாட்டாரின் கவனத்தையும் ஈர்த்திருக்கின்றது. அவர்கள் இரு நூற்றாண்டுகளாக இதைப்பற்றிய நாட்குறிப்புகளும் (Diaries) எழுதியுள்ளார்கள்; இச்செடியின் பூவைப் படம் வரைந்தும் பாடஞ் செய்தும் வைத்திருக்கின்றார்கள்.

குறிஞ்சிச் செடியில் பல இனங்கள் உள்ளன. அவற்றுள் ஓரினம் (Strobilanthes walliechi) பன்னிரண்டு ஆண்டுகளுக்கொருமுறை மலருமாம். அது வளரும்போது பிற செடிகளை வளரவிடாது அழுத்திவிடுமாம். மலைச்சாரலில் குறிஞ்சிச்செடியைத் தவிரப் பிற செடியைக் காண இயலாதாம். இந்தச் செடி வளர்வதும் தனிப்பட்ட முறையாம். ஆண்டுதோறும் இளவேனிலில் குருத்துத் தோன்றும்; பல கணுக்கள் விட்டு வளரும். இக்குருத்து ஆண்டிறுதியில் கீழ்க்கணுவைத் தவிர்த்து முழுவதும் அழிந்துவிடுமாம். இம்முறையில் ஒவ்வோர் ஆண்டும் கீழ்க்கணுவை விட்டுப் பிற கணுக்கள் (Internodes) அழிந்துபோவதால், இச்செடியின் வயதைப் பழைய கணுக்களின் எண்ணிக்கையைக் கொண்டு சொல்லிவிடலாம். ஒருவேளை, பழங்குடி மக்கள் இம்முறையாக எண்ணியே வயதைக் கணக்கிட்டிருப்பார்களோ என்று

எண்ண இடமிருக்கின்றது. 'குறிஞ்சிச்செடியில் இருபத்தெட்டு இனங்கள் ஈழத்திலும் பர்மாவிலும் அசாமிலும் காணப்படுகின்றன. ஆனால், தமிழ்நாட்டில் மட்டுந்தான் அவை சிறப்புடையனவாய்க் காணப்படுகின்றன,' என்று செடி நூலறிஞர் கருதுகின்றனர்.

### அருஞ்சொற்பொருள்

நுண்மாண் நுழைபுலம் - கூரிய சிறந்த நுட்பமான அறிவு. வரையறை - எல்லை, மலிந்துவிடுகின்றன - மிகுந்துவிடுகின்றன. கலித்தொகை, நற்றிணை - சங்க கால நூல்களாகிய எட்டுத்தொகை நூல்களுள் இரண்டு, பாடஞ்செய்தல் - பக்குவப்படுத்தல்.

### வினாக்கள்

1. 'குறிஞ்சி நிலம்' என்பது எது? அது ஏன் அவ்வாறு வழங்கப்படுகிறது?
2. குறிஞ்சிச்செடியின் தனித்தன்மையை விளக்குக.
3. குறிஞ்சிச்செடி காணப்படும் இடங்களைக் குறிப்பிடுக.
4. குறிஞ்சித்தேனை மிகவும் உயரியதெனக் கருதக் காரணம் யாது?
5. குறிஞ்சித்தேனின் அருமையைப் பிற பழங்குடி மக்களும் அறிந்திருந்தார்கள் என்பதற்குக் கிட்டும் சான்றுகள் யாவை?
6. குறிப்பு எழுதுக:
   கருங்கோற்குறிஞ்சியடுக்கம், தனிப்பூத்தேன், தேனீ விழா.
7. ஆண்டுகளைக் கணக்கிடக் குறிஞ்சிச்செடிகள் எங்ஙனம் உதவின என்பதை விளக்குக.
8. குறிஞ்சிச்செடியின் தன்மைகள் யாவை?
9. 'அருமைபெருமை, கூட்டங்கூட்டமாக' என்பனபோல வரும் வேறு சொற்றொடர்கள் சில எழுதுக.

## 14. பாராளுமன்றமும் அதன் பணிகளும்

[திருமதி இராசலட்சுமி இராமச்சந்திரன்]

நாட்டு மக்கள் நலமுற வாழ நல்லதோர் அரசியல் அமைப்பு வேண்டும். இவ்வரசியல் அமைப்பு நாட்டுக்கு நாடு, காலத்திற்குக் காலம் வேறுபடலாம். ஆயின், அரசியல் அமைப்பின் முக்கிய நோக்கம் குடிமக்கள் அனைவரும் அமைதியுடனும் இன்பத்துடனும் வாழ வழிசெய்வதேயாகும்.

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகத்தில், முடியாட்சி நடந்துவந்த காலத்து, மக்கள் நலனே பெரிதாக எண்ணப்பட்டது. மன்னன் தன் உடலைப் பேணிக் காப்பதுபோலத் தன் குடிமக்களைக் காக்கவேண்டும் என்ற கருத்தை,

'நெல்லும் உயிர் அன்றே நீரும் உயிர் அன்றே,
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்,'

எனப் 'புறநானூறு' என்ற சங்க நூல் கூறுகின்றது. அவ்வாட்சி முறையில் எவ்வளவோ மாற்றங்கள் காலப்போக்கில் ஏற்பட்டன.

இன்று இந்தியா ஒரு முழுமையான குடியரசாக விளங்குகின்றது. நம் அரசியல் அமைப்பு மக்களுக்கு முழுச் சுதந்தரத்தையும் சம உரிமைகளையும் வழங்கியுள்ளது. இந்திய மக்கள் அனைவருக்கும் பொதுவான சில அடிப்படை உரிமைகளையும் நம் அரசியல் அமைப்பு அளித்துள்ளது. இந்தியா சமயச் சார்பற்ற ஒரு குடியரசு. ஆகையால் மக்கள் தமக்கு விருப்பமான சமயத்தைத் தழுவி வாழலாம். சொத்துகளை விற்கவும் வாங்கவும்கூடிய சொத்துரிமை அளிக்கப்பட்டுள்ளது. பேச்சுரிமை, எழுத்துரிமை, இந்திய நாட்டிற்குள் எப்பகுதிக்கும் சென்றுவரும் உரிமை, எத்தொழிலையும் செய்யும் உரிமை, வழிபாட்டுரிமை, தாய்மொழிமூலம் கல்வி கற்கும் உரிமை முதலான பல அடிப்படை உரிமைகள் மக்களுக்கு வழங்கப்பட்டுள்ளன. இந்திய மக்கள் அனைவரும் கல்வி பெற்றுப் பொருளாதார நிலையில் உயர்ந்து, எல்லா வகைகளிலும் அனைத்து உரிமைகளையும் பெற்று வாழ வழிசெய்வதே நம் அரசியல் அமைப்பின் குறிக்கோளாகும்.

### இந்திய அரசியல் அமைப்பு

1947ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 15ஆம் நாள் இந்தியா அந்நிய ஆதிக்கத்தினின்றும் விடுபட்டுச் சுதந்தரம் அடைந்தது. நாடு சுதந்தரம் அடைந்ததும் நம் நாட்டிற்கென்று அரசியல் அமைப்பொன்று தேவைப்பட்டது. பாபு இராஜேந்திர பிரசாத் தலைமையில் அரசியல் நிர்ணய சபை ஓர் அரசியல் அமைப்பை ஏற்படுத்தியது. இவ்விந்திய அரசியல் அமைப்புச் சட்டம் 1950ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 26ஆம் நாள் நடைமுறைக்கு வந்தது

### பாராளுமன்றம்

குடியரசு தலைவரும், பிரதம மந்திரியும், பிற அமைச்சரவைகளும் இருப்பினும் நம் இந்திய நாட்டை உண்மையில் ஆளுவது பாராளுமன்றமேயாகும் இந்நாட்டு மக்கள் சமூக, பொருளாதார நிலைகளில் உயர்ந்து இன்புற்று வாழ்வதற்கான சட்டங்களை

இயற்றும் பணி பாராளுமன்றத்திற்கு அளிக்கப்பட்டுள்ளது. பாராளுமன்றம் மேல் சபை, கீழ்ச் சபை என்ற இரு சபைகளைக் கொண்டுள்ளது. மேல் சபை, 'இராஜ்ய சபா' என்றும், கீழ்ச் சபை, 'லோக் சபா' என்றும் அழைக்கப்பெறுகின்றன.

### மாநிலங்களவை (இராஜ்ய சபா)

இராஜ்ய சபையில் 250க்கு மேற்படாத அங்கத்தினர்கள் இருப்பார்கள் கலை, இலக்கியம், சமூக சேவை ஆகியவற்றில் சிறந்து விளங்கும் 12 பேர்களை ஜனாதிபதி இச்சபையின் உறுப்பினர்களாக நியமிப்பார் இச்சபையின் மற்ற உறுப்பினர்கள் மாநிலக் கீழ்ச் சபை அங்கத்தினர்களால் தேர்ந்தெடுக்கப்படுவர் இச்சபையின் உறுப்பினர்களில் மூன்றில் ஒரு பகுதியினர் இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை ஓய்வு பெறுவர் அதன் பின்னர், அவ்விடங்களுக்கு மட்டுமே இரண்டாண்டிற்கு ஒரு முறை தேர்தல் நடத்தப்படும். எனவே, இஃது ஒரு நிரந்தர சபையாகும். துணை ஜனாதிபதி இச்சபையின் தலைவராகப் பணியாற்றுவார்.

### மக்களவை (லோக் சபா)

இச்சபையில் நாட்டு மக்கள் தொகைக்கேற்ப ஏறத்தாழ 525 அங்கத்தினர்கள் இருப்பார்கள். இவ்வங்கத்தினர்கள் மக்களால் நேரிடையாகத் தேர்ந்தெடுக்கப்படுவார்கள் ஒவ்வோர் அங்கத்தினரும் 500,000த்திற்குக் குறையாமலும், 750,000த்திற்கு மேற்படாமலும் உள்ள எண்ணிக்கையைக் கொண்ட மக்கள் வாழும் தொகுதியின் பிரதிநிதியாக விளங்குவார்கள். மக்களவையின் அங்கத்தினர்கள் 6 ஆண்டுக் காலத்திற்குப் பதவியில் இருப்பார்கள் லோக சபையின் தலைவர் 'சபாநாயகர்' என்று அழைக்கபபடுவார். அவரை மக்களவையின் அங்கத்தினர்கள் தேர்ந்தெடுப்பார்கள் அமைச்சரவையின் ஆலோசனையின் பேரில் பாராளுமன்றத்தைக் கூட்டவும் காலநீட்டிப்புச் செய்யவும் கலைக்கவும் அரசியல் சட்டப்படி ஜனாதிபதிக்கு அதிகாரம் உண்டு. தேவை ஏற்படின் மாநிலங்களவையையும் மக்களவையையும் ஒன்றுகக் கூட்ட ஜனாதிபதி ஏற்பாடு செய்யலாம் இரு சபைகளிலும் நிறைவேற்றப்படும் தீர்மானங்கள் பெரும்பான்மையான வாக்குகளால் நிர்ணயிக்கப்படும்.

### தகுதிகள்

இவ்விரு சபைகளின் அங்கத்தினர்களாகத் தேர்ந்தெடுக்கப்படுவதற்குச் சில தகுதிகளை அரசியல் சட்டம் விதித்திருக்கின்றது.

எல்லா அங்கத்தினர்களும் இந்திய நாட்டு மக்களாக இருக்க வேண்டும். மேல் சபையின் அங்கத்தினர்கள் முப்பது வயதுக்கு மேற்பட்டவராக இருத்தல்வேண்டும். கீழ்ச்சபையின் அங்கத்தினர்கள் இருபத்தைந்து வயதுக்கு மேற்பட்டவராக இருத்தல் வேண்டும். வாங்கிய கடனைத் திருப்பித் தராதவர்களும் மனநிலை பிறழ்ந்தவர்களும் இங்கு வாழும் வேற்று நாட்டு மக்களும் இவ்விரு சபைகளின் அங்கத்தினர்களாக இருக்கமுடியாது.

**பாராளுமன்றத்தின் பணிகளும் அதிகாரங்களும்**

1. பாராளுமன்றம் எந்தெந்தத் துறைகளில் சட்டம் இயற்றலாம் என்பதை இந்திய அரசியல்சட்டம் தெளிவாக எடுத்துரைத்திருக்கின்றது. அதன்படி பாராளுமன்றம் நாட்டின் பாதுகாப்பு, வெளிநாட்டு உறவு, இரயில், விமானப் போக்குவரத்து, தபால் தந்தி, நாணயம் அச்சடித்தல் உள்ளிட்ட 97 துறைகளில் சட்டமியற்ற அதிகாரம் பெற்றுள்ளது. அத்துடன் திருமணம், வாரிசு உரிமை, ஒப்பந்தம் முதலான 47 துறைகளில் பாராளுமன்றமும், மாநிலச் சட்ட சபைகளும் சட்டமியற்றும் அதிகாரத்தைக் கொண்டுள்ளன.

2. பாராளுமன்றத்து இரு சபைகள் மாநிலச் சட்ட சபை ஆகியவற்றின் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் கூடிய வாக்காளர் தொகுதியால் இந்திய ஜனாதிபதி தேர்ந்தெடுக்கப்படுகின்றார். பாராளுமன்றத்து இரு சபைகளும் துணை ஜனாதிபதியைத் தேர்ந்தெடுக்கின்றன.

3. மக்களவையின் பெரும்பான்மையான அங்கத்தினர்களைக் கொண்ட கட்சியின் தலைவரே இந்திய நாட்டின் பிரதமராக நியமிக்கப்படுவார்.

4. மத்திய அமைச்சரவை, லோக சபையிடம் பொறுப்புடன் நடந்துகொள்ளவேண்டும். லோக சபையின் முடிவுகளுக்கு உட்பட்டும் நடத்தல் வேண்டும்.

5. எந்தத் துறையானாலும் ஒரு சட்டம் இயற்றப்பட வேண்டுமானால், அமைச்சரவை அதை ஒரு மசோதாவாகப் பாராளுமன்றத்தில் கொண்டுவரவேண்டும் அம் மசோதாவானது இரு சபைகளிலும் ஏற்றுக்கொள்ளப்

பட்டபின்னரே ஜனாதிபதியின் ஒப்புதலுக்காக அனுப்பப்பெறும். அதை ஏற்றுக்கொள்ளவும், மறுக்கவும் அல்லது ஆறு மாதத்திற்குள் மறு பரிசீலனை செய்வதற்காக அதைத் திருப்பி அனுப்பவும் ஜனாதிபதிக்கு அதிகாரம் உண்டு. ஜனாதிபதியின் ஒப்புதலைப் பெற்ற மசோதா சட்டமாக ஏற்றுக்கொள்ளப்படும். மறுபரிசீலனை செய்யப்பட்டு ஒரு மசோதாவானது ஜனாதிபதியின் ஒப்புதலுக்காக இரு சபைகளாலும் திரும்பவும் அனுப்பப்பட்டால் ஜனாதிபதி அதனை ஏற்றே ஆகவேண்டும்.

6. இரு சபை அங்கத்தினர்களுக்கும் முழுப் பேச்சுரிமை அளிக்கப்பட்டுள்ளது. சபைகளில் அவர்கள் பேசியதன் காரணமாக அவர்கள்மேல் எவ்வித நடவடிக்கையும் எடுக்கமுடியாது.

7. பண மசோதாக்கள் கீழ்ச் சபையில்தான் முதலில் கொண்டுவரப்படவேண்டும். பண மசோதாவானது கீழ்ச் சபையால் ஏற்றுக்கொள்ளப்பட்டபின், மேல் சபையின் ஒப்புதலுக்கு அனுப்பப்படும். மேல் சபை மாற்றங்கள் ஏதேனும் கொண்டுவர நினைத்தால், அம்மாற்றங்களைச் சுட்டிக்காட்டி 30 நாள்களுக்குள் பண மசோதாவைக் கீழ்ச் சபைக்குத் திருப்பி அனுப்பவேண்டும். அம்மாற்றங்களைக் கீழ்ச் சபை ஏற்றுக்கொண்டால் பண மசோதா நிறைவேறியதாகக் கொள்ளப்படும். மாறாக, அம்மாற்றங்களைக் கீழ்ச் சபை ஏற்றுக்கொள்ளவில்லை என்றால், பண மசோதா எப்படி மேல் சபைக்கு அனுப்பப்பட்டதோ, அந்நிலையிலேயே நிறைவேற்றப்பட்டதாகக் கொள்ளப்படும். இவ்வாறு இரு சபைகளாலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட பண மசோதாவிற்கு எவ்வித மாற்றமும் இன்றி ஜனாதிபதி தம் சம்மதத்தை அளிக்கக் கடமைப்பட்டவராவார்.

8. மக்களவையில் ஒரு நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை நிறைவேற்றி மத்திய அமைச்சரவையைப் பதவியிலிருந்து விலகச்செய்யும் அதிகாரத்தை அது பெற்றுள்ளது.

9. இதேபோல் அரசியல் அமைப்புக்கு விரோதமாக ஜனாதிபதியோ உப ஜனாதிபதியோ நடந்ததாகச்

தீர்மானம் நிறைவேற்றப்பட்டால், அவர்களைப் பதவியிலிருந்து விலக்கும் அதிகாரமும் பாராளுமன்றத்திற்கு உண்டு.

10. இவையனைத்திற்கும் மேலாக அரசியல் சட்டத்தையே காலத்திற்கேற்ப மாற்றி அமைக்கும் அதிகாரத்தைப் பாராளுமன்றம் பெற்றுள்ளது. 1976ஆம் ஆண்டு வரை 42 மாற்றங்களைப் பாராளுமன்றம் இந்திய அரசியல் சட்டத்தில் கொண்டுவந்துள்ளது. இதனால் தான் இந்திய அரசியல் அமைப்பில் மற்ற அங்கங்களைவிடப் பாராளுமன்றம் ஒரு தலைசிறந்த அங்கமாக விளங்குகிறது என்று கூறலாம்.

எனினும், பாரர்ளுமன்றம் கூடாத நேரங்களில் எந்த ஒரு துறையிலும் ஜனாதிபதி அவசரச் சட்டம் இயற்ற இந்திய அரசியல் சட்டம் அதிகாரம் கொடுத்துள்ளது. அத்துடன் அமைச்சரவையின் ஆலோசனையின்பேரில் லோக சபையையே கலைக்கும் அதிகாரத்தையும் ஜனாதிபதி பெற்றுள்ளார்.

இவற்றை நோக்குங்கால், இந்திய ஜனாதிபதியே பாராளுமன்றத்தைக் காட்டிலும் அதிகாரத்தில் சிறந்து விளங்குகிறார் என நினைக்கத்தோன்றும். ஆனால், நடைமுறையில் ஜனாதிபதியால் இயற்றப்பட்ட அவசரச் சட்டங்கள் பாராளுமன்றத்தால் அது கூட்டப்பட்டவுடன் ஏற்றுக்கொள்ளப்பட்டால்தான் நடைமுறையில் இருக்கமுடியும். தவிரவும், ஜனாதிபதி தாமாகவே மக்களவையைக் கலைக்கும் அதிகாரத்தைப் பெற்றிருக்கவில்லை. மக்களவையில் பெரும்பான்மையோரின் ஆதரவை இழக்கும்வரை அதனைக் கலைக்க ஜனாதிபதிக்கு அமைச்சரவை ஆலோசனை கூற இடமில்லை.

இங்ஙனம் ஜனாதிபதியின் அதிகாரங்கள் வரையறை செய்யப்பட்டுள்ளதால் பாராளுமன்றமே மற்ற அங்கங்களைவிட மேலோங்கிய அதிகாரங்களைக்கொண்டு விளங்குகின்றது என்று கூறலாம்.

### அருஞ்சொற்பொருள்

முடியாட்சி - மன்னரால் நடத்தப்படும் ஆட்சி, மலர்தலை உலகம் - இடமகன்ற உலகம், மசோதா - சபையில் சட்டமாக்கப்பட வேண்டிக்கொண்டுவரும் தீர்மானம்.

### வினாக்கள்

1. இந்திய அரசியல் சட்டத்தின் முக்கிய அம்சங்களை எடுத்துக் கூறுக.
2. இந்திய அரசியல் சட்டம் எவ்வாறு, எப்போது, யாரால் ஏற்படுத்தப்பட்டது?

3. மாநிலங்களவை அல்லது மக்களவை அமைப்பினை விளக்கிக் கூறுக.
4. பாராளுமன்ற அங்கத்தினர்களின் தகுதிகள் யாவை?
5. பாராளுமன்றத்தின் இன்றியமையாத பணிகளை எடுத்துக் கூறுக.
6. பண மசோதாவானது எவ்வாறு நிறைவேற்றப்படுகின்றது?
7. பாராளுமன்றம் மேலோங்கிய அதிகாரத்தைக் கொண்டுள்ளது என்று எவ்வாறு கூறலாம்?

## 15. வாஞ்சிநாதன்

[டாக்டர் மா. இராமலிங்கம்]

நம் இந்திய நாடு ஆங்கிலேயரிடமிருந்து விடுதலை பெறுவதற்குத் தம் உடல், பொருள், உயிர் அனைத்தையும் தியாகம் செய்தோர் பலர். நாம் பெற்றிருக்கும் சுதந்தரம் 'திடும்' என ஒரே நாளில் கிடைத்ததன்று. இச்சுதந்தரப் பயிரை வளர்க்கக் கண்ணீரும் செந்நீரும் சிந்தியோர் கணக்கற்றோர். நாட்டுக்காகத் தன்னையே அழித்துக்கொண்ட தியாகிகள் வரிசையில் வாஞ்சிநாதன் என்னும் இளைஞரும் ஒருவர்.

இவர் திருவாங்கூர் சமஸ்தானத்தில், செங்கோட்டை என்னும் ஊரில், வனப் பாதுகாப்புத்துறையில் ஓர் எழுத்தராகப் பணி புரிந்துவந்தார். இவர் தந்தையார் பெயர் இரகுபதி ஐயர்.

இளமை முதலே வாஞ்சிநாதன் நாட்டுப்பற்று மிக்கவராய் விளங்கினார். தேசிய ஆர்வம் அவர் உள்ளத்தில் வேள்விக் கனலாய் கனன்றுகொண்டே இருந்தது. இந்தியா விடுதலை பெறவேண்டும் என்று அவர் ஆசைப்பட்டார். இந்திய அரசியல் நிலையைக் கூர்ந்து கவனித்துக்கொண்டேவந்தார்.

இவரது மைத்துனர் சங்கர கிருஷ்ணையர் என்பாரும் இவரைப் போலவே தீவிரமான தேசபக்தர். அவர் ஒருமுறை வாஞ்சிநாதனைப் புதுச்சேரிக்கு அழைத்துச்சென்றார். வ. வே. சு. ஐயரிடம் அறிமுகம் செய்துவைத்தார். ஐயரின் தொடர்பால் வாஞ்சிநாதனின் தேசிய ஆர்வம் மேலும் வளர்ந்தது. ஐயர் அப்போது தம் புரட்சிப் படையில் இருந்த இளைஞர்களுக்குத் துப்பாக்கி சுடும் பயிற்சியை அளித்து வந்தார். வாஞ்சிநாதனும் ஐயரிடமிருந்து துப்பாக்கி சுடும் முறையை விரைவில் கற்றுக்கொண்டார்.

இந்தக் காலகட்டத்தில்தான் இந்திய நாட்டில் தேசிய இயக்கம் வலுப்பெற்று வளர்ந்தது. வாஞ்சிநாதன் போன்றோர் இவ் வியக்கத்தால் கவரப்பட்டதற்கான அரசியல் பின்னணியை நாம் அறிதல்வேண்டும்.

தமிழ்நாட்டில், வ. உ. சிதம்பரனுர் ஆங்கிலேயர்களுக்கு எதிராக 'சுதேசி கப்பல் கம்பெனி'யைத் தொடங்கி நடத்தினுர். 1901ஆம் ஆண்டு தூத்துக்குடியில் தொழிலாளர்களின் உரிமைக்காக 'கோரல் மில்' வேலைநிறுத்தத்தை முன்னின்று செயற்படுத்தினுர். (இந்தியா வில் முதன்முதலாக நடந்த அரசியல் சார்பான வேலைநிறுத்தம் இதுவே என்பது அறியத்தக்கது). சிதம்பரனுரும் அவரது நண்பர் சுப்பிரமணிய சிவாவும் நாட்டின் மூலைமுடுக்கெல்லாம் சென்று தம் வீரம் நிறைந்தபேச்சால் மக்களைத் தட்டி எழுப்பினர். உரிமையை மறந்து ஒடுங்கிக் கிடந்த மக்கள் வீறுகொண்டு விழித்த னர். சிதம்பரனுரையும் சிவாவையும் கண்டு ஆங்கில அரசு அச்சம் கொண்டது; இவர்களை வெளியே விட்டுவைக்கக்கூடாது என்று முடிவு செய்தது. திருநெல்வேலி மாவட்டத்தில் துணை ஆட்சியாள ராய் (டெபுடி கலெக்டர்) இருந்த ஆஷ் என்பார் ஓர் ஆதிக்க வெறியர். தேசிய இயக்கத்தை அடியோடு அழித்துவிட அவர் உறுதிபூண்டிருந்தார்.

இச்சமயத்தில் வங்காள மாநிலத்தில் ஒரு நிகழ்ச்சி நடந்தது. விபின் சந்திர பாலர் என்பார் தேசிய இயக்கத்தைச் சேர்ந்த் பெருந்தலைவர்களுள் ஒருவர்; மிகவும் தீவிரவாதி; நல்ல பேச்சாளர். ஒரு வழக்கில் ஆங்கில அரசுக்கு எதிராக அவர் சான்று கூறிய காரணத்தால் ஆறு மாதம் சிறைத்தண்டனை விதிக்கப்பட்டார். தண்டனை முடிந்து, 1908ஆம் ஆண்டு மார்ச் மாதம் விடுதலை பெற்ருர். விபின் சந்திர பாலர் எப்போது விடுதலையடைவார் என நாடே எதிர்நோக்கி நின்றது. அவர் விடுதலை பெற்று வெளியே வரும் நாளைத் திருநாளாகக் கொண்டாட நாட்டு மக்கள் விரும் பினர். திருநெல்வேலியில் இருந்த 'நெல்லைத் தேசாபிமான சங்க'த்தைச் சேர்ந்தவர்கள் அம்மாவட்டம் முழுதும், ஊர்தோறும் விழா நடத்த முடிவு செய்தனர். சிதம்பரனுரும் சிவாவும் முழு மூச்சாக வேலை செய்தனர். இதையறிந்த ஆங்கில அரசு சிதம் பரனுரையும் சிவாவையும் முன்கூட்டியே கைது செய்தது. கூட்டங் கள் நடத்தல் கூடாது என்று தடைவிதிக்கப்பட்டது; அவ்விதியை மீறியவர்கள் தண்டிக்கப்பட்டார்கள். கொடிய அடக்குமுறை கட்டவிழ்த்துவிடப்பட்டது. காவல் படையினரின் ஈவிரக்கமற்ற செயலால் நெல்லை மாவட்டம் முழுதும் போர்க்களமாய் மாறிப் பொலிவிழந்தது. சிதம்பரனுரும் சிவாவும் அரசுக்குத் துரோகம் செய்ததாய்க் குற்றம் சாட்டப்பட்டுச் சிறையில் தள்ளப்

பட்டார்கள். துணை ஆட்சியாளர் ஆஷ் தாம் எண்ணியதை முடித்துத் தருக்குற்று நின்றார். எரிகிற கொள்ளியில் எண்ணெய் வார்ப்பதுபோல் ஆங்கில அரசு இன்னொரு செயலையும் செய்தது. ஐந்தாம் ஜார்ஜ் மன்னரின் முடிசூட்டு விழாவை இந்தியாவில் மிகச் சிறப்பாகக் கொண்டாடுவது என்னும் முடிவே அது.

பொறுமைக்கும் எல்லை உண்டு அல்லவா? எத்தனை நாளைக்குச் சுதந்தர வேட்கையை அடக்கிவைக்க முடியும்? உணர்ச்சிமிக்க இந்திய நாட்டு இளைஞர்கள் இக்கொடுமைகளுக்கு எல்லாம் ஏதேனும் ஒரு முடிவு காணவேண்டும் என்று நினைத்தனர். நினைப்பு, செயலாக உருவெடுக்காமல் போகுமா? வாஞ்சிநாதனும் வெகுண்டெழுந்தார். அதன் விளைவாகவே நாட்டு மக்களை அதிர்ச்சிக்கு ஆளாக்கிய ஒரு செயல் நடந்தது.

1911ஆம் ஆண்டு ஜூன் மாதம் பதினேழாம் நாள்! துணை ஆட்சியாளர் ஆஷ் அன்று கோடைக்கானலை நோக்கிப் புகை வண்டியில் பயணம் செய்துகொண்டிருந்தார். மணியாச்சி நிலையத்தில் அப்புகைவண்டி நின்றது. அப்போது ஆங்கிலேயர்போல், மிடுக்காக உடை உடுத்திய ஓர் இளைஞர் ஆஷ் இருந்த பெட்டிக்குள் விரைந்து ஏறினார். அடுத்த நொடியில் துப்பாக்கி சுடும் ஓசை கேட்டது. ஆம், ஒடுக்கப்பட்ட அடிமை மக்களின் உள்ளக் குமுறலே போல் அந்த இளைஞரின் துப்பாக்கிக் குண்டு ஆஷ் உடலில் வேகமாக பாய்ந்தது. அவர் இறந்தார். அந்த இளைஞர் உடனே வண்டியில் இருந்த கழிவறைக்குள் நுழைந்தார். அதே துப்பாக்கியால் தம்மையும் சுட்டுக்கொண்டார். அனைத்தும் கனவுபோல் சில நொடிகளுக்குள் நடந்து முடிந்துவிட்டன. அந்த வீர இளைஞன் வேறு யாருமல்லர்; வாஞ்சிநாதனே. பாரத அன்னையின் விடுதலை வேள்வியில் வாஞ்சிநாதன் தம்மைப் பலியாக்கிக்கொண்டார்.

அவரது சட்டைப்பையில் இருந்த ஒரு கடிதமும் கண்டுபிடிக்கப் பட்டது. அது வாஞ்சிநாதனே கைப்பட எழுதியது. 'பிரிட்டிஷ் ஆட்சியை வெளியேற்றி, சுயராஜ்யத்தை நிறுவ ஒவ்வோர் இந்தியனும் உறுதிபூண்டிருக்கிறான். இராமன், கிருஷ்ணன், சிவாஜி, குரு கோவிந்த சிங் போன்ற வீரர்கள் ஆண்டுவந்த இப்புண்ணிய பூமியை அந்நியர் வந்து ஆட்சி புரியவும் முடிசூட்டிக் கொள்ளவும் மானமுள்ள எந்த இந்தியனும் மனம் ஒப்பமாட்டான். அதற்கு என் செயலே சான்று,' என்னும் பொருள்பட அக்கடிதம் எழுதப்பட்டிருந்தது. அக்கடிதத்துடன் இன்னொரு பத்திரிகைக் குறிப்பும் காணப்பட்டது. 'வந்தே மாதரம்' என்னும் இதழில் காமா என்னும் பெண்மணியால் எழுதப்பட்டிருந்த கட்டுரையின் பகுதி அது. இந்திய இளைஞர்கள் புரட்சிக்குத் தயாராகவேண்டும் என்று அக்கட்டுரை வலியுறுத்தியது.

காந்தியடிகள் போன்ற தேசியத் தலைவர்கள் இதுபோன்ற வன்முறைச் செயலில் இளைஞர்கள் ஈடுபடுவதை வெறுத்தனர்; கண்டித்தனர். இளைஞர்களின் சத்திய ஆவேசம் அவர்களது ஆணையையும் மீறி வெளிப்படவே செய்தது.

ஆங்கில அரசு வாளா இருக்குமா? ஆஷ் கொலைபற்றித் தீவிர மான புலன் விசாரணை செய்தது. பதினேரு பேர் கைது செய்யப் பட்டனர். நீதிமன்றத்தில் வழக்குத் தொடரப்பட்டது. எழுபத் தொன்பது நாள்கள் விசாரணை நடந்தது. புகழ்பெற்ற இவ்வழக் கில் நடுவர்களாக இருந்தோர் சர் அர்னல்டு ஒயிட், சங்கரன் நாயர், அய்லிங் ஆகிய மூவர். நீலகண்ட பிரமச்சாரி என்னும் இருபத்தேழு வயது இளைஞர் முதல் குற்றவாளியாகக் கருதப்பட் டார். அவருக்கு ஏழு ஆண்டுகள் கடுங்காவல் தண்டனை விதிக்கப் பட்டது. (தண்டனைக் காலம் முடிந்து பல ஆண்டுகளுக்கு பின், நீலகண்ட பிரமச்சாரி அரசியல் வாழ்வைத் துறந்து, ஆன்மிகத் துறையில் ஈடுபட்டார். இப்போது அவர் மைசூர் மாநிலத்தில் உள்ள நந்திமலையில் 'சுவாமி ஓம்கார்' என்னும் பெயருடன் துறவியாக வாழ்ந்துவருகிறார்).

இந்திய இளைஞர்கள் அன்பையும் அறத்தையும் போற்றி வாழ் பவர்கள். மறந்தும் பிறன் கேடு சூழாத மாண்புடையவர்கள். இன்னா செய்யாமை என்பதையே வாழ்க்கை ஒழுக்கமாக மேற் கொண்டவர்கள். வன்முறைச் செயலைக் கடிந்து ஒதுக்கும் பண் பாடு அவர்களுக்கு என்றும் உண்டு. திருவள்ளுவரும், புத்தரும், மகாவீரரும் பிறந்த நாட்டில் அன்புநெறிக்கு மாறானவை இருக்க இடமுண்டா? எனினும், வாஞ்சிநாதன் வன்முறையை விரும்பி ஏற்றார். காரணம் என்ன? அதுவே ஆங்கிலேய அரசின் பொறுக்க முடியாத கொடுமை! அடக்குமுறை! கொடுமை அதிகமாகும் போது புழுவும் போராடும்; புல்லும் வாளாகும்! பாரத மாதா வின் அடிமைத்தளைகளை அறுத்தெறிய இதனினும் சிறந்த வழி வேறில்லை என வாஞ்சிநாதன் நினைத்திருக்கவேண்டும்.

வீர வாஞ்சிநாதனின் புரட்சி உள்ளம்—தியாக உள்ளம்—நாட்டுக்காக உயிர்கொடுக்கும் தீர உள்ளம்—நன்றியோடு நினைந்து போற்றத்தக்கது அல்லவா?

## அருஞ்சொற்பொருள்

செந்நீர் - இரத்தம், வனம் - காடு, வலு - வலிமை, வீறு - வீரம், வேட்கை - தாகம், வாளா இருத்தல் - ஒன்றும் செய்யா திருத்தல், நடுவர்கள் - நீதிபதிகள், சூழாத - நினைத்துச் செய் யாத, மாண்பு - பெருமை, இன்னா செய்யாமை - துன்பம் செய் யாமை, கடிந்து - வெறுத்து, நெறி - வழி, தளை - விலங்கு.

### பயிற்சி

I. விடை எழுதுக:

1. வாஞ்சிநாதனைப்பற்றி நீவிர் அறியும் வாழ்க்கைக் குறிப்புகள் யாவை?
2. துப்பாக்கி சுடும் முறையை வாஞ்சிநாதன் யாரிடம் இருந்து கற்றுக்கொண்டார்?
3. வ. உ. சி.யின் தேசியப் பணிபற்றி நீவிர் அறிந்தவற்றை எழுதுக.
4. விபின் சந்திர பாலர் யார்? அவரைப்பற்றி நீவிர் அறிவன யாவை?
5. வாஞ்சிநாதனின் வீரச் செயலை விவரித்து எழுதுக.
6. வாஞ்சிநாதனின் கடிதத்தில் எழுதப்பட்டிருந்த செய்தி யாது?
7. 'ஆஷ்' கொலை வழக்கு எவ்வண்ணம் நடந்தது? முடிவு என்ன?
8. இந்திய நாட்டு இளைஞர்களின் பண்புகள் யாவை?

II. பிரித்து எழுதுக:

பெற்றிருக்கும், ஈவிரக்கமற்ற, வெகுண்டெழுந்தார், மானமுள்ள, எழுதப்பட்டிருந்த, அறுத்தெறிய.

III. சேர்த்தெழுதுக:

தட்டி + எழுப்பினர், மனம் + ஒப்பமாட்டான், கடிந்து + ஒதுக்கும்.

## 16. தீமைக்கு நன்மை

(நாடகம்)

[திரு. எஸ். முருகாநந்தம்]

### காட்சி—1

இடம் — தெரு ஓரம்
நேரம் — இரவு
நடிப்பவர் — வேலப்பன், கிழவி

**வேலப்பன்:** ஆ! அந்தோ! காடும் மேடும் நடந்து நடந்து கால்கள் தளர்ந்தன; கேட்டுக்கேட்டு நாவும் வறண்டது. ஆண்டவனே, பசி வயிற்றைக் கிள்ளுகிறதே! என் செய்வேன்!

(காற்றும் மழையும் கலந்து அடித்தல்).

*அப்பப்பா! என்ன காற்று! என்ன மழை! இந்த இரவு வேளையில் எங்கே போவேன்! வயிற்றுப் பசியை எவ்வாறு போக்குவேன்!*

**(தெருவில் நாய் குரைத்தல்)**

*தெய்வமே! நாய்களுக்கும் என்னைக் கண்டால் ஆத்திரமாக இருக்கிறதே! எனக்கு இனி இந்த உலகத்தில் இடமே இல்லையா! அம்மா! அப்பா! இதோ இந்தக் கல்மேடையிலேனும் தலையைச் சாய்க்கிறேன்.*

**(வழியில் கிழவி ஒருத்தி வருதல்)**

**கிழவி:** *தம்பி, நீ யாரப்பா? இங்கே என்ன செய்கிறாய்?*

**வேலப்பன்:** *பாட்டி, நான் ஒரு வழிப்போக்கன், அலைந்து அலைந்து பார்த்தேன்; உண்ண உணவும் இல்லை; படுக்க இடமும் இல்லை!*

**கிழவி:** *ஏன்? எங்கேயாவது சத்திரத்தில் தங்கக்கூடாதா?*

**வேலப்பன்:** *உணவு விடுதி, சத்திரம் எல்லாம் சென்றேன். காலை வைக்கக்கூடாது என்று விரட்டிவிட்டார்கள். நான் பெரிய பாவி.*

**கிழவி:** *என்னப்பா இது! யார் வீட்டிலேனும் சிறிது இடம் கேட்டுப்பார்க்கக்கூடாதா?*

**வேலப்பன்:** *பாட்டி, இந்தப் பாவிக்கு இரக்கம் காட்டுபவர் யார் இருக்கிறார்? வீடுவீடாய்ப் போனேன், எல்லாருமே என்னை விரட்டிவிட்டனர்.*

**கிழவி:** *அவர்கள் கிடக்கட்டும். இந்தத் தெருக்கோடியிலே அதோ ஒரு சிறிய மச்சு வீடு தெரிகிறதே அங்கே போய்க் கேட்டாயா?*

**வேலப்பன்:** *இல்லை பாட்டி! அந்த வீட்டிற்குப் போகவில்லை.*

**கிழவி:** *இல்லையா? அப்படியானால் உடனே போ.*

**வேலப்பன்:** *பாட்டி, நீங்கள் சொல்வது உண்மைதானா?*

**கிழவி:** *தம்பி, நான் என்ன பொய்யா சொல்கிறேன்?*

**வேலப்பன்:** *பாட்டி, தக்க சமயத்தில் வந்து வழிகாட்டியதற்கு நன்றி நவில்கிறேன். இதோ போய்ப் பார்க்கிறேன்.*

**கிழவி:** *நல்லது தம்பி.*

காட்சி—2

இடம் — அருளப்பர் வீடு

நேரம் — இரவு

நடிப்பவர் — அருளப்பர், சமையற்காரி வள்ளி, வேலப்பன்

வேலப்பன்: *(தணிந்த குரலில்)* ஐயா . . .! ஐயா . .

அருளப்பர்: யார் அங்கே? உள்ளே வரலாம்!
*(வேலப்பன் உள்ளே போதல், அருளப்பர் வேலப்பனை நோக்கி)*

வா! தம்பி, வா! நீ யார் தம்பி? ஏன் இவ்வளவு நடுக்கம்? அப்படியே அந்த நாற்காலியில் உட்கார்.

வேலப்பன்: ஐயா, என் பெயர் வேலப்பன். யான் பத்தொன்பது ஆண்டுகள் சிறையில் வாழ்ந்த ஒரு சிறைப்பறவை. இன்றுதான் விடுதலை ஆனேன்.

அருளப்பர்: பத்தொன்பது ஆண்டுகளா? உன் வாழ்க்கையிலேயே ஒரு பகுதியைச் சிறையில் கழித்துவிட்டாயே!

வேலப்பன்: எல்லாம் வறுமை தந்த பரிசு. உண்ண உணவும் உறங்க இடமும் தேடிப் பல இடங்களில் அலைந்தேன். இந்தத் திருடனுக்குப் புகலிடமே இல்லை . . . (தேம்புதல்).

மூதாட்டியார் ஒருவர் இந்த வீட்டிற்குச் செல்லுமாறு கூறினார். இங்கே எனக்கு உணவு கிடைக்குமா? உறங்க இடம் கிடைக்குமா?

அருளப்பர்: நல்லது அன்பரே. நீர் இங்கே தாராளமாகத் தங்கி இருக்கலாம். உணவும் கிடைக்கும்.

வேலப்பன்: ஐயா, நீங்கள் புண்ணியவான். இந்த இடத்துக்கு வழிகாட்டிய அந்தப் புண்ணியவதி நூறு ஆண்டுகள் நலமாக வாழவேண்டும்.

அருளப்பர்: *(கையைத்தட்டி)* வள்ளி, வள்ளி . . .

வள்ளி: இதோ வந்துவிட்டேன், ஐயா!

அருளப்பர்: வள்ளி, இவர் நம் விருந்தினர். இவருக்கும் ஓர் இலைபோட்டுச் சோறு பரிமாறு.

வேலப்பன்: ஐயா, உங்கள் அன்பே அன்பு. எல்லாரும் 'திருடன், திருடன்,' என்று பயந்து ஒதுக்கிய என்னை இவ்வளவு அன்போடு ஆதரிக்கிறீர்களே!

அருளப்பர்: வேலப்பரே, நீர் யாராய் இருந்தால் என்ன? நீர் முதலில் பசியாற்றிக்கொள்ளும். பின்னர்ப் பேசலாம்.

வேலப்பன்: பெருமானே, உங்கள் அன்பே என் பசியை ஒருவாறு தணித்துவிட்டது. உணவுக்கு என்ன வேண்டும்? நீங்கள் கேட்கும் தொகையைக் கொடுத்துவிடுவேன். நீங்கள் உணவு விடுதிக் காரர் என்றே நினைக்கிறேன்.

அருளப்பர்: இல்லை. நான் இல்லத் துறவியாக இங்கே வாழ்கிறேன்.

வேலப்பன்: ஐயா! நான் ஓர் அறிவிலி. தவறாக நினைத்துவிட்டேன். மன்னிக்கவேண்டும். என் கண்ணீர்க் கதையை சிறிது நேரம் கேட்கமாட்டீர்களா?

அருளப்பர்: அன்பரே, உமது துயர வரலாற்றைக் கூறவேண்டாம். முதலில் உணவு உண்டு அதோ அந்த அறையில் அமைதியாகப் படுத்து உறங்கும். காலையில் எழுந்து நீராடிச் சிற்றுண்டி உண்டு ஒரு கோப்பைப் பசும்பாலும் அருந்திப் புறப்படலாம். வாரும், சாப்பிடப் போவோம்.

வேலப்பன்: கற்பகத் தருவே, உங்கள் அன்புக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்! நன்றி கூறுகின்றேன்.

(இருவரும் உணவு உண்டு படுக்கைக்குச் செல்லுதல். வள்ளியும் அருளப்பரும் உறங்குதல். வேலப்பன் நள்ளிரவில் விழித்துக் கொள்ளுதல்)

வேலப்பன்: (தனக்குள்) ஆகா! என்ன அழகான தட்டு, வெள்ளித் தட்டு! இன்னும் எத்தனையோ வெள்ளிச் சாமான்கள். எல்லாவற்றையும் விற்றால் குறைந்தது ஆயிரம் ரூபாயாவது கிடைக்கும் (யோசித்தல்), சீச்சீ! என்ன நினைத்தேன்! உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்வதா! அன்னமிட்ட வீட்டிலே கன்னமிடப் பார்ப்பதா! கூடவே கூடாது. (மீண்டும் சிந்தித்தல்) அடடா! இதுதான் நல்ல சமயம்! இதை நழுவவிட்டுவிட்டால் நாளை நம்மை யார் காப்பாற்றுவார்? வீட்டில் அனைவரும் நன்றாக உறங்கிக்கொண்டிருக்கின்றனர். இதோ இந்த வெள்ளித் தட்டை மட்டுமாவது எடுத்துக்கொண்டு ஓடிப்போவேன். உம்! பாவமாவது! புண்ணியமாவது! யார் கண்டனர்?

(ஒரு வெள்ளித் தட்டைத் தூக்கிக்கொண்டு வேலப்பன் சாளரக் கதவைத் திறந்து மதிற்சுவரேறி மறைதல்)

## காட்சி—3

இடம் — அருளப்பர் இல்லம்

நேரம் — காலை

நடிப்பவர் — அருளப்பர், வள்ளி, வேலப்பன், காவலர்

வள்ளி: ஐயா! என்ன அநியாயம்! அறையில் இருந்த வெள்ளித் தட்டைக் காணவில்லையே! (அருளப்பரிடம் ஓடிவந்து) ஐயா! ஐயா!

அருளப்பர்: என்ன வள்ளி! என்ன நடந்தது?

வள்ளி: நம் வீட்டில் இருந்த வெள்ளித் தட்டுக் காணவில்லை. அதை இரவு இங்குத் தங்கியிருந்த திருடன் கொண்டுபோய் விட்டான். பாவி! துரோகி!

அருளப்பர்: அம்மா! அவனை ஏன் பழிக்கிறாய்? நாம் அந்தத் தட்டை இத்தனை நாள்களாக வைத்திருந்ததே தவறு. அஃது ஏழைகளுக்கு உரியது.

வள்ளி: ஐயா, இனி நீங்கள் எந்தத் தட்டில் சாப்பிடுவீர்கள் என்பதை நினைக்க நினைக்க வருத்தமாக இருக்கிறது.

அருளப்பர்: பெண்ணே, வெள்ளித் தட்டு இல்லையேல் இலையில் சாப்பிடலாகாதா?

(கதவைத் தட்டும் ஒலி கேட்டல்; வேலப்பனைப் பிடித்தவாறு ஊர்காவலர் உள்ளே நுழைதல்)

வள்ளி: ஐயா! வெள்ளித் தட்டுக் கிடைத்துவிட்டது! நேற்று இரவு நம் வீட்டில் உணவு உண்ட கள்வனை ஊர்காவலர் கையும் களவுமாகப் பிடித்துவருகிறார்.

அருளப்பர்: அப்படியா? வரட்டும்! வரட்டும்!

காவலர்: அருளப்பர் அவர்களே! இந்த ஆளிடம் உள்ள வெள்ளித் தட்டு உங்களுடையதுதானா, பாருங்கள். இவன் எங்களிடமிருந்து தப்பி ஓடப் பார்த்தான். நாங்கள் விடாமல் பிடித்து, இவனது மூட்டையை அவிழ்த்துப் பார்த்தோம். வெள்ளித் தட்டு ஒன்றைக் கண்டோம். நீங்களே இதை இவனுக்கு அன்பளிப்பாகக் கொடுத்ததாகக் கூறினான்.